கடவுள் துணை.

# அகஸ்தியர் பள்ளு.

இஃது

முன்னோர்களாற் செய்யப்பட்டது.

இதனை,

யூநாநி வைத்திய

தாருட்யவிர்த்திபோதினி முதலிய

பல வைத்திய சாஸ்திர கிரந்தகர்த்தாவாகிய

ஹக்கீம்

பா - முஹம்மது அப்துல்லா சாஹிபு

அவர்கள் இதற்குப்

பொழிப்புரை விளக்கத்தை

இயற்றிச்சேர்த்து அச்சிட்டினர்.



சென்னை:

முஸ்லிம் அபிமானி அச்சியந்திரசாலை.

FIRST EDITION.

1907ஸு

# விளம்பரம்.

இதனால் சகலருக்கும் தெரியப் படுத்துவது யாதெனில்:—“ அகஸ்தியர் பள்ளு மூலமும் பொழிப்புரை விளக்கமும்” என்ற இக்கிரந்தம் கஅசுஎ௵ (உ௫-வது) ஆக்டின் (உ0வது) பிரிவில் (சு-வது) விதியின் பிரகாரம் இங்கிலீஷ் இலாகாவாகிய மத்ராஸிலும்,

இன்னும் பிரான்சு இலாகாவாகிய புதுச்சேரியிலும், காரைக்காலிலும் காப்பிரைட் ரிஜிஸ்டர் செய்யப்பட்டிருக்கின்றது.

ஆகையால், இக்கிரந்தத்தையாவது அல்லது இதை வேறு பாஷையில் மொழிபெயர்த்தாவது, அல்லது, இதில் ஏதேனும் பாகத்தையாவது, என் உத்தரவின்றி ஒருவரும் அச்சிடலாகாது. அப்படி அச்சிட்டால், மேற்கண்ட ஆக்ட்டில் சொல்லியிருக்கிறபடி கோர்ட்டின் மூலமாய் அதனாலுண்டாகும் நஷ்டமனைத்தும் வசூல் செய்யப்படும்.

ஹக்கீம் - பா - முகம்மது அப்துல்லா



# விசேஷ விளம்பரம்.

எம்மால் அச்சிடப்பட்டிருக்கும் கிரந்தங்களின் டைட்டில் பேஜில் அடியிற் கண்டிருக்கின்ற என்னுடைய பெயர் எழுதப்பட்டிருக்கும். அவ்விதப் பெயர் எழுதப்படாத கிரந்தங்கள் மாறுபாடானவையாயிருக்கும்; ஆனதுபற்றி, அப்படிப்பட்ட கிரந்தங்களைக் கொண்டுவந்து கொடுக்குமவர்களுக்கும், அல்லது, அப்படிப்பட்ட கிரந்தங்களை வைத்து விற்பனை செய்யுமவர்களைக் காண்பிக்குமவர்களுக்கும் தக்க வெகுமதி கொடுக்கப்படும்.

☞ ஹக்கீம் - பா - முகம்மது அப்துல்லா.

கௌ. பக்கம்

பக்கம்.



அகஸ்தியர் பள்ளு இருநூற்றின்

அட்டவணை முற்றிற்று.



கடவுள் துணை

## அகஸ்தியர் பள்ளு இருநூற்றின்

# முகவுரை.

என்னரிய சுதேச வைத்தியர்களே! இரசவாதிகளே!

இந்த அபூர்வ கிரந்தத்தை அச்சிட்டு வெளிப்படுத்த நேரிட்ட காரணம் இன்னதெனப் பின்வருஞ் சங்கதிகளால் நன்கு விளங்கும்.

கடவுளினது கிருபையாலும் பெரியோர்களின் ஆசீர்வாதத்தாலும், பற்பல பண்டித சிரோன்மணிகளினது பேருதவியாலும் அடியேனா லியற்றப்பட்டவைகளும், வெளிப்படுத்தப் பட்டவைகளுமான யூநாநி தாருட்ய விர்த்திபோதினி முதல் இலக்க சௌமிய சாகரம் ஈறாகவுள்ள பல கிரந்தங்களையும் யாவரும் அங்கீகரித்து அவற்றிற் சொல்லப்பட் டிருக்கும் பல விதிகளையும், முறைகளையும், சிகிச்சாக் கிரமங்களையும் அநுஷ்டித்தும் உபயோகித்தும் நமது இராஜ அவுடத சாலையில் விற்கப்படும் பற்பல அவுடதங்களைக் கையாடியும் அளவிறந்த பிரயோசனங்களை யடைந்து ஆனந்தித்து வருவதைப் பற்பல கடித முகத்தாலும் பிறவாற்றாலும் எமக்கறிவித்து எம்மைப் பலவிதத்தாலும் ஆதரித்துக் கனப்படுத்தி வரும் பல கனதனவான்களின் கோரிக்கை யாவது:—

தற்காலத்தில் அச்சாகி வெளிவந் துலாவும் கிரந்தங்களில், வைத்திய முறைகள் இரசவாத முறைகள் ஆகியவைகளுள் முக்கியமாய இரசவாத முறைகளானவை பரிபாஷை யாகவும், மறைவாகவும், கரவாகவும், சொல்லப்பட் டிருக்கின்றன. சில கிரந்தங்களிலோ கூஷணவேதை, பரிசவேதை, மணிவேதை, அணிவேதை யெனச் சொல்லப்பட் டிருக்கின்றனவே யொழிய அவற்றால் பலனடைந்தவர்கள் சொற்பத்திலும் அதிக சொற்பமே யாம். இன்னும் அந்நூற்களில் எல்லோருக்கும் அரிதாகக் கிடைக்கக் கூடாத மூலிகை சம்பந்தமாகவும் யாவராலும் இலகுவாகச் செய்துகொள்ளக் கூடாத விதமாகவும் சொல்லப்பட் டிருப்பதால் பலருக்கு அவை பிரயோசனமற்றவைகளென்றே சொல்லக்கூடும். இன்னும் இவ்வித கிரந்தங்களைப் பார்த்தும்,பொய்வாதி, மைவாதி,மோசவாதி, வேஷவாதி முதலியவர்களின் மாயவலைக்குள் சிக்குண்டும், தாம் கஷ்டப்பட்டு சம்பாதித்த பொருளையும் அருமையான தன்னுயுளையும் வீணே செலவுசெய்து, பேராசை யென்னும் கண்ணியிற் சிக்கி மயங்கித் தியங்குகின்றவர்கள் பலராம். ஆகையால், மகா ரோகங்களான குஷ்ட முதலியவைகளுக்கும், மற்ற ரோகங்களுக்கும் இலகுவாக யாவரும் செய்துகொள்ளும்படியான பற்பலமுறைகளடங்கியதும்,இலகுவாகவும் சுலபமாகவும் கிடைக்கக் கூடிய வஸ்துக்களாற் செய்யக்கூடியவைகளும், யுக்தி, புக்தி, அநுபவம் முதலியவைகளுக்கு ஒத்த இரசவாத முறைகளடங்கியதுமான ஒருநூல் அடியேனால் வெளிப்படுத்தப்பட வேண்டு மென்பதேயாம்.

ஆனால்; அடியேன் அதற்குத் தகுதியுள்ளவ னல்லனாயினும் நமது நண்பர்களின் கோரிக்கையை அலமார்க்க வசமற்றவனாகி, இயன்றவரையில் முயற்சி செய்து, நமதிடமுள்ள பல ஏட்டுச் சுவடிகளைப் பரீக்ஷித்து வந்ததில் மேற்படி அகஸ்தியர் பள்ளு என்னும் நூலானது மேற்கண்ட அம்ஸங்களெல்லாம் அமையப்பெற்றதாகக் காணப்பட்டது.

ஆகையால், அதனை அச்சிட்டு வெளிப்படுத்தத் துணிந்தேன். மேலும் அந்த நூல் செய்யுளா யிருப்பதால், கற்றோர் மற்றோர் முதலிய எல்லோருக்கும் பிரயோசனப் படும்படி, அந்நூலிற்குப் பொழிப்புரை விளக்கம் என்னும் அநுபந்தத்தையும் சேர்த்து அச்சிட்டு வெளிப்படுத்தி யிருக்கின்றேன்.

இதில் பற்பல ரோகங்களுக்காம் நானாவகை அவுஷதப் பிரயோசங்களான புகைகள், ஆக்கிராணங்கள், சூரணங்கள், உசிதப் பிரயோகங்கள் முதலியவைகள் சொல்லப்பட் டிருக்கின்றன. இம்முறைகளுள் பல நமது பரம்பரையார்களுக்கும் அடியேனுக்கும் பலதடவைகள் அநுபவ சித்தியானவைகள். இன்னும் இரசவாதத்திற் காதியான துருசுச்செம்பு வகைகள், அயச்செம்பு, காரீயச்செம்பு, மிருதார் சிங்கிச்செம்பு, பித்தளைச்செம்பு, காக்கைப்பொன்செம்பு லிங்கச்செம்பு முதலியநானாவகைகள் சொல்லப்பட் டிருக்கின்றன. இம்முறைகளெல்லாம் இலகுவாகவும் சுலபமாகவும் கிடைக்கக்கூடிய கடைச்சரக்கு சம்பந்தமாகவே சொல்லப்பட் டிருக்கின்றன. கடினவேதை, பரிசவேதை யென "ஆகாயக்கோட்டைக் கட்டுவதுபோல" மற்றுஞ் சில

நூற்களிற்சொல்லப்பட் டிருப்பதுபோல், இதில்சொல் லப்படாமல், யுத்தி, புத்தி, அநுபவம் முதலியவைகளு க்கு ஒத்த விதமாகவும், இரசவாதம பொய் யென்ப வர்களும் இதனை ஏற்றுக்கொள்ளும் விதமாகவும் சொல்லப்பட் டிருக்கின்றன. வழிதுறை யின்றித் த ன்னுயுளையும் பொருளையும் செலவு செய்து முடிவில ஏமாந்துபோகும் முறைகளைப் போன்றவைகள்ளல்ல ன. இவற்றைக் கிரமப்படி செய்பவர்களுக்கு எவ்வித த்திலும் நஷ்டத்திற் கேதுவாகாமல் இலாபத்திற்கே யேதுவாகும். இதில் சொல்லப்பட் டிருக்கும் முறை களைக் கிரமப்படி செய்ய ஏலாதவர்களுக்கு இரசவா தம் ஒருபோதும் கைகூடாதென நிச்சயமாகச் சொல் லலாம். இரசவாதம் பொய்யெனச் சாதிக்கும் சாஸ் திரவாதிகளும் நம்பத்தக்க அறிகுறியான அருமையா ன நூல்.

இதிற் சொல்லப்பட்ட இரசவாத முறைகளுள் பலவும் நமக்கும் நமது சினேகிதர்களுள் பலருக்கும் அனுபவப்பட்டவைகளான படியால், இம்முறைகள் ஒவ்வொன்றையும் ஒன்றன் பின்னொன்றாகச் செய்து அதன் பயனையும் அதன் நுணுக்கங்களையும் லோகோ பகாரமாக நமது "சுகாதார போதினி" மூலமாக வெ ளிப்படுத்தும்படியும் நமது நண்பர்களுட் சிலரால் "இரசவாத சபை" என ஒரு சபையும் ஏற்பாடாகி வ ருகிறது.

ஆகையால், இகபர சுகங்களையும், தம் மினபந்து ஜனமித்திரர்களின் யோக க்ஷேமங்களையும் விரும்பும் சுதேசாபிமானமும் பரோபகாரமுமுள்ள ஒவ்வொரு

வர் கையிலும் இது அவசியம் இருக்கத் தக்கது. ஜீவ காருண்யமுள்ள ஒவ்வொருவரும் ஆனந்திக்கத் தக்கது. இது எவ்வளவு அருமையானதென இதனை வாசிக்கும் ஒவ்வொருவரும் தெரிந்துகொள்ளக் கூடியது.

ஆகையால், இதனைப் பேரன்புடன் கைக்கொண்டு ஆதியோடந்தமாகக் கவனித்து அதிலுள்ளபடி செய்து அனுபவிப்பவர்கள் கடவுளினது கிருபையால் மகா ரோகங்களினின்றும் தப்பித்து இகபர சுகானுபவங்களை யுடையவர்களாய் இம்மை மறுமைக்குரிய பயன்களை யடைந்து நீடூழி வாழ்வார்களாக. ஆமீன்.



அவையடக்கம்.

இந்த நூலானது ஏட்டுப் பிரதியிலிருந்து எழுதப்பட்ட படியாலும் மனித சுபாவத்தவறுதலினாலும் இந்நூல் அச்சிடும்போது நேரிட்ட பலவகை இடையூறுகளாலும் பலவித பிழைகள் நேரிட்டிருக்கலாம்; ஆகையால் அப்பிழைகளையும் மற்றப் பிழைகளையும் மன்னித்தருளும்படியாய் அவற்றைக் கவனிக்கும் கனவான் முதலிய எல்லோரையும் மிகவும் வணக்கமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு.

அ - பா - மு - அ.



உ

கடவுள் துணை.



## அகஸ்திய முனிவர் அருளிச் செய்த

# பள்ளு இருநூறு.



### தெய்வ வணக்கம்.

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

ஆதியென்ற சிவனுடைய பாதம் போற்றி
யருள்ஞான வேதியர்தம் பாதம் போற்றி
சோதியணி குண்டலிக்குள் வாழுஞ் சத்தி
தும்பிமதக் களிறுடைய பாதம் போற்றி
நீதியுடன் பாடிவைத்த சாத்தி ரத்தி
னிலையான வாயிரத்தி யறுநூற்றுக் குள்
ஓதியே யாராய்ந்து பள்ளு நூறு [தேனே
மூவந்துமே வயித்தியத்துக் குரைசெய்.

இதுவுமது.

ஆதிமுனி தானுரைத்த பள்ளு தன்னி
லன்பாக வயித்தியநூ ருய்ந்து சொல்லிக்
கோதில்லா வாதமது நூறு பாட்டாக் [ணம்
கொட்டினேன் செந்தூரங் களங்கு சுண
பாதிசேர் பாகமது தயிலப் போக்கும்
பண்பான புகையோடு மாக்கிரா ணந்தான்
வாதியா யிதையறிந்து செய்து கொண்டால்
வகையான வுலகத்தில் ஞானியாவீர்.

கோச்சகக்கலிப்பா.

மேவுங் கடல்சூழு மிக்க பொதிகைவளர்
காவு தமிழ்முனிவர் கருத்தி லுகந்ததுகாண்
தாவுரச வாதந் தாழ்ச்சிவ ராதபடி
ஆவலாக் கைபாக மடவாகச் சொல்லுவன்காண். (௩)

இதுவுமது.

பாகமாய்ப் பார்த்துப் பதிய ரசமிறுக்கி
யோகமாச் செய்தே யுறுதிரச வாதியர்கேள்
வாகமதை யெல்லாம் வடிவாகத் தான்சுருக்கித்
தாகமா யிருநூற்றிற் சாற்றினன்பார் வாதிகளே. (௪)

வணக்கம் முற்றிற்று.



தோடையம்.

ஏர்பொருந்திய சீர்ருந்துய
ரேற்குமருள்நெறி காக்குமாம்
ஏற்கும்வளர்கிரி துதிக்குமாமுனி
பிணிக்கவுடதம் படிக்கவே
ப்ருத்தரசவொழி யருந்தும்வெளியொளி
திருத்தியொளிதரு பள்ளிமேசர்
மறைக்குள்நாயகர் எவர்க்குநாயகர்
மனத்துள்வண்மையைப் படைக்கவே
ஆதிமறைமுனி நீதிபலநூலுஞ்
சோதியருளுடன் பாடினார்
அனைத்துமனதினி னினைந்தபடியரு
ளனைத்தும்வருமுயிர் கருத்துளே

நீலக்குங்கும வாசரென்குரு
நீதியந்திர சோதியாம்
நினைக்குமிரசவாத மனைத்தும்வருகவே
திருக்கைவேல் பதந் துதிக்கவே. (௫)

## காப்பு.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

காருலவும் பொதிகைவளர்கவிகள்பொழி
மாமுனிவர் கருணைகூர்ந்து
பேருலகிற் பண்டிதர்கள் பிழைக்குமருந்
தின்வாதம் பெருமை சொல்லித்
தாருலகில் ரசவாதம் பொன்செய்யும்
பாகமுதற் றடை யில்லாமல்
வாருலகிற் பள்ளு இருநூறுசொர்ச்சங்
கவியாக வாழ்த்தினேனே. (௧)

## (1)புண்ணுக்குத்திரி.

பள்ளு.

திருமால் தேவி கௌரி வெள்ளை
சித்திர மூலந் துத்தமுஞ்
சேருந்துருசி யூறுநாகங்
கணமுங்கண்டங் கத்திரி
தருவழுதலை சூதமோடு
கெந்தியுடனே விந்தையாய்
வாராய்முந்திரிப் பழமுந்தேசிச்
சிராய்ப்பழத்தின் சாற்றிலே
வெருகவரைத்துத் திரியாலூட்டி
வெண்பொற்பசுவி னெய்விட்டு

மிகும்பசும்புண்ணி லதனையும்வைத்து
மிகுதிரியனல் கொளுத்திட
அருகமூன்றரை நாட்கழித்தபின்
னருகா யொளிரும். வியாதியை
யாருமறிய நீராமூலகி
லறியச்சொல்வோம் பள்ளீரே. (எ)

பள்ளீரஞ்சரை நாளிற்கோட்டை
வெந்நீர்வார்த்து முழுகிடில்
பாரண்டமதி லோரண்டத்தெண்ணெய்
பத்தாநாள்வயல் நடவிலே
கள்ளிக்கிரந்தி புத்தனையமூ
கண்ணிலிங்கப் புத்தனைக்
கால்முடக்கனைக் கைமுடக்கனைக்
கரப்பனையரை யாப்பனை
வெள்ளைலிங்கப் புத்தனைவெளி
யுள்ளுலிங்கப் புத்தனை
விளக்குப்பள்ளி யுளப்பியடித்த
விதத்தைப்பாரு சினத்திலே
வெள்ளைப்பொதிகை யகத்தியமுனி
உள்ளதறிவி லுதித்தது
மிகுந்தசாஸ்திரப் புகையின்மகிமையை
கண்டசாஸ்திரம் பள்ளீரே. (அ)

## (2)பேதிமாத்திரை.

பச்சையிரதநாறு கெந்தி
பகர்ந்ததாரமு மிருவேலி
பாரிலுயர்வெண் காரங்கடுக்காய்
பசிந்தநெல்லி தான்றிக்காய்

இச்சையதிக சுக்குமிளகு
　　இனியதிப்பிலி சரிபதா
யெடுத்திங்கிதற்குப் பாதிவாள
　　மிணங்கச்சேர்த்துப் பொடித்ததிற்
கச்சக்கரிப்பன் சாறுவிட்டரை
　　கணக்குமுப்பது நாழிகை
கதித்தபயற்றிற் பாதிக்குளிகை
　　கட்டியேயனுப் பானங்கேள்
மெச்சமோரிற் கொடுக்கவயிறு
　　மிகவுமேற்று கழிச்சல்போம்
வேண்டுங்கரிப்பன் சாற்றிற்கொடுக்க
　　மிகவுங்கேளீர் பள்ளீரே. (௯)

பள்ளீரஞ்சரை நாளதிலிட்டுக்
　　கொள்வீருண்டை யிரண் டாகவே
பதித்தபித்த சுரங்களோடும்
　　பண்பாய்நொச்சியின் சாற்றிலே
விள்ளீர்வாத சுரங்களோடு
　　மிருந்தசர்க்கரை தனிலிட
மீறுசுரங்க ளாறுமேவலி
　　மிகுமுனிசொன்ன முறையிதே. (௧௦)

## (3) குஷ்டத்திற்குப் புகை.

சித்திரமான துத்தந்துருசு
　　சிறந்தவெள்ளை சிலையுடன்
சேருந்தார மூறுநாகஞ்
　　சிறந்தசாதி லிங்கமும்
முத்தரமான கடுகுதேனின்
　　மெழுகெருக்கின் கரியுடன்

மோவின்வகைக்குக் கள்ளுஞ்சிறெண்டு
மொன்றுக்கூட்டியதனுடன்
பக்குவமான கருத்தநாகம்
பண்பாக்களஞ்சி போட்டபின்
பாராய் பருத்திச் சாற்று லரைத்துப்
பாங்கா யேழுபில்லை செய்
தந்திரமாகப் புளியம் பொருக்கில்
தானே யேறும் புகையதால்
தளர்ந்த மெய்யி லொழிந்த நோயைத்
தயவாய்ச் சொல்லும் பள்ளீரே. (௧௧)

௱

பள்ளீரேமுறை யாம் பொழுதினில்
வெந்நீர் வார்த்து முழுகிடில்
பகர்ந்த குட்டங் கிரந்திப் புண்ணு
பாண்டும் புத்தரை யாப்புடன்
கொள்ளிக் கரப்பன் மெள்ள வுயர்ந்த
குன்மமான சூலையும்
கூட்டி யெழுந்த வாத மையங்
கொடிய தென்னும் பித்தமும்
மெள்ளக்குனிந்து பள்ளத் தாவு
மிருபத்தாம் வயல் நடவிலே
மீறியெழுந்த நோய்கள் கரிந்த
விதத்தைப் பாருஞ் சணத்திலே
உள்ளதறிவில் மிகுந்த ஞான
வள்ளல்பொதிகை யகஸ்தியன்
உரைத்தசாஸ்திரப் புகையின்மகிமைநீ
கண்டசாஸ்திரம் பள்ளீரே. (௧௨)

(4) இதுவும் புகை.

மிக்கதான பறங்கிவைப்பில்
மிகுந்தகார மதினுடன்
மேன்மையுடைய மிருதார்சிங்கி
வேண்டுங் கெந்தகமானதுந்
திக்கிலெழுந்த சீறியூர்ந்த
சிறந்தவரவின் கண்டமுந்
தேர்ந்தவகைக்குக் களஞ்சிமூன்று
சேரப்பொடித்துச் சீலையிற்
றெக்காயுருட்டித் திரியதாக்கித்
தோய்த்து வேப்பெண்ணெய்தன்னிலே
சுடரிற்காட்டக் கரிந்தநோயைச்
சுகமாகச்சொல்லுவோம்பன்னீரே
எக்காலத்துக் குஷ்டமுஞ்சனி
யெழுந்தபறங்கிச் சூலையும்
எதிர்த்தபாவை சூனிபமுத
லியல்பாயொழியு முலகரே. (கூ)

(5) இதுவும் புகை.

கண்ணுக்கிசைந்த ஸ்திரீகளுடனே
கலந்தமாயக் கலவியால்
கதித்துமேக மெழுந்துமெய்யிற்
கசிந்தபுண்ணுக் கிசைந்ததாய்ப்
பண்ணுக்கிசைந்த விரதமிரண்டு
பாஷாணமிரண்டு கூட்டியே
பகர்ந்ததுருசி துத்தம்லிங்கம்
பாங்காய்வகைக்குக் களஞ்சியும்

பெண்ணுக்கிசைந்த க்ஷாரங்களஞ்சி
பொடித்துமெள்ளத் திரட்டியே
புகழுங்கருத்த வங்கமும்ரசம்
பிளந்துசேர்த்து உருக்கியே
திண்ணமுடனே எருக்கின்கரியுஞ்
சேர்த்துமேனிச் சாற்றிலே
சிறக்கவிட்டே யரைத்தவுருண்டை
சேர்த்துப்பாரும் பள்ளீரே. (கச)

பத்திரண்டு அவ்வுருண்டை
பாகமாகத்தி ரட்டியே
பகலெழுபோ தேயுருண்டை
பாங்காயனலி லிட்டபின்
தள்ளிப்புகைகள் மெள்ளவெளியில்
தானேபோகா திரையிடு
தளிப்புண்ணுலரு மென்றுமுனிவர்
தமிழின்படிசொல் முறையிதே. (கரு)

## புகைபோடும் விவரம்.

கண்ணுக்கிசைந்த புகைகள்போடக்
கருத்தைக்கேளு மூலகரே
கருணையாகக் குளியைவெட்டிக்
கதித்தமெய்யைப் புதைத்தபின்
விண்ணுக்கிசைந்த சிரசைமேலே
விட்டுநடுவே மூட்டியே
விரவியேவளை விட்டம்போட்டு
விதமாய்மூடி மண்ணிடு
உண்ணுக்கிசைவாய் மூடிமுகத்தை
உள்ளேசாலக வரையிட்டு

உற்றுச்சரக்கைப் பாணியிலிட்டு
உண்மைதோண்டி கவிழ்த்துப்பின்
பண்ணுக்கிசைந்த பானைத்தாரில்
பக்குவமாகப் பொத்திடு
பதிவாய்த்துருத்தி யொன்றிட்டூது
பதிவாய்வேர்க்கும் பள்ளீரே. (கசு)

பள்ளீர்மூன்று நாட்புகைபோடப்
பதிவாநோயகன் றொழிந்திடும்
பதிவாயேழரை நாட்கழித்தபின்
படினங்கேளும் பள்ளீரே
கொள்ளிக்கரப்பன் மேகமூறல்
கூட்டியெழுந்த சூலையும்
கூடியெழுந்த நோய்களுமுதற்
குணமதாகு முலகரே. (கஎ)

(6) குழிப்புண் திரி.

மங்கையர்மோக வலைக்குள்விழுந்து
வருந்திமேக மெழுந்துதான்
வறண்டமூலந் திரண்டநீரில்
வருந்துபுண்ணுக் கிசைந்ததாங்
கொங்கையரையரை யாப்புப்புத்துக்
கொடியபவுத்திர மானதுங்
கொடியபுண்கள் புரைகள்போகக்
குறுமுனிசொன்ன தமிழிதே. (கஅ)

பாரும்லிங்க மிரதந்துருசி
பவளப்புற்று அதனுடன்
பகர்ந்ததுத்த மானகெந்தி
படிகமான சூடனும்

சீருஞ்சிங்கு கோலத்திடனே
சிறந்தசிலையுங் கூட்டியே
சேர்த்துப்பொடித்து வகைக்குக்கழஞ்சி
செறியக்கொள்ளும் பள்ளீரே
மேரில்வளரு மெழுகையுருக்கி
மிகுந்தபொடியை யதிலிடு
மிக்கசிறிய வடையதாக்கி
மிகுந்தகுளிப் புண்ணதிலிட
ஆருமறியப்போகு மற்றுமுண்
டானபுண்புரை மேகந்தான்
ஆருகுமெனமுன் முனிவர்தமிழி
லருளும்படியிம் முறையிதே. (கக)

(7) புற்றிப்புகை.

ஏற்றகரிய வங்கமிரண்டு
இசைந்தவிரத மவ்விடை
யெடுத்துவெள்ளைக் கெந்திதருசி
யிசைந்தசாதி லிங்கமுஞ்
சித்தமுடைய தாரஞ்சிங்கி
சிறந்தகரிய சீரகஞ்
சேர்த்துக்கடுகி னுடனேவெள்ளை
சேரவொன்றாய் வகையெல்லாம்
ஆத்தபொடியிற் பருத்திச்சாறுவிட்
டரைத்துருட்டி யெடுத்ததை
அன்பாயன்பது உருண்டைமுடிந்து
அனலில்மேகளும் பள்ளீரே

சாற்றப்புகைகண் டாலுமோடுஞ்
சைதன்னியப்புண்கள் கடுப்புத்துத்
தணியுமுனிவ ருரையின்படிக்கித்
தயவாய்கொள்வீ ருலகரே. (உ0)

(8) மண்டூரம்.

கதித்தவூசி பிடித்த காந்தங்
களஞ்சிபெட்டு அரைபொடி
கண்டாயவ்விடை யிரதமவ்விதங்
காணுங்கெந்தி சரியிடை
உதித்தவாளந் தோடுகழற்றி
யுகந்தகளஞ்சி யதனுடன்
உரைக்கக்கணக்குக் களஞ்சிரெண்டு
உயர்மிளகது சரியெடை
சொதித்தகடுக்காய் களஞ்சியிரண்டு
சொல்லும்நெல்லிப் பருப்பதுந்
தோய்த்தஇந்திடை சரியதாகச்
சுருட்டிமெள்ளப் பொடிபண்ண
மதித்தகருப்பஞ் சாறுவிட்டதை
மகிழுவரைத்துப் புடமிட
வாராய்வெள்ளையாம் பார்த்துநீயும்
சீராய்க்கொள்ளு பள்ளீரே. (உக)

பள்ளீர்தேனுடன் கொள்வீரஞ்சரைப்
பகல் பொழுதந்த பற்பத்தைத்
துள்ளியெழுந்த பித்தக்கரப்பான்
சொறிகரப்பனுஞ் சூலையுஞ்
சுரண்டபித்த சூலையானதுந்
தொலைவிப்புருதி கிரந்தியுங்

தொள்ளிக்கரப்பன் சேங்கரப்பனுங்
கூடியெழுந்த மேகமுங்
கொடியதான துடிகளடங்கிக்
குணமதாகு முலகரே
தள்ளிப்புனலை யறுத்தஞான
வள்ளல்பொதிகை யகஸ்தியர்
தமிழின்படியே யுரைசெய்தோ மிதைத்
தயவாய்க் கொள்வீருலகரே. (உஉ)

9. அயக்காந்த சேந்தூரம்.

தொந்தமுடைய காந்தமெட்டுத்
தூடியதாக வரைபொடி
தொடுத்தவகைமுந் நான்கினுடனே
சொல்வீர்காந்த மதனுடன்
அந்தமுடைய காரம்பொரித்து
அருண்டபொடியி னதிலிடு
அடங்கக்குமரிச் சாறுவிட்டதை
யாட்டிப்பார்க்கச் சிவப்பதாஞ்
சந்தமுடனே பேய்ச்சுரைக்காய்க்
குடுக்கைதனி லடைத்ததைச்
சொந்தமுடனே புளிப்புத் தவிர்த்துச்
சுகமா யேழுநாளினில்
தொடுத்துநோயை விடுத்துப்போடுஞ்
சொகுசைப்பாரும் பள்ளீரே. (உஙு)

கொள்வீர் பாண்டுசோகை யுடனே
கொடியகாச மீழையும்
குலைக்குமிரும லிரைப்புடன்மிகு
கூறிரத்த காசமும்

பள்ளிச்சுரமும் நடுக்கலுடனே
பாருமக்கினி மந்தமும்
பகர்காமாலை யதிகமான
பருத்ததோர்நீ ராமையுங்
மெள்ளக்குனிந்து பள்ளத்தாவு
மிகுபத்தாம்வயல் நடவிலே
மீறியெரிந்த நோய்கள்கரிந்த
விதத்தைப்பாரும் பள்ளீரே. (௨௪)

## 10. துத்திச் சூரணம்.

சித்தியாந்துத்தி தகரைவிதையுஞ்
சிறந்தநெல்லுப் பொரிகல்நார்
தீர்க்கமுடைய பேதிகூகைச்
சிறந்தநீரு மதனுடன்
சுத்தியாமதுர நாகப்பூவுந்
தொடர்வால்மிளகு வகையெல்லாம்
தொகுத்து இந்திடை வறுத்து இடித்துச்
சுகமாக்கேளும் பள்ளீரே
பத்தியதாயிதை யெடுத்து அரித்து
பண்பாய்ச் சீனி கற்கண்டு
பாகத்துடனே பொடிமுன் னிறக்கிப்
பண்பாச் சேர்த்து ஞெளட்டில்
அத்திநீர்ச் சொறி யுப்புமாங்கிஷ
மடைப்பதி மேகம் விடுமென
அன்பாய் முனிவர் தமிழின்படிக்கி
யுண்பீர் காணு முலகரே. (௨௫)

## 11 பிளவை வகைக்கு வெண்ணெய்.

சொல்லக்கேளும் பிளவை தனக்குச்
 சுருக்கதாகக் காரந் தான்
துருசுடனே சாரம் வெள்ளை
 தொகுத்த ஆவின் வெண்ணெயால்
கல்வந் தன்னிற் சாமம் நாலு
 கதிக்க வரைத்து வழித்ததைக்
கண்டாய்செப்பில் நன்று வைத்ததைக்
 கனத்து மீறி யெழுந்திடும்
வல்லுப்பிளவை நாற்பத்தெட்டி லும்
 வளரவே தூயில் தனிலிட
வறண்டிங் குருகி யிறண்டுபோன
 வளமை பாரும் பள்ளீரே
வெல்லுந்தமிழ்க்கு அகஸ்திய மாமுனி
 சொல்லும்படிக்கிவ் வயித்தியம்
மிகவுமகிழ்ந்து இருபொ ழுதிடத்
 தகமையாறு மூலகரே. (உசா)

## 12. மூலத்துக்குத் தைலம்.

மட்டிலிரதங் களஞ்சிநாலு
 வளருங்கெந்தி யதனிடை
வாழுங்காட்டு எருமைப்பாலை
 வார்த்தரைத்துச் சீலையில்
திட்டமுடனே தடவித்திரித்துச்
 சிறந்தநெய்விட் டெரித்ததைச்
சிவந்ததயில மிறக்கி யடியில்
 திரண்டமூல மதனிலே

சட்டமுடனடுவிரலிற் றேய்த்துத்
தடவிமூன்று பொழுதினில்
தளிருமுளைக ளுருகிக்கடிந்த
தயவைப்பாரும் பள்ளீரே
அட்டகரியுயர் பொதிகைவாழு
மகஸ்தியர்தமி ழின்படி
அதிகப்பண்டிதர் தெரிந்துசெய்திதை
யறிந்துபாரு முலககரே. (உஎ)

## 13. மலசல மடைப்புக்கு.

மிகுந்தவடையி லிருந்தவண்டம்
விரிந்ததோடு மதனுடன்
மிக்கவெலியின் புழுக்கையுடனே
வெள்ளைக்கோழிக் காரமும்
பகுந்தவகைக்கிக் களஞ்சியரையும்
பரப்பிப்பொடித்து எடுத்ததைப்
பாராய்வெள்ளரிக் காயைவெதுப்பு
பகுந்தசலத்தின் றன்னிலே
புகழ்ந்துகலக்கி யருந்தில்வயிறு
பெருத்தசலமு மலமுடன்
புரண்டுவெளியிற் றிரண்டுவந்திடும்
புதுமைபாரும் பள்ளீரே
மகிழ்ந்துமுனிவர் சிறந்ததமிழின்
வகையின்படியிம் முறையதை
வகுத்தபண்டிதர் தொகுத்துச்செய்து
வளமைபாரு முலககரே. (உஅ)

## 14. அயச் செம்பு.

உதித்தவயமும் வீரநேரே
யுறுதியாகச் சேர்த்துப்பின்
உகந்துகல்வத் திட்டுக்கடைநீ
ருண்மையாக விட்டரை
விதித்துளடுத்துக் கடத்திலடைத்து
வீதமாக மூடியே
வேறுசீலைமண் ணேழுசெய்து
விருப்பமாகவே யடுப்பில்வை
கதித்துளரிமுன் ஞன்குநாழிகை
கமலம்போல வெரித்தெடு
கண்டாயெரித்துப் பிரித்துப்பாரு
காரமாகவே யேறிடும்
சொதித்து அடியில் மேலிருந்ததைச்
சேர்த்துஒன்று யரைத்திடு
சுத்தக்கடைநீர் விட்டரைத்திடு
சிவப்பதாகும் பள்ளீரே. (உகூ)

பள்ளீரிப்படி யரைத்துநேரே
பதியத்துருசி தானிட்டுப்
பதிவாயரைத்துப் பில்லைதட்டியே
பதிவாய்ரவியிற் காயவை
துள்ளிக்கெஜத்தில் புடத்தில்வைத்துத்
தூக்கிக்காரங் காலதாய்த்
தொடுத்து அரைத்துக் குகையிலுருக்கு
துடியதாகவே செய்பதாம்

வளரிம்தியி லெட்டுக்கொண்டிடு
வகையதாக வேமத்தை
வடிவதாக வுருக்கியூதிடு
வாதயாரும் எழுமாம்
துள்ளுபுனலை யெடுத்துப்புசித்த
வள்ளல்பொதிகை யகஸ்தியர்
தூடியதான தமிழின்படியே
தொகுத்துச்சொன்ன முறையிதே. (௩௦)

## (15) துருசிச் செம்பு.

அடுத்தநீலன் களஞ்சிநாலு
ஆதிகெந்திமுக் காலதாம்
அன்பாய்ச்சூட னரைவிட்டுவீரம்
ஆனகடையின் னீர்விட்டுத்
தொடுத்துடனிரு சாமமாட்டித்
தொடுத்துத்துருசி மேலிட்டுச்
சுடியதாகவே சுண்ணமேலிடு
தொக்கவேபுடம் வைத்தெடு
கடுந்துமேபுடமிட்டு எடுத்துக்
காரிகாலிடு பாணியால்
கடுகியரைத்துக் குகையிலிட்டுநீ
காரமாக வுருக்கூது
படுத்துரவியாந் தகடடித்துநீ
பாகமாகப் பாருநீ
பதியரவியாம் பழுத்தநேர்மையைப்
பதிவாச்சொல்வோம் பன்னீரே. (௩௧)

சொல்லக்கேளும் ரவியினிடைக்கிச்
சுருக்கதாகவரை பொடி.
சொல்வீர்வீரங் காவிடைசேர்த்துத்
துருசுகூட்டி அரைத்திடு
மெள்ளப்புகைநீர் விட்டிங்கரைத்து
மெதுவாய்ரவியில் மேவிடு
மேன்மையாகவே ரவியிலிட்டிடு
மீளக்காட்டம் போட்டெடு
நல்லரவியில் ஏமம்போலாம்
நாடிமதியி லெட்டொன் றில்
நாடியுருக்கி யூதியேயெடு
நல்லஏமம் ஏழதாம்
வெல்லற்கரிய அகத்தியமாமுனி
விரும்பியுளத்தி லுதித்தது
விருப்பமுடனே பாகமாக
மிகவுஞ்செய்திடும் பள்ளீரே. (௱௨)

(16.) சகலமேகத்துக்கும் நெய்.

உச்சிதமான ஆட் டின்பால்தா
னுகந்துபடியொன் றதனிலே
யூட்டக்கருத்த தைலமதைத்தா
னுகந்துகலக்க வெண்ணெயாம்
மெச்சிதைவிடுத்துக் கனிந்தேயுருக்கி
மிகவுமாறு களஞ்சிதான்
மீண்டுபொடித்து அதனைக்கொடுத்து
மிகவேகலக்கத் திரண்டிடும்

வச்சிதைநெல்லியின் கனியிறுலொன்று
மகிழ்ந்துபத்துநாள் புகழ்ந்துண்ண
மாட்டிக்கிடக்கு நோய்கள்விடுத்த
வளமைகேளும் பள்ளீரே
நச்சிடுமேகநீ ரழிவுகாந்தல்
நயந்தவெலும்பை யுருக்கியும்
நளினமுடனே போமெனமுனி
நயந்தமொழியின் படிவிதே. (௩௩)

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

தொடுத்ததோர்பள்ளு நன்றுய்ச்
சொல்முறைதவறு வண்ண
மருத்துவமாகச் செய்ய
வளர்பிணியகன்று போகும்
பகுத்தநற் சரக்குக் கெல்லாம்
பகர்சுத்தி முறையாச் செய்து
மிகுத்தபா ருலகிற் செய்ய
மேன்மையாம் வயித்தி யோரே. (௩௪)

(17) இரச செந்தூரம்.

பள்ளு.

குதித்திடுரசம் பலமு மொன்று
கொடுத்தசங்க நீரதில்
கூட்டியரைப்பு நாளொன்றதனை
நீட்டியரவி முன்னிதே
மதித்திடவுலர்த் திப்பொடித்ததை
வளர்குப்பிதனிற் போட்டபின்

பட்கலமதில்மணலிட்டு வைத்தா
வளமையாக வெரிக்கவே
கதித்திடச்சாமங் கமலமாகவே
கருதியெடுக்கச் சிவப்புள
கடியசெந்தூரம் பணவிடையதை
முடிகித்தேனி லருந்திட
அதித்தேயேழுநாள் கொடுத்திடவே
அகன்றிடுங் குன்மவலியுமே
ஆற்றியேவிடுங் காணுல குள்ளோர்
போற்றுவ ராண்டே. (௧௫)

## (18) நவச்சார செந்தூரம்.

பள்ளு வேறு:

சாரியும்பலமாம் புகைநீரைச்
சரிவரவிட்டு அரைவறு
சாற்றிடு கடமே மூடி
யேத்திடுதிடமா த்தானும்
பாரினிலடுப்பி லெரித்திடு
பகரவேகமல மெரித்திடு
பத்தியேஏ றும்மிப்படிச்
சித்தியாயஞ்சு
வாரியாயெரித்து எடுத்திடு
வளமையாச்சிவந்தவயிறு
வலியு மோடிப்போம் வடிவுடன்
வளமை யாரசத்தில்

காரினிபோட்டுக் கரண்டியில்
கதிவுறக்கொதிக்க மதியதாங்
காத்திரமாகும் உலகுள்ளோர்
போற்றுவ ராண்டே. (கூஅ)

## (19) அயச் செந்தூரம்.

குமரியின்சோற் றிற்கடுக்காய்
குமரியினீராமதிலயங்
கூட்டியேதோய்ப்பு மிகுத்தனல்
காட்டியே தாக்கு
தமரிதளவீழுங் கண்டெடுத்
துத்துத்திமூலஞ் சேர்த்தரைத்து
தாக்கியேபழச் சாறுவிட்டதை
நோக்கியே அரைத்து
அமுரியினுடனே அதிர்ந்திட
அரைப்புநாளொன்று உலர்த்தியே
யாக்குவாய் புடந்தான்பத்துத்
தாக்குவாய் முழுஞ்சாண்
சிமிதியாட்டிடவே சிகப்பதா
மதுவினில் கொடுக்க வாதமும்
திகழ்பித்தபாண்டு வீக்கம்போம்
புகழ் பெற்றஆண்டே. (கூக)

## (20) வங்க பற்பம்.

கடுத்திடு வங்கமா வது
விரித்திடுநீரிற் பலமொன்று
கடுகியே யுருக்கி யிருபது
விடுவது நெருக்கி

வறுத்திடுநொறுங்கும் வேப்பிலை
கொடுத்திரிகடுகு நாலிடை
மாட்டியேபொடித்து வெருகடி
காட்டிருபதுநாள்
அடுத்திடும்பாண்டு சோகைநீ
ரொருத்தகாமாலை மாந்தையை
யமர்த்தியேவிடுங்கா ணவுடதஞ்
சுகத்ததீதாமே
உதித்திடுநோய்கள் இதற்குமுன்
னொதுங்குமேகாணும்
ஊண்டிடப்பேதம் வருமோ
கண்டறியாண்டே. (௩௮)

## (21) சுயமக்கினிச் செந்தூரம்.

அரபொடிகளஞ்சி பத்துரெண்
டதனுடன்காந்த
மாறி ரெண்டரிய கெந்தகம்
காலதி ரசமுஞ் சேர்த்து
விரவியே காரம்பொரித் தொக்க
வரைபழச்சாற்றால் சாமம்நீ
வேண்டியேமாட்டிக் குமட்டிச்சாறு
மீண்டதிலூட்டிப்
பரவியேமுன்போல் சாமம்
நாலதில்சிகப்பு காசிடை
பற்றியே மூரைநாளுண்டிட
முத்தியே தேனி

ஆரம்உள்ளசோகை பாண்டுநீ
 ரோட்டரையாப்புக் கவிசை
ஓட்டிவிடுங்காணிம்முறை
 கூட்டுவீராண்டே. (ருக)

(22) தாளகசெந்தூரம்.

முத்தியதாரம் பலமொன்று
 சுத்திசெய்தெடுத்து இலேக்கள்ளி
முடியுள்ளசாற்றில் நாளொன்று
 முடுகியேயரைத்துப்
பத்தியாயுலர்த்திக் குப்பியில்
 முத்தியாய்ச்செலுத்தி மணலிட்டுப்பு
பாகமாயெரிப்புக்கமலம்நால்
 சாமத்தின்முருக்கு
வெற்றி யாய்மலர்போல் சிவப்பதை
 சித்தியாய்பணத்தினிடை
மேவிடக்கூட்டி கொள்ளெட்டுப்
 போதினில்கேளு
மத்தியின்மேகங்குன்மங்கள
 கண்டிடும்பாண்டு பிரமேகம்
மாற்றியேவிடுங்கா ணிம்முறை
 சாற்றினேனாண்டே (ச0)

(23) அப்பிரேகச் செந்தூரம்.

எடுத்திடும்புகைநீரிற் பலமொன்று
 அடுத்திடுஞ்சூதம்
இடுரவிதன்னில்வைக்கப் பூத்திடு
 மிந்திலந்தன்னி

லடுத்திடுவீரங் காலிடை
விடுத்திடுங்கல்வம்
அப்பிரேகம்பலமொன்று நிறுத்து
அழுகாயிலகவே அரைத்துப்
கடுத்திடும்வெண்ணெய் போலவே
விடுத்திடும்புடத்தில் வைத்தெடு
காரமதாகு மினியென்ன
தாரமுமிடைசேர்
பொடித்திடுகல்வம் புகைநீர்
விடுத்தரைசாமம் உலரவை
புடத்தினிலிடவே சிவப்பதாம்
திடமது ஆண்டே. (௪௧)

பூத்திடும்ரசமும் அப்பிரேகம்
ஏத்திடுசிவப்பும் ரெண்டிடை
விரவியேயெடுத்துப் புகைநீரை
நிறையவே விட்டு
பார்த்தெடுபீங்கான் தனிலிடு
கோத்திடுஉமியின் நெருப்பினில்
பக்தியாய்வறுத்துக் குப்பியில்
முத்தியாய்ச் செலுத்தி
காத்திடுமேரு தனிலிட்டுக்
காற்றிடு எரிப்புக்
கமலம்போலெரித்துப் பனிரெண்டு
சாமத்தில் முருக்கு
போற்றிடுங்குப்பி யுடையெடு
சேர்த்திடுபீங்கான் தனிலிட்டுப்
புகைநீரைவிட்டு உமிதனில்
துகைவறு ஆண்டே. (௪௨)

சூலைகள் பலதும் இனியென
வாலையில்வாதம் என்பதுஞ்
சொக்கியேபோகும் வெட்டைகள்
திக்கென வேகும்

வேலையில் அடையுஞ் சயமுதல்
காலைநோய்கொள்ளைப் பிணிமுதல்
சிக்கெனவேகுந் துணிவதாந்
திக்கிலே யேகும்

வாலைபாமேனி துளிரது
போலவேயாகும் உலகினில்
வாசியுமோடும் சுழிமுனை
நாசியி லேறும்

ஆலைபோலாகும் உறுதியா
மாலைநோய்கொள்ளை யண்டாம
லாழியேவிடுங் காணிம்முறை
கூறினே னண்டே. (உக)

## (24) வங்க பற்பம்.

அருள் கருவங்க மாறிரண்
டதனுடன்சார முன்னரை
யாக்குநாலரை முன்
றாக்கியேசாரம்

பொருஅண்டத்தோடு எட்டுடன்
புகைகின்றநீறு களஞ்சிவை
பற்பமாம் போத வேஜலம்
விட்டதை எடுத்து

மருளவே யரைத்துக் கெஜபுடம்
வெருளவே யிடநீ
மாட்டுவாய்மநுவிற் பணவிடை
நீட்டுவாய் மேக

முருண்டதோர் குன்மத் தோஷங்கள்
மருள்கிட்ட வருமோ யிம்முறை
மூட்டிட நீதியால் பின்ஜெகஞ்
சூட்டுவா ராண்டே. (௨௪)

(25) மூலவாயு அடை.

வெட்டியே வெறுகங் கிழங்கது
கொட்டியே தேங்கா யிடை
வெண்ணை மீறியே யுள்ளிபடி
யொன்றுதேறியே யோம

மட்டுமுன்னிடையாங் காயமோ
வளர்மிகு களஞ்சி ரெண்டுடன்
மாயவே குறுவை மாவது
தூயபொடிய ரைக்கால்

தட்டியே சலமாய் விட்டதைத்
தளரவே பிசைந்து
தாக்கிடுவிளக் கெண்ணெயில்
காக்கிடு பொரிப்பூ

அட்டியாம் வாய்வு அக்கினி
யருள்மந்த மூல மிதுமுதல்
ஆற்றியே விடுங்கா ணுலகுள்ளோர்
போற்றுவீ ராண்டே. (௨௫)

(26) சூதகஜன்னி வலி முதலியவைகளுக்கு.

பொன்னிற மாதளமா மதில்
எண்ணியே களஞ்சி யெடு
பூட்டியே முலைப்பால் விட்டதில்
நாட்டியே யரைத்து

கன்னிகை யரையில் வலிமிக
மின்னிடை சிரசில் இன்னல்செய்
கனமுறு நலிக்கு நசியமு
மனமுற வியற்றி

உன்னியேபொருத்தித் தேய்த்திட
மின்னியசனி யானதும்
உயர்பரிவலியுங் கூனவே
யசர்முசல் வலியும்

பன்னிடுகசப்பாம் வேப்பெண்ணை
தன்னிலே வெந்து உடம்பிலே
போட்டிதைப்பிடிக்கத் தோஷம்போங்
கேட்டிடு மாண்டே. (௨௬)

(27.) தாம்பிர பற்பம்.

செம்பரபொடி தான் பலமொன்று
வெம்பும்வெள்ளுள்ளித் தயிலத்தில்
சேர்த்திருபதுநாட் போட்டபின்
பார்த்ததை யெடுத்து

அன்புடனடைபோல் ரவிதனில்
இன்பமாயுலர்த்திக் கோழுமை
யரிசியின்மாவில் வைத்ததை
எரியிடக் கேளு

இன்பத்துயிலினில் கட்டியதை
யெடுக்கக் கெட்டியா
மிதில்ரெண்டுசீலை மண்ணது
பதில்கொண்டு செய்து
பண்பதாய்முச்சாண் குழிவெட்டி
யின்பமாய்ப்போட வெள்ளையாம்
பார்த்திடுமேக மானதைத்
தீர்த்திடு மாண்டே. (௪எ)

(28) சயக்குலாந்தக ரசாயனம்.

துதித்திடுமேலஞ் சாதிக்காய்
கூடனேடதனிற் கிராம்பது
கூட்டியேவகைக்கிக் களஞ்சிரெண்
டேட்டி யேமிளகு
கதிக்கவேகளஞ்சி மூன்றுதிப்
பிலியு மஞ்சினுட
னுதித்தகனிசுக்கு நால் சீனியில்
ஏலங் கதிக்கவே
சொதிக்கவே யிடித்துத்தேன் விட்டுக்
கொள்ளவெப்போது மின்பமாய்க்
கொடுக்கக் குணமுட னின்பமா
யுரைக்கவே கேளு
கெதிக்கப்பின்னெழுந்த மேகமுன்
னுதிக்கின்றசயமு மிருமலுங்
கேட்டிடும்நீ ருலகினி
னாட்டுவீ ரான்டே (௪அ)

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

தங்கமெனும் பொதிகை வளர் ஞானமூர்த்தி
சாமிகுரு அகத்தியர்தன் றமிழையாய்ந்து
பொங்கமுட னுலகிலுள்ளோர் பிழைக்கவென்றுப்
புனிதமுட னீற்றினத்தைப் புகழ்ந்து பார்த்து
பங்கமது வாராமற் சரக்குக் கெல்லாம்
பகர்முறையாய்ச் சுத்திசெய்து பாக மாகச்
சங்கையுட னுலகிற்பண் டிதஞ்செய் வோர்க்குத்
தயவாக விம்முறையைச் சாற்றி னேமே. (உஅ)

(29.) ஆக்கிராணம்.

பள்ளு வேறு.

சந்தம்.

தெந்தின தெந்தினனா - தெந்தின
தெந்தின தெந்தின தெந்தினனா.

மட்டில்லா முட்டைச்சாம்பல் - பத்தாறு
வளங்கும் நல்லமிள கதுமூன்று
திட்டமாங்கருநாபி - நாலொன்று
சிறந்த காட்டில்வளர் மேதிப்பால்
சட்டமதா யரைத்துத் - தூளிதமாக்கித்
தளிரு நாசியிடை தனிலூத
விட்டிடுஞ் சன்னிதோஷ - மதுபோக
மிகவுநல்ல முறையிது வாண்டே. (௩௰)

(30) சுரத்துக்குப்புகை.

நீரில்வாழும்நலவா - மைத்தோடும்
நிறைந்தவெள் ளுள்ளி தன்தொலித்தோலு
பாரில்வாழ்பஞ்ச நக - நகத்தோடும் [ம்
பருத்தநோ ரண்டமென்ற சாக்கையிறகும்

சீருளா வுமெரு - முட்டைத்தீயில்
சிறக்கவோ ரிடையாக வேயெடுத்து
நேரிதை முகந்தனில் - புகையிடவும்
நீங்கியே சுரமொக்கப் போமாண்டே. ()

## (31) செம்புக் களங்கம்.

சித்தியாஞ் செம்பதில் நாலு - நிறுத்து
சிறக்க வெடிசீ னமுநேரே
பத்தியாக் குன்றியின் மணி - தானே
பசையாய்த்தானிடை சேர்த்துக்குழப்பி
கந்திடும் பெருவா யுட - னகத்தங்
கனக்கவேபச்சை தானேபிழிந்து
புத்தி யாகவே தானே - குழப்பிப் [டே
போக்குச்சொல்லு வேன்கேளுங்கா ணண்
செம்பு தனைத் தகடாகவே - யடித்துச்
சிக்கெனவே கரியோ டதிலிட்டு
வம்பலாக வேமே - லூதியூதி
வளமா யேழுதர முந்துவைத்து
அம்பு போலவே தான் - கட்டிப்போகு
மடவுட னிதுநல்ல முறையாகும்
கம்புதான் ரவிதா னிடை - தானே
கறுப்பிதாமெடுவீ ரமுமாண்டே. (௩௧)

வீரங் காவிடைதான் - புகைநீரை
விட்டுமே யரைசா மமுமொன்று
காரமாகக் கடந் தனிலே - மூடிக்
கனக்கவே யேழுசீலை மண்செய்து

பார மாகவே தானெரி - சாமமாந்
பத்திமே லேறுஞ்சித் தமதாகவே
வார மாகவே வழித்து - அயந்தனை
வாகாகச் சேர்த்தரையுங் காணுண்டே. ()

பத்தியோ டின்னந்தான் - புகைநீரைப்
பதிந்திடவே விட்டரைத் துப்பிழிந்து
சத்தியாக வேதான் ரவி - மேலே
தடவித்தான் ரவிதன்னி லேயிட்டுப்
புத்தியாய்க் கெஜந்தான் புட - மிட்டுப்
பொறுக்கவே யெடுசெம் பதுமேகட்டும்
சித்தியாய் மதியெட் டுக்கு - மொன்றிடு
சித்தமாய் மாற்று ஆறு காணுண்டே. (௩௫)

## (32) சுரத்திற்குப் புகை.

காட்டில்வாழ் கலை விட்டை - யுடனே
கனக மானமயி லின்னிறகுங்
கூட்டிலே வாழு மரவின் - சட்டை
குதிக்குந் தேசிக்குளம் பதுமொக்க
மாட்டில் வாங்கிவ ராகிக் - குளம்பு
வழங்குமெள் ளுள்ளித்தோ லும்மெழுகு
தேட்டுமிந் துப்பச் சோந்தி - ஓணன்புகை
சிறந்து காட்டச்சுர மோடுமாண்டே. ()

## (33) ஆக்கிராணம்.

பற்றியோ டிப்படரும் பேய்ப் - பீர்க்குப்
பருப்பு நாலுபல மதனோடே
சத்து நாவி பலமது - மொன்று
தனித்த நல்ல மிளகதி லொன்று

சுத்தி யம்மி தனிலிதை - யிட்டுச்
சுருட்டி நன்றாய்ப்பொடி செய்துதட்டி
யொத்த நாசி யிடைதனி - லூத
வோடுஞ் சன்னிசுரம் போகுமாண்டே. ()

இதுவுமது.

மேதிச் சாணஞ் சுட்டதோர் - சாம்பல்
மிகவு நல்லபல மொன்றெடுத்துச்
சோதி யான வெருக்கதின் - பாலில்
துவைத்துத் துவைத்து எழுதரமு
நீதி யான மிளகதின் - சாறு
நிலைக்க நாலிலொரு பங்குசேர்த்து
ஆதியா யிடை மூக்கினி - லூத
அதிக மேகசுர மோடுமாண்டே. (௩௮)

(34) நசியம்.

கொட்டை யெண்ணெய் மிளகதி - னோடே
குலாவு திப்பிலிபோட் டதிற்சேர்த்து
விட்டமாமிந் துள்ளி யுடனே - விளங்கு
மோரிடை யாகவே தானெடுத்து
திட்டமா வேலிப் பருத்திச் - சாறுஞ்
சிறந்த பாகலிலைச் சாற்றிலாட்டி
மட்டில்லாத நசிய மிடச் - சுரங்கள்
வாங்கியே போமிது மெய்யதாண்டே. ()

(35) பீனிசத்துக்கு நசியம்.

சாரமா குமிள குட - னிந்து
தனித்தசுக் குவிளங் கங்கஞ்சாவும்
வார மான பசுவி - னெய்தன்னில்
வழங்கவிட் டதைவெந்த பின்மூக்கில்

சேர்பிரண் டினும் விட்டிதை - பூந
நிறைந்த மண்டைவலி யநுமிற்கும்
பாரமல்ல நசியஞ் செய் - பீனிசம்
பறக்கு முண்மையிது நிசமாண்டே. (கூ0)

## (36) சன்னிக்குக் கலிக்கம்.

நெட்டியாய் வளர் வாகை - விதையும்
நிறைந்த சுக்குக்கடு குடனிந்து
மட்டில்லா மற்சமனது - கூட்டி
வழங்குமுருங்கைப் பட்டைச் சாற்றிலாட்
ஒட்டியே கயறு யதை -யாக்கி [டி
யுலர்த்தி நல்லபழச் சாற்றிலாட்டி
அட்டியாய்க் கண்ணி விட்டிடச் - சன்னி
அகலுங்கா ணிசமாகுங் காணுண்டே.(கூக)

## (37) கலிக்கம்.

ஏற்ற திப்பிலி யிந்தொடு - காயம்
இந்த நல்லமிள கதுமாமா
மாத்தளாது வாக - வெடுத்து
மதிலே வெண்ணெய்தனை விட்டரைத்து
சித்தமாம் பசுக் கோமியந் - தன்னிற்
சிறக்க மாட்டிக்கய றதுமாட்டி.
நாற்றம் பழச் சாற்றிவிடக் - கண்ணில்
நடுசன்னியெல்லா மோடுங்காணுண்டே.

## (38) குந்தத்துக்கு.

உற்ற தான்றி கடுக்காய்ப் - பருப்பு
முயர்ந்த சந்தம்பெருங் காயத்தோடு
பத்தமான திரி கடுகு - கொண்டு
பகர்ந்தகச் சோலைத்தோ டேயரைத்து

உற்ற நல்ல பழச்சாறு - விட்டு
உருட்டிக் கண்ணின்மூலைப் பாலிற்போட
சுற்றுப்புண் விடுங் குந்தமும் - நீங்குந்
துளங்குங் கண்காணிது நிசமாண்டே. ()

இதுவுமது.

பச்சை மஞ்சள் திரிகடு - கோடு
பகர்ந்த வுத்திரா க்ஷங்கூட்டி
இச்சை மூள்ளிப் பழச்சாற்றி - விட்டு
இசையவே நன்றாய் மசியவரைத்து
உச்சிதப் பழச் சாறு - தனைவிட்
டுருக்கக்கட் டிகண்ணி விடக்கேள்
கொச்சை நிம்பலச் சாற்றினி - விட்டிடக்
குந்தமது நீங்குங் குணமிதாண்டே. (கூச)

கோச்சகக் கலிப்பா.

சத்த சமுத்திரத்தைத் தானுண்ட மெய்ஞ்ஞான
முத்திமிகும் வேத முனிவர் தமி ழின்படிக்குப்
பத்தியுடன் பார்த்துப் பலநூல் முறையாக [னே.
வெற்றியுடனேமருந்து மேன்மைபெறக் கூறின ()

(39) பிள்ளை யுண்டாக எண்ணை.

பள்ளு வேறு.

உற்றபேய்க் குமட்டிவித்துச் சித்திரவாளமுங் கூட்டி
உரைப்பாய் குழித்தயில மிரக்கியே பின்பு
அத்தைக்காசினிடைதனில் பத்துமஞ்சட்பொடியிட்
அன்புடனே மூன்றுநாளு நம்பியே யுண்ண [டு

பற்றியவர்ய்வது சுற்றி மந்திய கெற்பமாய்
சித்துப்பா லுண்டா மென்று ஞானமீதிலே
சத்திய வாக்குமுனிவர் முத்தியாந்தமிழிற் சொன்ன
தன்மையை யறிந்துசெய்ய வுண்மை யாகுமே()

## (40) கஷாயம்.

பச்சைநெல்லி தான்றிக்கா யிச்சையிஞ்சி போட்டுரெ
படிஜலங் காலிலெரி துடியதாகவே [ண்டு
இச்சையாந் திரிகடுகுச் சூரணமென் பொடியிட்டு
யிசையமூன்று நாட் கொள்ள விசையதாகவே
கொச்சையரு சிலேப்பன மாமிளைப்புடன் காய்ச்சல்
கொடியசயத்தினோடுபிணிகள்போய்விடும்
மெச்சிப் பொதிகைமுனி யுச்சிதத் தமிழிற்சொன்ன
மேன்மையாம் படிக்கருத நோய்கள் தீருமே.

## (41.) கிராணி மூலத்துக்கு.

சாத்தியாய்த்துருக்கஞ் சாதிக் காய்குருசாணி யபின்
சதிராய்வகைக்கி பல முதிராமலே
ஆத்தித்தூளதி லெண்ணெ யூத்தியேபுன்னைக் கா
யாசுவகலா மண்டலங் கொள்ளவேகேளு
மேத்தியகிராணி மூல மிசைவயிற்றுவலி கடுப்பு
இரைச்சல்மூலத்தி னோவைக் கரைச்சேவிடுமே
சோத்தியமில்லாமல்முனி ஏத்தமாந்தமிழில்சொன்ன
துறையை யறிந்து செய்ய நிறைவாகுமே

## (42.) காதுமந்தத்துக்கு எண்ணெய்.

துண்டமுடனண்டி றைச்சிவெள் ளுள்ளிவசம்பு குக்கி
லதிகபூநாக மதா சரியதாகவே
கண்டதுகளஞ்சியெரி விண்டிடவேப்பெண் ணெய்யில்
காதில்விடப் பத்துநாளில் நீதி யாகவே
விண்டதுகேள் நீர்ப்பாய்ச்சல் பண்டுகுத்தலைச்சல் பு
வேரடைப்புக் காதிரைச்சல் மாறியேகிடும் [மூ
தண்டமிழ்தனில் முனிவர் நன்றதாமுறைப் படிக்கி
தகுதியாகவே யிம்முறைசெய் யிதமதாகுமே.

## (43) சாரச் சுண்ணம்.

பச்சைச்சாரம் பண்ணைநேரே யிச்சையாய்ப்பொடித்
பதியவேமூடி நீதா னீதி யாகவே [துக்கடம்
இச்சையாகச் சீலைமண்தான் மெச்சியே யிசைவாய்ச்
இன்பமாக மூன்றுசாம மன்பதாகவே (செய்து
மெச்சியேயெரித்து எடு உச்சிதமாகவே எரி
மேலேநின்ற பதங்கத்தைச் சாலவெடுத்து
நிச்சயமாக ச்சினத்தே மெச்சி யூதியே யெடு
நினைவாகக்கடுஞ் சுண்ணம் வினையதாகுமே. (௭௰)

உற்றகடுஞ் சுண்ணமதை யெத்தியபதங்க மிட்டு
உண்மைதானிடைக்கி அரை தண்மையாகவே
மெத்தவேவெண்கரு விட்டுச் சித்தமாயெருக்கின் பா
மேன்மையாகவே மூன்று நாளிலே முரியும்[வில்
வித்தகமாகவே விட்டரைத்துப் பத்தவேயெடு வில்லை
வேகமாக வூதியெடு பாகமாக வே [ரவி
பத்தவேகடுமை யாகும் நித்தமாவீரங் காணும்
பதியவேவிட்டு அரை சதி யதாகவே. (௭௧)

சாத்தியேயரைத்துத் தாரமேத்தியேகவச மிட்டு
சரியாகக் கிளிஞ்சி நீரிற் பிரியவேவைத்து
வாத்தியேயடுப்பு தனி லேத்தியேயூதிப் போடு
வழியோடேசாமம் ரெண்டு அழியாமலே
நாத்தியேபிரித்துப் பாரு நீற்றிடுந்தாளக நீறு
நானிலத்திற் சயகாசம் வீணிலே போகும் [றில்
பாத்திரமாந் தாளநீற்றைப் பார்த்திடுசெம்பு நூறொன்
பதியவேகொடுத் திடு நிதியதாகுமே. (எஉ)

சாத்திஅயச் செம்பிடைக்கி ஏத்திபேனொலிலொன்றே
தானுமுருக்கிப் பதமானசமயத்திலே
நேத்தியாய்த் தகடடித்துகாத்திரமா மவ்விடைக்கி
நினைவாகக்கெந்திவீரம் புனைகாலுடன்சேர்த்து
ஆத்தியேயரைத்துப் பூசிப் பார்த்தெடுபுட
மஞ்சினில் பதருமற்றனே தங்கமாகுமே
தூத்தியே யெட்டுக்குளொன்று பார்த்திடவயதுளட்டுத்
தொல்லுலகில் அகஸ்தியனார்மெல்லவே சொன்
[னார்

(41) சாரக்கட்டு.

சுத்தமுடன்கிளிஞ்சி நீறு பத்தவேயெடுத்துப் பாதி
சுட்டசட்டி தன்னிலிட்டு முட்டப்பரத்தி
பத்தகரியுப்புப் பொடி மெத்தவேபலமும் நாலு
பதிவாக வேபரத்தி அதின்மேற்போடு
சத்தவெடியுப்புப் பொடி நித்தம்பலமூன்று நிறு
சரியாகஅதின்மேலே பிரியமாய்த் தூவு
மெத்தக்காரசீனப்பொடி சித்தமாய்ப்பலமும்ரெண்டு
வீரமாகப்பொடித்துத் தூவுச் சாரமேலிடே.

சர்ரமதுபலம்ரெண்டு பாரமாக்கூட்டி வைத்துச்
சலமானசீனப்பொடி பலம்ரெண்டிடு
காரமானவெடியுப்பு பாரப்பொடிபலமூன்று
காதலாகமேலிலிடு பூதலத்திலே
வாரமானகல்லுப்பு சேரப்பொடித்துத்தூவு
வடிவானகிளிஞ்சிநீறு பலமுமேலிடு
கோரமாகஅடுப்பினிலே தூரமாபேற்று
குடிகொண்டுகமலமாகக் கடியுடனெரியே. (எரு)

எரித்திடுஇருசாமம் பிரித்தெடுசாரமதை
ஏற்குமேயுருகியிந்தபாருக்குள்ளேதான்
விரித்திடுகட்டு மதை சரித்தெடு சோரமேலே
வீத மாகப்போட்டிடப் பாதையாகுமே
சரித்திடுகாக மதைப் பரித்திடு அஞ்சு புகை
சரிவரக் கட்டுமது பரிவதாகுமே
தரித்துநீயெடு பாஷாண மெரித்த கௌரி முதல்
தனித்தனி யிப்படி யினி மிகுத் தேரியே. (எசு)

கட்டிடும் பாஷாணமுதல் தொட்டிடுவே தையுமாகும்
கருத்திலேபாக மதைப் பிரித்தேயெடு நீ
பட்டிடுநீ நாலுக்குச் சொட்டிடு சாமம்போல்
பதியதாகவே பாகமாய் விதி யதாகவே
தட்டிடுசெம்பு கேளு முட்டிடு கரியில் வைத்து
தூடியாகவூதி டுநீ முடியவே கேளும்
கட்டியே சீனமும் நேரே வெட்டிவெடிதா னுப்பு
தடையறக் கத்தநீ திட மதாகுமே. (எஎ)

விட்டுக்குழப்பிக்கொண்டு முட்டதாம்பூர விடை
வீதியே தோச்சிட்டு மிக ஊதி யெடுவே
கட்டுமேதாம் பூரமது விட்டுமே ஊறல்போகும்
காதிபெற விருபது ஊதி யுருக்கு
மட்டுமே நாகமதைத் திட்டமா யொன்று கொடு
மதியிடைதானே சேரு விதி யதாகவே
கட்டியாயிரண்டு பொத்துத் திட்டமாகப்பத்துமாகு
கருத்தினி லுகந்துமுனி வருத்தியே சொன்னார்.

சத்த சமுத்திரத்தைப் பத்தியாகவே யுண்ட
சரியான மாமுனிவர் பிரிவா யோதி
வித்தகரே ரசவாதி புத்தியிற் பட்டு இதை
வேண்டிய படிசெய்யாமல் தாண்டியே செய்து
பத்தியதாச் செய்தெடுத்துவிரித்துச் செலவு செய்து
பதிவான சுழிமுனைதான் கெதியும் பெறவே
சுத்தமாகத் தோய்த்தநிலை பெற்றுநின்று ஞானமதை
சூட்சமாகப் பார்த்திடவே மோக்ஷ மாகுமே.

(45) கெந்திச் செம்பு.

உத்தரவி னுலுபலம் பெற்றிடுகுகையி லிட்டு
உருக்கு மூனையதிலே பெருக்கக் கெந்தியும்
பத்தவே யிடைசமனாய் முத்தியே கிருசமிடு
பதிவாகத் தான்கரியாய் முதிருமே பாரு
சித்தமாய்வெங்காரிகாலாம் வித்தகமாயதைச்சேர்த்து
சிதறும லரைத்துமே பதறுமலே
புத்தியாயுருக்கியெடு சத்துவாகுஞ் சத்துக்காலில்
புக்கியேநீவீரமிட்டுத் தொக்கவேகேளே. (௯0)

அண்டனுரைபாணியாலே கண்டுமேசிவந்து நிற்கும்
அதுவேதைரெம்பவோடும் ஏதுவாகவே
கண்டரவிதானெடுத்து வுண்டபுளியிலைபோலே
காதலாகத் தானே அடி வேதையாகவே
கொண்டவெடி யுப்புளடு வண்டமானசீனம்நிறு
கோரமானகுன்றிமணி பாரமாஉரை
பண்டுமூன்றுமூன்றிடை கண்டதோரிடையு மாவி
பத்தியேகழுதையுட கத்தம்நீரிடே. (அக)

கத்தநீரைவிட்டுநீயும் பத்தவேகுழப்பிக் கொண்டு
கனிவாக ரவியைத்தான் இனியாகவே
பத்தவேகரியோ டதில் சித்தமாகக் காய்ச்சித்தோய்க்க
பத்மாகவேமூதரம் இதமாகவே
நித்தமாகவெட்டையாக முற்றவேநீதான் தோய்க்க
நிலவரவாகுமேமிக விலையாகுமே
முத்தமாரவித்தகட்டில் பத்தியாகவே அங்கி
முனிவுடன்கட்டிப்போடு தனியதாகுமே (அஉ)

கட்டியேபுடத்தில்வைக்க முட்டியேரவிநீர்த்து
கனகம்போ லாகுமிது இனமதாகவே
பட்டியாகப்பூசிப்பூசித் துட்டியாகஅஞ்சுபுடம்
பதிவாகப்போட்டெடுநீ கெதியதாகவே
வெட்டியாரவியெடைக்கிக் கட்டியானஏமஞ்சேர்த்து
வழியோடே எட்டுமதி சுழியாகவே
துட்டியாகரெண்டுசேரு கொட்டியேநீயூதிப்போட
துரிதமாஎட்டுமாகும் பரிசதாகுமே. (அங)

உற்றபரியேமம்மதை விற்றுச் செலவு செய்து
உறுதியாய்ஞானபோகம் பொறுமைபாய்ப்பாரு
உத்தமாய்ச்சிவயோகத்தை யெத்திசையும்பார்த்துவறி
உறுதியாய்ஞானவழி வருதியாகவே
மெத்தவேபொதிகைமுனி யுற்றசாஸ்திரப்படியே
மேன்மையாகப் பார்த்துணர்ந்து ஞானமாகவே
சித்தமாக வுலகத்தின் மொத்தமேவபிழைக்கச் சொன்ன
சித்திபெறத்தக்கவாத முத்திபாகவே. ()

## 46 பித்தளைச் செம்பு.

உற்றுமே யெடுத்துச்சேரு பித்தளைபலமு நாலு
உண்மையா யுருட்டித்துணி தன்மையா யிடு
மெத்தவே யுருட்டிக்கட்டி சித்தமாய்ப்பெரிபம்புடம்
மேன்மையாகப் போட்டெடுக்கத் தான்கரியதாம்.
சித்தமாகத் தான்கடைநீர் உற்றுஇதை விட்டுப்பார்க்க
சித்திபெற நீலநிற முத்தியே காணும் [ரு
வித்தகமாம் எட்டிலொன்று முத்தகமாய் நாத்தஞ்சே
வீரமொன்று சேர்த்திடவே காரமாகுமே. ()

ஆதியான பீங்கானிட்டுக் கோதியே யுமியில்வறு
அன்பதாக வில்லைபண்ணித் தென்ப தாகவே
வேதியா ரவியிலிடு கோதியே புடமுமொன்று [காண்
வித்தகமாய்ப் போட்டெடுக்கச் சித்தம் வேணுங்
சேதிகேளு காரங்காலம் போதிலேகல்வ மிட்டுச்
[காண்
சேர்த்தரைத்து மூசையிட்டுப் பார்த்துருக்குங்
கோதிலாதீ கடைமைபாகப்போதியே யூதிப் போடு
கோதையரே சுந்தரவி பாதையாகுமே.

சாத்திபே யெடுத்தூரவி போற்றியே யேமமும்மிட்டு
சரியா யுருக்கியெரி பிரிபாமலே [றுத்து
வாத்தியே நொறுக்குவெள்ளி பேத்தியெட்டுத் தானி
வழியோடே கொடுத்தூத வொளியாகுமே
பாத்திடவே மாற்றுஎட்டு ஏத்திடுஞ் செட்டி கையில்
பதிவாக விற்றிடவே நிதி யாகுமே
ஏத்திடு புனலையுண்ட காத்திரமா மகஸ்தியனார்
ஏதமறச் சொன்னதிது வேதையாகுமே. ()

## 47. வேடியுப்புத் திராவகம்.

உற்றதொரு பூநீரு பத்துப்பல முமெடு
உண்மையா யமுரியுரி தண்மையாய் விட்டு
மற்றதொரு படியொன்று சித்திரமாய்விட்டுக்காய்ச்சி
மகவேக மாகுமாநீ தகமையாய் வைத்து
சித்தமாக வுப்புவரும் வித்தகமாய்ப் பீங்கானிடு
சிதறுவுமி நெருப்பினிலே பதறுமல்வரு
சுத்தமகா வெடியபத்துச் சித்தமாகச் சினம்ரெட்டி
கருத்தாக அஞ்சுடனே நிறுத்துமெடுத்தே. ()

எடுத்துமேசட்டி யிடு அடுத்துமேவாலை மூடு
இதமாசத்தாயெரிக்க முதனீர்வறுநீ
தடுத்துமேதள்ளி யெடு கடுத்துக்கடைநீ பிடி
தண்மையாய்நஞ்சட் போ லுண்மையாகுமாம்
தொடுத்து அரக்குக்குப்பி எடுத்ததி லடைத்து
தொன்மைபெறச்சரக்கெல்லா நன்மையாயரைநீ
படுத்துமுன் காய்ச்சியிடுந் தொடுத்தபூநீருமிடை
பதிவானவீரம் இடை விதிபோலசேரே. ()

சேர்த்துமே பொடிக்கநீறும் பார்த்திடமஞ்சட்போலச்
சிக்கெனவே புகைநீரை மிக்கென விட்டு [குஞ்
காத்துமேபீங்கானிலிட்டு ஏத்தியேயுமியில்வறு
காரணமாத் தான்சுண்டப் பாரமாயெரி
பார்த்துமேவழித்துக்கடம் ஏத்திடவேதானுள்ளிட்டு
பதிவாய்க் கடத்தைமூடி யிதமாகச்சீலை
வேர்த்திடவேசீலையேழு சாத்திடவேசெய்துஎரி
விதமாகப்பத்துநாளில் அதமதாகுமே. (௬0)

ஏரவேபொரித்து எடு சாரவேவழித்து அடி
யின்பமாகநின்றதோடே அன்பமாயிட்டு
காரவேகடைநீர் விட்டுத் தூரவேவறுத்து எரி
கனிவாகஅஞ்சு தரம் இனிமையாயெரி
வாரவேயெடுத்துப் பாரு கூரவேசிவப்பு மாகும்
வடிவாகப்பண வெடை துடியாகவுண
வாரமானசூலைரோகங் கோரமானவாதமுதல்
வகையாயேழுரைநாளில் தொகையதாகுமே. ()

கத்தவாகத்தியமுனி சித்திரத்தமிழிற்சொல்லக்
கருத்தினிலுகந்த படி யுரைத்திடவே தான்
சித்தம்வைத்துவாதிமார்கள் வெற்றியாச்செய்துஜெய
சித்திபெறவீரமதைப் பற்றிச்செந்தூரி [ஞ்
குற்றமற்றரவிமேலே பத்தியாகவே கட்டிக்
குணமாகப்புடம்போடப் பணமதாகுமே
பத்தனும்புலத்தியற்கு மெத்தவேயுன்னி மலையப்
பதிமகாமுனி சொன்ன விதியுமானதே. (௬௩)

48 சூரத்துக் கஷாயம்.

சந்தனமிலாமிச்சைவெப் பாலைமுத்தக்காசுசுக்கு
சரியாகப் படியொன்று நீரதில்விட்டுச்
சிந்திடார்தெரிகாலதிற் சீனியிட் டருந்து
சிலதோஷஞ்சுர வாய்வு அகலாதவாதம்
தொந்தமாம் பித்தகாமாலை துடிகண்ணீர்க் கட்டுமினுந்
தொடர்ந்தநோயுள்ளதெலாங் கடந்துசென்றிஞ்
சொந்தமுனிவர் சொன்ன அந்தமாந் தமிழ்ப்படிக்கி
தொல்லுலகிலேகஷாயம் வெல்லும்பாருமே.

49. கண்ணுக்கு மாத்திரை.

காசுக்கட்டிபலமொன்று கழிப்பாக்குஅதில் பாதி
கண்ணுப்பீளைச்சாறுவிட்டுத் திண்ணமாகவே
ஆசுவாய்க்கலத் தூரிலிட்டு மாசில்லா மற்றுன்
அரைத்தியக் கயறத்தாக்கி மசியமாகவே
மாசிமாங்கண்குந்தம்வெள்ளை கூசிபேநீர்ப்பாய்ச்சலு
மகிழப்புளியிலைநீரில் அளவாயிடவே [க்கும்
பேசியவாய்மூடுமுன்பு வாசியாமென்றுமுனிவர்
பொங்கமாஞ்சாத்திரப்படி சங்கையாருமே.

50 கிராணிக்கு அடை.

உற்றவெந்தயஞ் சீரக மற்றபன்றிநெய் யதனில்
ஊட்டியேஜலத்தை விட்டு ஆட்டியேநன்றாய்
பத்தமாய்வெள்ளைக் கருவை மெத்தவேயதிலிட்டுப்
பாச்சியெடுத்தெண்ணெ யிதில் மாச்சிதையொக்க
வற்றவேயெரித்தடையாய் பத்தமாவெரித்துஉண்ண
வளர்ந்தகிராணியது பிளந்தேகிடும்
கற்றவர்பொதிகைமுனி யுற்றசாஸ்திரத்தின்படி
கண்டுசெய்யவிம்முறைதா னன்றதாகுமே.

51. காமாலை•பாண்டுக்கு.

வேறில்லாக்கரியவங்கங் கூறியபலமோரொன்று
மிக்கபசுங்கோமியத்திற் றெருக்கதாகவே
மாறியேயீரஞ்சுதரம் சீறியேசாய்த்திடுமதில்
வாய்த்ததிரிகடுகதுவும் நேர்த்தியாகவே
கூறியவேருகடி தேறியேரெண்டு நேரங்
கொள்ளவரட்சைகாமாலை யுள்ளபாண்டுமே
நாறியவிஷபாகம் வேரியசுவாசமுள
மாந்தைகளதிகபிணி தீர்ந்துபோகுமே.

51. (a) கவுசை ஜெயநீர்.

ஆனச்சீனக்காரமுடன் வெடியுப்புநவட்சாரம்
அரியவெங்காரநாலுஞ் சரியதாகவே
பானமாஞ்சாறுயம்விட்டு ஏனமாந்தூளதிற்சிப்பி
பற்றியெரித்தசுண்ண முற்றதிலாட்டி
தானமாஞ்செயநீர்தா னூறுமாங்காசிடையது
தாக்கிடக்கவிசைநோவு தீர்த்திடலாமே
தேனுலாவியபொதிகை ஞானமாமுனிவர்சொன்ன
செம்மையாஞ்சாத்திரப்படி யுண்மையாகுமே. ()

52 மூலக்கிராணிக்கு அடை.

மெத்தவேபிரண்டைத்தளிர் உற்றகுறுவையரிசி
மிகவேயிடித்துநன்றாய்த் தகமையாய்க்கேளும்
உற்றதொருரவியிற்காட்டி நத்திபவடையாய்மாட்டி
உகந்துவிளக்கெண்ணெயுநீ மகிழ்ந்திடவிட்டே
பற்றவேசுட்டடையுண்ணா வுற்றவுடம்புவீக்கம்
பதிந்தகிராணிமூல மிகழ்ந்தேகிடும்
முத்தியபசுமோர்சோறு நித்தமுமுண்ணென்று
முனிமொழியின்படிசெய்யக் குணமதாகுமே. ()

சந்த் விருத்தம்

சித்தி யாஞ்சக லகலைக் கியானமுந்
  தெளிந்து சிங்கப் பொதிகை மலைதனில்
பத்தி யாய்வரு கின்றத போதனர்
  பணிந்து போற்ற மிருந்து வளர்கின்ற
சத்திய வாக்குக்கு றுமுனி வேதநூல்
  சகல சிந்து புகழ்ந்திடப் பாடியே
வெற்றியாக வுலகினி லே நன்றாய்
  விளங்கப் பாடி யறிவிப்பார் பாருமே. (கூகூ)

## 53. சூதப்பிரயோகம் பள்ளுச் சிந்து வேறு.

ஏறளிஞ்சிப் பட்டைவெட்டிக் காயவைத்து—நல்ல
  இலுப்பைப்பூச் சலம்விட்டு ரவிபதில்வைத்து
சீறியே யிடித்ததனைத் தூளிதமாக்கி—ஞழித்
  தூளுக்கு ரசம்பலம் நாலதிற்சேர்த்து
வேறில்லை கற்சுண்ணம் காலதிற்றாற்று—குப்பை
  மேனிச்சாறு விட்டரைத்து வெல்லத்திலுண்ணு
காறலோ டிருமல்சு வாசகாசமும்—எலி
  கடியீளை குன்மம்கண் துடிகள்போமே. (க00)

## 54. கண்டாவிழ்தம்.

சித்திரமதுரமேலந் திப்பிலியக்கிரா—காரஞ்
  சிறந்தமுந்திரிப்பழ நிறைந்தபூரமும்
முத்திரவலம்புரிக்கா யிலுப்பைப்பூக்—கோரோசனை
  முடுகியநன்னாரி முத்தக்காசு
உத்திராக்ஷம்புத்திரநாங் கூழ்ப்பூச்சி—மஞ்சட்கரு[ல்
  உயர்சந்தனம்முசுறுமுட்டை சேரிஞ்சிச்சாற்றி
பற்றியரைத்தேமுலைப்பா லதிலுண்ண—வறட்சி
  பகர்ந்ததிரிதோஷங்காணு மொழிந்துபோமே.()

உற்றநொச்சியிலைதும்பை துளசிகஞ்சாங்—கோரை
உயர்ந்தகுப்பைமேனிசெருப் படிகையாலும்
மித்தபொடுதலைச்சாறு மிகுவசம்பு—சுக்கு
மிளகுதிப்பிலிகடுக்காய் வெள்ளுள்ளியிந்து
வத்தபெருங்காயமூன் றுஞ்சரியிடையதாய்க்-களஞ்சி
வகையாப்பிரமாணங் காலமேயுண்ண
சித்திரக்கடுகைகற்றிப் பத்தாறு—போதில்
செய்திடுகைகண்ட துண்மை மெய்யதுபோமே.

## 55. வெளிமூலத்துக்கு.

சீருலாவுகெந்தகமும் வெருதாரமும்—துத்தந்
துருசியுடன்லிங்கமது சரியிடைசேர்
பாரிதையெடுத்துக்கல்வ மீதினில்வைத்து—அரைக்க
பண்ணின தூள் தன்னில்நெய்பை யுண்ணவிட்டு
சேரும்வெளி மூலமதில் மீறியேதொட்டுப்—புளி
தீயனலரைநாழிகை காயவேபட்டு
நேருடன்விழுந்துவிடும் மாருமேகேட்டு—இது
நிச்சயம்புகழ்ந்துசெய்ய வுச்சிதங்காணும். ௧௦௫

## 58. கிரந்திப் புண்ணுக்கு.

வெள்ளியமுருங்கைபட்டை துள்ளியபலம்—ஒன்று
மீதினிற்காயங்களஞ்சி தானதிற்சேர்த்து[கூட்டி
அள்ளியபசுவின்வெண்ணெய் மெள்ளமுன்னிட்.
ஆர்க்கவே யரைத்துருட்டித் தீர்க்கமாகவே [கள்
கொள்ளவேயஞ்சாறுபோதுகிரந்திபுண்ணும்—புரை
கெட்டிடுமோர்விட்டு அன்னஞ்சட்டியிலுண்ணு
வள்ளலார்பொதிகைமுனி தெள்ளுதமிழிற்-சொன்ன
வாறிதன்படிக்கிக்கொள்ள மீருபோமே. (௧௦௭)

## 59. காசத்திக்கு நசியம்.

நான்முகன்களஞ்சிதாரம் நாலுபங்கிலே—யொன்று
நல்லமுலைப்பாலில்விட்டுச் சொல்லவேகேளும்
கானங்களாலத்தப்பால் முன்தானமாகவே-யதிற்
கலந்துநன்றாய்ரேகித்து மலந்துகொண்டுதான்
தானிதைமூக்கினிலூற்றி மூன்றுநேரம்—நிறுத்திடத்
தனித்தகலக்குத்துடனே துணித்தகாசமும்
வானமீதினிற்பறந்து நாணுதோடுமே—முனிவர்
வாக்கியப்படிக்குச்செய்த தாக்கிப்பாருமே. ()

## 60. விக்கலுக்கு.

சாம்பிராணி வெல்லமுடன் றானேசேர்த்து—நல்ல
சரியாயரைத்துருட்டி மிளகதுபோல
வாம்பிராணியேழுரைநாளுண்டபோது—வலி
வாயுவுடன் விக்கலது மாண்டுபோகும்
பாம்பிராணி விஷமெல்லாம் பற்றியேதாம்—பதி
பாதிமதியணிந்தவர் சொன்னநீதி
கோம்பொதிகையகஸ்தியர் பிழைக்கச்சொன்ன—நீதி
கொள்ளையாக வயித்தியங் கோடிதானே. (௧௦௬)

## 61. அப்பிரேகச் சுண்ணம்.

உற்றசீன மொருபல மூதியெடுத்துக்—கரி
உண்மையாக அப்பிரேக மணவிலொன்று
மெத்தெனவே வீரமதைச் சேர்த்தேயரைத்து—வில்லை
மேன்மையாகப் பிடித்தாக்கால்வெண்ணெய்
சித்தெனவே கரிவைத்து ஊதியெடுத்து—அதில்
சித்தமாகச் சீனச்சுண்ண மிசையவேசேர்த்து
கற்றவரே ஊதக்கடுஞ் சுண்ணமாகு—மிதைக்
கண்டுகொண்டு காளகத்தில் அங்கியூட்டே. (௧௦௭)

சிருலாவிய சுண்ணம் வேறுலாவிய—சட்டி
சித்திரமாய் நடுவிலே பத்திரத்துடன்
காருலாவி யேவைத்து வேறுஅனல்தீப்—போடு
கமலம்போ லெரித்திடு விமலனைப்பணி
பாருலாவிய பனிவேருமோரெண்டு—போடு
பதிவாகக் கொக்கிறகு நிதிபோலாகும்
சேருலாவியே காசம் வேறுலாவியே—பீழை
செயமாகப் போகுமுனி தனியேசொன்னார். ()

62. காரீயச் செம்பு.

நீலனும் பலமெடுத்து நின்றெடைநாற்றனு—சேரு
நிற்கவே யரைத்துச்சாமந் தொக்கவேகட்டி
ஆலகால மாகவே புடத்தைப்போடு—இது
அன்பதாக வெடுத்துமே சிங்கிகூட்டிக்
காலமாக வெட்டுக்கு ஒன்றுகூட்டி—ஊது
கனகம்போல் ரவியாகும் நொறுக்குவெள்ளி
சிலமாக எட்டுக்கு நாலுகூட்டி—யேமம்
சித்திபெறக் கொடுத்தூது முத்திகாணுண்டே.
முத்திபெற வேமத்தைப் புடத்தைப்போடு—காவி
முன்னிலையாய்த் தானிறங்கும் உப்புக்குத்தான்
சத்தியமாய்த் தாணிறங்கும் அண்டமாத்து—இனிச்
சரியாய் யோகமது துறந்திதுகாண்
சித்திபெற வகஸ்தியர் சொன்னநீதி—ஏமம்
சித்திபெற்று மூவுலகி லிருப்பதாகும்
பத்திப்தோ ரகஸ்தியர் பக்தமாகவே—சொன்ன
பரிவாக மாமுனிவர் விரிவாச்சொன்னார். (கருய)

63. சன்னிதோஷத்திற்கு நசியம்.

வுற்றநொச்சிக் கொழுந்தும்புங் கங்கொழுந்தும்—நல்
உறைப்பதா மிளகுள்ளி நிறைக்கவேகல்வில் [ல
பத்தவே நசுக்கியதை மெத்தவெள்ளைச்சீ—லையில்
பரப்பியே பிழிந்துசா றுறைப்புடன் கூசு
மெத்தவே அமுரியிந் திடையாய்ச் சேர்த்து—மூக்கில்
மேன்மையாய்ப் பிழியச்சன்னி கூசியே யோடும்
கற்றவர் பொதிகைமுனி யுற்றதமிழின்—படிக்கிக்
கண்டுசெய்ய வேதோஷங்க ளன் றுபோகுமே.()

64. திமிர்வாதத்துக்கு ஒற்றிடம்.

வட்டநொச்சி வேம்பிலையும் புங்கம்பட்டை—யுடனே
வளர்திருகு கள்ளிவேர் துளிற்கொத்தானும்
திட்டமாய் வறுத்துநன்றாய் வெள்ளைமண்ணுடன்-சே
திரமுட னுடம்பிலொற்று நலமதாயிட [ர்த்துத்
சட்டமாகுமாந் திமிர்வாதமேல் குத்து—மொழிகள்
தன்னிலத்தியே திரண்டநீரை யுண்ணுமே
மட்டில்லாத தமிழ்முனிவர் திட்டமாய்ச்சொன்ன-ப
மானிலத்திற் செய்பிணிகள் தானகலுமே. [டி

65. வாயுவுக்கு.

ஆதியாந் திப்பிலிகுரோ சானியோமமும்—நிறை
யாமான விராகனென் று நெய்படி காலில்
கோதில்லாம லேவறுத்து லேகியம்பாக்கு-நிறையாய்
கொண்டே யேழுபொழு துண்டுதான்பாரு
சோதிசேர் தமிழ்முனிவர் நீதியாய் நிலத்—தவர்க்குச்
சொன்னபடி செய்வாயுவை வெல்லும்பாருமே.
கைத்திடும் பூனைவணங்கி யுற்றதோர் பலம்—பத்தஞ்சு
கரிய சீரகமூன் று சரியாய்ச் சேர்த்து

உற்றதேர் தூளிதஞ்செய்து நறுநெயிற்-குழைத்து
உகந்தொரு மண்டலந் தொடர்ந்து கொள்ளவே
மெத்தவுஷ்ணரோகங்கள் நீரடைப்பும்—பிரமேகம்
மேலெரிவுகாந்தல்குன்மம் மூளையுருக்கி
தத்தியசதையடைப்புத்தாகமுடன் வாய்—நாத்தங்கள்
தணியுமுனிவர்வாக்குப் புனிதமாகவே. (கக௪)

கோச்சகக் கலிப்பா.

விண்ணுயர மேவுசொன்ன மிக்க பொதிகைவளர்
பண்ணு தமிழ்முனிவர் பாடுதமி ழூக்குவந்து
எண்ணு முலகிலுள்ளோர்க் கெதிர்த்தபிணியாமதனை
உண்ணும் படிக்கிமருந் துகந்தருளிச் செய்தனரே.

66. மிருதார் சிங்கிச்செம்பு.

பள்ளு.

ஏறுகின்ற நீலனது பலமுநாலு—கரி
இனமான ஓடுதனில் ஊதியெடுக்க
ஆறவே நிறமது வெள்ளையாகு—மீதில்
ஆதியான சித்தரூபி முக்காலெடு
காறவே பாணிவிட்டு அரைத்துக்கொண்டு--வில்லை
கனமாக வேபிடித்து ரவியிலிடு
மூறவே புடமிட்டு எடுத்துப்பாரு—கரி
முக்கியமாய்த் தானிருக்கும் மீறுமோபோமே.

சித்தியான கரிக்கிசீ பாதிசிங்கி—சேருஞ்
சித்தமாகப் பாணியாலே யரைத்துப் பில்லை
முத்திபெறப் புடமிட்டு எடுத்துக்கொள்ளு--கல்வம்
முக்கியமா யிட்டுக் காரங் காலதாகும்

வெற்றிபெற வரைத்துநீ குளிகையிலிட்டு—ஊத்
வித்தகமாய்த் தானுருக்க வுருகி நிற்கும்
பத்தியதாய்ச் சிவப்பென்ன முருக்குநிறம்—ரவி
பாகமாக வட்டுப்போல நிற்கும் போமோ.(ககள)

சீருலாவும் வட்டத்தைத் தானெடுத்துடை—நடு
சித்தமாக நின்றரவி தானெடுத்துப்
பாருலாவு ரவியிடை தங்கஞ்சேர்த்து—அடி
பாகமாகத் தகடாக்கிப் பூசவே கேளு
கோருநாற்றம் வாலைரசம் தானிடையுரம்—அரை
குணமாகத் தகட்டதின் மேலே பூசி
வாருடனே புடம்போடக் கரியதாகும்—தினம்
வடிவாக வெட்டிரண்டு சேர்த்துமே கொள்ளே

சேர்த்திடவே மதியேமம் எட்டதாகும்—இது
சித்திபெறப் புடத்துக்கு இறங்கும் பாரு
பார்த்திடவே ஞானவழி யடுத்துப்பாரு—நல்ல
பாதையாகு மோனமய மாகும் பாரு
கோத்திரமெல்லாம்பிழைப்புப் பார்த்திடுங்காணும்-மி
குணமான மாமுனிவர் அருளிச் செய்தார் [கு
சாற்றிடவே ஞானவான் றனக்குச்சொன்ன—நல்ல
சங்கையிது செய்திடுகை கண்ட தாமே. (ககக)

தங்கமில்லா ரசவாதந் தாளவுமாகும்—இதில்
தானே கெந்திசேராததால் வருண மில்லை
உங்களுக்குப்புத்தி சொன்னாற் கேட்கமாட்டீ—ரிது
உண்மையிது சத்தியமா யுரைறுப் பாரு

திங்களணி வேணியர் சொன்னவாதம்-இதைத்
திறமாகப் பாகப்படி செய்து கொண்டு
சங்கவரை கண்டதொரு மாமுனிவர்—சொன்ன
சரியான நீதியிது தெரியப் பாரே. (௧௨௦)

ஓதியறி வதுவேதம் நீதிகாணும்—ஆண்டே
உற்றுப்பாரு பாகமெலாஞ் சித்தத்தில் தோணும்
நீதியறிந் தேதெரிந்தால் ஞானமாகும்—வாதம்
நித்தமுந்தான் சோதித்தால் ஒன்று தோணும்
போதியறிந் தாலல்லோ மந்திரமாகும்—இது
போதமில் லாமலே தந்திர மாகும்
ஊதியறிந் தாலல்லோ வாதமாகும்—வாதம்
உற்றுமே பாராட்டால் ஒன்று மில்லையே. ()

## 67. கோறுக்கு வெள்ளி.

செம்புதனைப் புடம்போட்டெடுத்துக்கொள்ளு-இதை
செம்மையாக ஊதியெடு வெய்யோனாகும்
செம்புடனே நொறுங்கின வெள்ளிசேரு—கெந்தி
செப்பமாகத்தான் கெந்திமதியிடைசேரு
தம்பமாகக் கல்வமதிலிட்டுப் பொடித்துக்-கொஞ்சந்
தாக்கிடவே மதியூதி அதன் மேலிடு
வம்புடனே கரிபோலே வெட்டையாகும்—எடு
வாகுபெறநீ கடையில் வடிவ தாமே. (௧௨௨)

வடிவாக நீகடையில் வைத்துமேயூது—சூடு
வாகுபெறக் காரியம் இடையே சேரு
முடிவாக ஊதியெடு தந்தம்போல—நன்று
மூக்கச் சுடப் பசும் பொன்னைத் தக்கபடியே

நாடிவான செம்பெடுத்து இதிலேதாக்கு—ஊது
சுத்தமாகக் கனிமையா யூதிப் போடு
நெடிவாக ஓமத்தைப் பாதிசேரு—வாதம்
நொடிக்குமுன் வாதம்வரும் மெய்யிதுஆண்டே

ஊதுகிறவூதுதப்பில் பழுப்புமாகும்—இதில்
உற்றுமே ஓமத்தைக் கூடவேசேர்த்தால்
வாதுகிற பழுப்பாலே புடமிறங்கா—மட்டம்
வடிவாக ஆதியெடு மட்டஞ் சேர்த்தால்
சோதிமய மாகுமே புடமிறங்கும்—சித்திர
சித்தம்வைத்து இப்படியே செய்யு மார்க்கம்
சாதுவாக அகஸ்தியர் சொன்னநீதி—யிதைச்
சரிவர சோதித்தால் சரியா குமே. (கஉச)

சரியாகும்வெள்ளிதனில் ரவியைக்கூட்டி—ஊது
சல்தியாய்ப்பசுமைபோ லெடுத்துக்கொண்டு
பிரியாமல்ஏமமது பாதியிட்டு—ஊது
பெலக்குமேஅந்தமதி புடமிறங்கும்
விரியாமல்மூசைதன்னை யெடுத்துப்பாரு—இது
வித்தகமாய்ப்பொன்னாகும் எத்திசைமெய்க்கும்
துரிதமாயிந்தவித்தை சுழுவுமாகும்—இது
சூட்சமாகும்ஏமவித்தை நிலைக்குமாண்டே. ()

எட்டுமதிநாலுரவி சேர்த்துருக்கி—ஊது
இன்பமாகப்பசுமையா யெடுத்துக்கொண்டு
வட்டமாகத்தாளைத்தான் பாதிசேர்த்து—ஊது
வடிவாகமாற்றேழு காணுமேகாணும்

முட்டவேதா னருகுதான் கட்டியிறங்கும்—இது
முக்கியமாய்ச்செய்து பிழைஞானம்பாரு
அட்டதிக்கெல்லாம்புகழு மகத்தியனர்—எனக்
கருளியசொற்படிக்கிப் புகழ்ந்துசொன்னேன்.()

கோச்சகக் கலிப்பா.

அஷ்டதிசையும்புகழு மன்பா மகத்தியர்தான் [காண்
சட்டமாய் வாதமெல்லாஞ் சரியாகச் சொல்லினர்
விட்ட குறையிருந்தால் மேவும்ரச வாதம்வரும்
தொட்டசெய லாலே தொல்லுலகில் வாழ்வீர் காண்.

68. அயக்களங்கு பள்ளு.

உற்றவயந்தன்னிலிடை பெற்றிடுகெந்தி-இட்டு
உருக்கிபெடுத்துப்பின் னுறுக்கிக்காரம்
பற்றவேகொடுத்துருக்கு நித்தியமா—யுருகும்
பரிவாகஎடுத்துப்பார் விதிமணியாம்
சித்தமாகமணிமுக்கால் பெற்றிடுஞ்சிங்கி—யிட்டு
சிதறுமல்மணிக்கிக்கால் பதிவாய்வீரம்
நத்தியரைத்துச்சாமம்வித் தகமாய்நீல—னைத்தான்
நாடியேயுமிநெருப்பில் வாட்டியேயாண்டே.

வாட்டியெடுவெள்ளையாகுங் கூட்டிமுன்சரக்—கிடை
வடிவாகச்சேர்த்தரைத்து முடியக்கேளும் [த்து
கோட்டியேசெய்யாமலதைத் தாட்டிக்மாய்த்தா-னரை
குணமாகப்பாணியா சினமமைத்து
மூட்டியேயீரஞ்சுசாமம் ஊட்டியேவில்லை—கட்டி
முனிவர்காவியிடி தணியவேதான்
பாட்டிகமாய்க்காயவைத்துக் காட்டிபேசுண்ணச்—சீலை
பதிவாகச்செய்துபுடம் விதியாய்ப்போடே. ()

விதியாகப்போட்டெடுத்து நிதியாகக்காரங்—கூட்டி
விருப்பமாயுருக்கிடத் திருராவியாம்
கெதிபெறவேதானெடுத்து முதியனுறுக்கி-வெள்ளி
கேட்டிடவே பூட்டினு மூட்டிதைச்சேரு
பதியாகவூதியெடு சதியாப்பகமை—யாகும்
பற்றியெடுபாதியிடு சித்தியாயேமம்
நதியாகவூதியெடு கதிபெறவெட்ட—தாகும்
நத்தியேபொதிகைமுனி சித்தியாய்ச்சொன்னோர்.

சித்திபெறவுப்புக்குத்தான் மெத்தவேபருகு—கட்டுஞ்
ஜெகமெய்த்த தங்கமிது தகமையாம்பாரு
முத்திபெற்றமாமுனிவர் சத்தியவாக்காற்—சொன்ன
மேன்மையை யறிந்துசெய்யத் தாள்வுமாகுமோ
மெத்திடவேதங்கமாகுஞ் சித்தியாய்விற்றுச்-சோர்வு
விதமாக லொன்றுமில்லை அதமாகுமாம்
நித்தியவாசகர்சொன்ன மத்திமபாக-முறையை
நிலவர மாகச்செய்யப் புலனாகுமே. (கஙக)

## கோச்சகக்கலிப்பா.

சொன்ன பொதிகைவளர் சுருதிதனை யாராய்ந்து
பன்னுதமிழ் வாதமெலாம் பலனாகப் பாடினர்காண்
நன்னயமாய்ப் பாகமெலாம் நாடிமிகப் பார்த்துசெய
முன்னவே செய்தா லுறுதிகாண் மானிடரே. (கஙஉ)

## 69. இரசக்கட்டு. பள்ளு.

நிறுத்தடியோ சூதம் நிறுத்தடியோ பள்ளி
நேடஞ்சொல்லவேண்டாம் நிறுத்தடியோ
கறுத்தமுகில்வண்ணனைப் பேணியேநீத்தியெடு
கருத்தாகச்சூதமது கட்டிடுமோண்டே. (நிறு)

வங்கச்சுண்ணமும்பண்ணு வீழியோடெவீரமிடு
வகையாகக் குழைத்துமே நீலன்மேலிடு
துங்கமாய்க்கவுதாரித் துடியாய்ப்புடமுமிட்டுத்
துருசுதானீறிடும் அதியவேதை. (நிறு)

சீனச்சுண்ணமும்பண்ணு ஆனசாரமுங்கட்டு
சித்திபெறநாகத்தை முத்தியாற்கொல்லு
வானகமுந்தங்கமிடு கோனகமாகவுடைத்து
வடிவாகச்செந்தூரம் படியவேசெய்யே. (நிறு)

துருசுக்குட்செம்பைக்கொல்லு வரிசையாய்வாதமாகு
தொல்லுலகில்ரசவாத மெல்லவேயாகும்
கரிபோலேதுருசாலுற் புரியாவாதமுமாகும்
கற்றுவந்தால் பாகம்வருஞ் சித்தியாகுமே. (நிறு)

வாதத் திறவுகோலே சூதத்தாற் றுன்றிறந்து
வடிவாகப் பார்த்தாலே முடியு மைந்தும்
போதத்துடனேசெய்து நீதத்துடனெடுத்தாற்
புத்தியானவாதம்வருஞ் சித்திகாணுண்டே. (நிறு)

அண்டத்தோல்பலம்நாலு கண்டுஎடுத்து உவர்
ஆதியானசுண்ணம்நேரே பாணிலுவிட்டு
துண்டமாயெரித்திடண்டம் எண்ணெயைவாங்கும்
தொல்லுலகிலுதிட மெல்லவேகேளும் (நிறு)

சுண்ணத்தைவங்கத்தில்வின்னமாய்க்கொடுத்தூது
சுத்திபெறமேலதாகுந்தப்பிலாதெடு
வின்னமில்லாரவியைச் சொன்னபடிபோலடி
விருப்பமாயண்டச்சுண்ணம் பெருக்கமேலிட.

பெரியபுட மூன்றுபோடு பிரியப்பட வுருக்கு
பேத்திடுங் காண் களிம்பறு முத்தியுமாகுங்

திரியமாய் மதியெட்டில் வீரியவேரவி ரெண்டு
தொக்கவே சேர்த்திட மிக்க வேழுமாம் (௯௫)

## கோச்சகக் கலிப்பா.

ஆதி பொதிகைவள ரன்பா மகத்தியர் தான்
நீதியாய் வாதம் நிலவரமாய்ப் பாடினர் காண்
சோதி சகலகலை தொல்லுலகிற் சோதித்து
வாதிக்கச் சொன்ன வகையான வாதமுங் காண். ()

## 70 சீதபேதிக்கு. பள்ளு.

முத்தியாய்க்கடுக்காய் பலமொன்று
சுத்திசெய்தெடுத்து ரோகணி
மூடுகியேபலமாம் ஆவாரை
விடுகியே பலமாம்

வெற்றியாய்தட்டிச் சட்டியில்
சித்தியாய்க்கொட்டிப் பாணிநால்
விருப்பமாய் விட்டு எரித்திடு
குருக்கியே யொன்றாய்

புத்தியா யிருத்துக் கண்டிடை
பெற்றிடுந் தேங்காய்ப் பாலிடு
புதியவேசீனி பலமது
நிதிபெறக்கலந்து

நத்தியாயரைச்சேர் கொண்ட
நலமுளபேதி சீதமும்
நாடியேவிழுங்காண் சோகையும்
வாடிடு மாண்டே. (௯௬)

## 71. சகலரோக நிவாரண தோசை.

கதித்திடும்வாளம் பலமது
கருதியேயெடுத்துச் சட்டியில்
கரியதாய்க்கருக்கி யெடுத்திடு
பிரியமாய்க் கேளும்

விதித்திடும்விளக் கெண்ணெயில்
விருப்பமாய்ப்படியா மிதிலிடு
விரும்பியே யிடுநன்றாய்
வரும்பதந் தன்னில்

பதித்திடுங்குறுவை யரிசி
பாகமாயிடித்துத் தெள்ளியே
பதிவுடன்பாணி யதிலிடு
விதியதாய்க் குழப்பி

உதித்துடனெண்ணெய்ச் சட்டியில்
உண்மையாத் தடவி தோசைபோ
லுற்றுமேசுட்டுத் தினமுணு
நித்திய மாண்டே. (கசுசு)

மண்டலமருந்த வயிற்றினில்
மலமுடன்கிருமி யெடுபடும்
மயக்கமும்போகுந் திடப்படும்
நயத்திலே பதிவாம்

கண்டிடுங்குன்மஞ் சூலையுங்
கதிபெறுவாத நிர்முலம்
கனிபதோர்சுரமும் இதுமுதல்
இனிபவே யோடும்

பண்டிடும்பழைய நோய்முதல்
பதியவே பெட்டுக் காசமும்
பதிவுடன்போகு மிதில்
விதியுட னயமாய்

மண்டலந்தன்னில் மாமுனி
கண்டிடுநிலைபால் மதியிலே
மனமுடன்சொன்னார் இதுநல
வழியதா மாண்டே. (கஙௗ

## கோச்சக் கலிப்பா.

கன்னற்பொதிகை வள்ளல் கருத்தில்வைத்துமானிடர்
நன்னயமாய்ச் சுகபேதி நாடியே சொல்லிடவே [க்கு
பின்னைவே றில்லாமற் பிரியமாய்ச் செய்து கொடு
நன்னயமாப் பண்டிதமு நாடிப் பலித்திடுங்காண்.

## 72. தாளகக் கட்டு.

### பள்ளு சந்தம்.

தும்பையிலையை யரைத்துச் சிரட்டையில்தடவி
தொடுத்துநறுக்கி யதற்குள்வைத்திடு பெரிய
அம்பாய்மூடிக் கொண்டது நெருப்பிந்துநோக்கி
அதிக வப்புத்துரித மாகச் சரியாய்விடுவீரே.

கொம்பனுத்தஞ் சாற்றில் பண்விடையிதனை விட்டுக்
கொடுக்கவிஷம்போந் தகரைச்சாற்றினிலேயதிக
வம்பாந் தேமல்போகுங் குருவிச்சாற்றிற் கொடுக்கப்
மதியாமென முனிவர் மொழியிது வாகுமறிவீர்

வீரமுள்ள் வெள்ளறுகு சிரணைமுக் குராவும்
மிக்கசங்கு ஆமணக்கின் வேரதிக மான
வாரமுள்ள மாலைக்கும் மேகவகையெல்லாம்
வேறதாகவருத்திபலங் கொண்டிடித் துப்போடு
காரமிளகுசுக்குத்திப்பிலி மூன்பொடியினாடே [ம்
களஞ்சொன்றுசேரிது கைகண்டதாமே
பாரமெனச் சொல்வாத சூலையும் நீயறிவாய் [மே
பன்னுந் தமிழில் முனிவர் சொன்னதிறுவா

## 73. சகல சுரக் குளிகை.

கதித்தநாவி விராகனென்று கான்திப்பிலி யூஞ்சு
கனகலிங்க மணவுடன்சேர்த் துப்புதுமை யாக
மதித்தசலம் விட்டரைத்துச் சிறுபய றளவாக
மகிழ்ந்து நிழலிலுலர்த்தி யதை யினிமையான
துதித்தசீரகம் சலத்திலிடச்சுரமுந் தணிந்துபோகும்
தூலைந்துபோகுமென்றருமை யான கிரிதன்னி
லுதித்தகுறுமுனிதமிழின்படிக் கிப்பாரிலேதான்
உண்மையாயுரைத்தமுறை தனைத்தெரிகுவீரே.

## 74. அஷ்ட சுரக்குளிகை.

சுத்தவிரதங்கெந்திசாதிக் காய்பூரம் வாளம்
குமரிச்சாற்றினி விட்டுத்துரித முடனேதான்
பத்தவரைத்துக்கடிகையஞ்சி ரண்டுதனையெடுத்துப்,
பயறவ்விதம்முறையாக வாக்கியேவிடுத்து
முத்தக்கருப்புக்கட்டிதனிலிடச் சுரங்களெட்டும்
முறையுளபிணியகலு மென்றருமையான
சித்துக்கதிகமுனிவர்தமிழி லுரைத்தபடிக்கித்
தீர்க்கமிதுகண்டறிந்து பார்த்தியற்றுவீரே. ()

## 75. மாறல்சுரீஞ் சன்னிக்கு.

துடித்தவெள்ளைதாரம்லிங்க முஞ்சரியதாகத் [டை
தொகுத்தபாகல்மிதித்தசாற்றிலே யரைத்தவுண்
பிடித்தமிளகுதடிப்பதாகவே பசுமோரில்
பெருகவரைத்துக் கொடுக்கமாறல்போகுமறியே
முடித்தசீதசுரங்களது மோடுமென்றுமுன்பு
முனிவருரைத்ததமிழி லருமை யாகவேதான்
படித்தபடிக்கறிந்துசெய்திட தப்பாதுதானே
பாருங்குளிகையது நேரதுமாகுமே. (௧௪௫)

## 76. சன்னிவாத பஞ்சக்குளிகை.

கதித்தகெந்தகமிரதனுபியு வெங்காரமிளகு
கடிகைமுப்பதுசரியதாய்விட் டினிமையாக
மதித்தமத்தஞ்சாறனைப்ப தாங்குன்றிமணியிஞ்சி
வளர்சலந்தனிலிடுவெழுகாம் பிடியதாகக்
கொதித்தெழுந்திடும்வாதசன்னி தானீரஞ்சுன்று [யான
கொடுக்ககண்டதுதிடுக்கிட்டே குமென்றருமை
கதித்தமாமுனிசகத்திலவற்குத் தமிழினிற்சொன்ன
கனகமாம்பஞ்சக் குளிகையாகுந் தகுதியாகவே

## 77 சன்னிசுரத்துக்கு.

காட்டுக்கடுக்காய்நெல்லி தான்றிக்காய்நாவிரதங்
கனத்தகெந்திநேரதாம் வாளமூன்றுமாமே
பூட்டுஞ்சலத்தைவிட்டரைத் திடுசிறுபயறுக்கப்
புகழுமிஞ்சிதுளசிச்சாற்றினில் கொடுக்கக்கண்டு

மாட்டிக்கிடக்குஞ்சன்னி வாதமுறைகளாக
[மெஞ்ஞானம்
வளங்குஞ்சுரங்கள்தாகம்போய் விடுமோண
தேட்டுக்கதிகமாமுனிவர் தன்றமிழின் படிக்கிச்
செய்யவிம்முறை தானுமேமிகமெய்யதாகுமே.

## 78, சிந்தாமணிக் குளிகை.

சித்திரநாவியிரதங் காரமும்லிங்கத்திஞேடு
சிறக்கரெண்டிலுரைப்பதாகவேகாயந்திப்பிலி
மித்திரமாமென்றெருக்கின் பாலதிலரைத்துமிளகு
[போம்
முறையதாம்படிபருகும்பாலதில் கொடுச்சுரம்
தத்திரமாமிஞ்சிச்சாறு சீரகம்சுக்குநீரில் [யான
தயவாய்க்கொடுக்கில் பேசிடாதென்றுமருமை
உத்திரமாம்முனிதமிழின்படிக் கதைத்தெரிந்துசெய்ய
உயர்சிந்தாமணிக் குளிகையுமிது திறமதாகுமே.

## 79. சுர மாத்திரை:

கதித்தகாரங்களஞ்சிமூன்றுகால் நெருப்பில்வெந்த
கடியசுண்ணமுன்படியதாய் விட்டுப்பொடிசெய்
துதித்தசலத்திலரைத்துஉருட்டியே மிளகுபோல் [து
துவட்டிநிழலிலுலர்த்திமாட்டி யிளவெந்நீரில்
திரித்தமிளகுவருந்தியதிலிடு குளிகைரெண்டு [தனில்
செலுத்தச்சுரங்களலுத்துப் போமென்றேகிரிய
உதித்தமுனிவர் திருத்தமாகவே முன்னூலின்படிக்கி
உரைத்தவுண்டை செலுத்தியாருங்குணத்தைப்
பாருமே.

## 80 கருவங்கபற்பம்.

சித்துக்கரியவங்கமாமுடன் அண்டத்தோடு [றும்
தொடுத்தநீரிலரைத்துப் புடமிடவெளுத்துநீ
சித்துப்பணத்துவிடையதாகுமே நெய்யிற்றேனில்
[தஞ்சாறில்
சிறந்துகொடுக்கயிருமல்காசம் போம்பொழு
சத்தியுடனேமேகமானது மூலந்தவுடம்பிற்
. தாகமுடனேதேகமானதிற் சிறந்தநோவு
அற்றுவிடுமென்றகத்தியமுனி தமிழிற்சொன்ன
அதிகபற்ப முறையிதை யறியமூகதாகுமே.

## 81 வங்கச் சுண்ணம்.

வங்கந்தன்னைக்குகையிலிட்டிடு உருக்குமுகத்தில்
ஊளமாகத்தார மிடையதாக்கவேகேளு
துங்கமாகக்கரியாய்நொறுங்குமே எடுத்துக்கல்வங்
தொடுத்துஇட்டே அரைத்திடமெழுகாகும்
பங்கமாகவேஉயருஞ்சுண்ணம் நேரிட்டுச்சட்டியில்
பதிவாயண்டத்தோடு போட்டுமேயெடுக்கவே
சங்கமாகவேஎண்ணெய்காய்ச் சிடுங்கரியினேரிடு
சத்தியாகநீயுப்வெண்கருவையும் விட்டிடே.

விட்டுஅரைத்துக்கரியி லூதிடுவெள்ளையாகும்
விருப்பமாகவேஅஞ்சாறு மூதுஅரைத்துக்
கட்டுப்பட்டுமேஅதுநீறிக்கடுமையாயாகவஞ்சாறு
போதுபதமாயிடவுங் காசம்போய்விடுமே
துட்டுமேலேகவசங் கட்டிடுபுடமுமூன்றிட
துடியதாகக்குழம்புகட்டிடும் மதிவெட்டிலிட
கட்டுமேயுளயாற்றுஆறதாம் பொதிகைவாழுங்
கனகமாமுனிசொன்ன சொல்லிதுகாணுவாயே

## 82. துரிசுச் செம்பு.

துருசுதன்னையெடுத்துக் காலிடைக்காரஞ்சேர்த்து
தூக்கிமெள்ள குகையிலிட்டிடு உருக்கரவிபாம்
வரிசையாகப்பலம்நிறுத்து மேதகடுதட்டி
வகையதாகச் சீனமோரிடைசேர்த்துநீயுமே
பிரியமாகப்பருவமாகவே யிணங்கவோரிடை
பக்குவமாகக்கத்தநீரிடு குழப்பியேகொள்ளு
அருவமாய்க்குன்றி மணியுங் காலதாமுறைத்துக்குழ
தொக்கதாரவீதத்தினடை ஒக்கதாக்கிடு [ம்பு
காய்ச்சிக்கரியிலூற்றித் தோய்ச்சிடு வெட்டையாகவே
கட்டியரெண்டுபத்துத் தரமிடுயெடுத்துருக்கி
வாச்சிதைநல்லநூதி யுருக்கியே யுருக்குமுகத்தில்
வலுமையானபாணிவிட்டிட கொதிக்காமலே
பாச்சியிருக்குமெடுத்துத் தகடடிகாச்சிக்காச்சிப்
பதியஅடித்துச்செப்பக்கேளுமே ரவியினிடைக்
தாச்சிதூபரபொடியையெடுத்துமே வீரங்காலிடு [கி
தாக்குமிப்படிக்கடை நீர்விட்டிடே. (கருஉ)

விட்டுமரைநேர்சாமம் ரெண்டுமே விரைவிலரைத்து
விடுபட்டரவிமேலே வேகமாம்
கட்டிக்கெஜமாம்புடத்தில் வைத்திடு எடுத்துக்கவசம்
கருணைரவியையுருக்கிப் பார்த்திட எமம்போல
தொட்டுத்தகடையடித்துப் பாகமாய் தகடுநேரிடை
தூக்கிக்கெந்தகம் பொடித்துக் கல்வத்தில்
கட்டுமேகரிதன்னிற்பழுக்கவே காய்ச்சிக்கொண்டு
கனிவால்நாகத்தைமேல் வைத்துப்பார்த்திடே.

பார்த்திடக்கரி தூளாயாகிடும் எடுத்துநிறுத்து
பதிவாய்ச்சிங்கிதானேபாதியாம் அரைக்கக்கேளு
எட்டிடப்பாணிதன்னில்வாட்டியே வில்லைகட்டி
எடுத்துரவியி லுலரவைத்திடு
சத்திடப்புடம்போட்டு உருக்கிடக்காரங்கூட்டி
சரியாயுருக்கஏமமாகிடும் நொறுக்குவெள்ளியில்
செத்திடஎட்டுநாலுரவியதாம் ஏமம்நாலு
சேர்த்துஊதஎட்டுமாத்துமாம். (கருச)

உப்புக்காவிக்குந் தானிறங்கிடும் உரைக்கிநல்ல
ஒத்திடுமாற்றும்பத்துமாகுமாம்
அப்புக்கடலையுண்ட மாமுனியகஸ்தியர்தானும் [ன்ன
ஆதிநூல்களையாய்ந்துபார்த்துமே சுருக்கிச்சொ
செப்பினேன்பள்ளில்செம்புபாகத்தி லதிலேசொன்
[னதைச்
சோதித்தறிந்தால் வாதமாகிடும் பாகமாகத்
தப்பிதமாகப்பார்த்துப் பொய்யென்று உலகிற்சொன்
சவுங்கல்வாதியைநம்பவேண்டாமே. (கருரு) [ன

## கோச்சகக் கலிப்பா.

அன்னமிசைந் தாடு மன்பாய்ப் பொதிகைமுனி
தன்னை நினைந்து தயவாக முத்தமிழால்
இன்னிசையாய்ப் பாதி யிசைவான வாதமெலாம்
தன்னிலே சொல்லித் தயவாய்ப் புலம்பினர்காண்.

## பள்ளு.

### 83. அயத்துருசு செம்பு. சந்தம்.

தெந்தினத்தினனுத்தினனத் தெந்தினத்தினனுதினனு
தெந்தினத்தினனுத்தினனத் தெந்தினத்தினனு.

உற்றவயந்தன்னி டைக்கி மெத்தரவிசேர் - நல்ல
ஓங்கிய ரவியிடைக்கிக் காரிசேர்த்திட
மெத்தெனவுருக்கிக் கொள்ள சத்தவெங்காரி-கூட்டி
மேன்மைபெற வூதநல்ல உண்மைரவியாம்
முத்தெனவே யூதியெடு வைத்திடேஎமமு-நேரே
மேன்மை யாகத்தானேதக டாகவடித்து
குற்றமில்லா ஞற்றம் சேர்த்திடு சூதமும் - கேரே
குணமாகத் தான்மசியச் சினமாயரையே (கடுசு)

அரைத்துத்த கட்டின்மேலே அன்பாய்ப்பூசியே-புடம்
ஆகமூன் றுபுட மிட்டு ஆறியெடுத்து
முரைத்துமே பார்த்திடக்கருப் பாகுமாம்-அடி
முத்திபெற மிருதாரு சிங்கி காலதாம்
விரைத்து அரைத்து எடுவில்லை கட்டியே-ரவி
விதமாகப் புடமிட்டு உருக்கி யெடுத்து
பரைத்துமேரவி யாகு மிந்தச்செம்பு-நல்ல
பரிதிபோலக் காணு மருதாருப் பள்ளி. (கடுஎ)

பள்ளிரவி சொல்லவந்தா யிந்தச் செம்பை-மதி
பத்துநாலு சேர்த்திடவே யேமமாகுமே
துள்ளியிந்தப் பாகமுந் தெரியும்படி-கள்ளன்
தூக்கத்திற் சயிக்கினைகள் காட்டுவா னடி
கள்ளியேயுன் ரசவாத மெய்யாமடி-பாகங்
கருக்குரு வறிந்தாலே பொன்னு மடி
வள்ளலார் பொதிகைவளர் மாமுனிவர் சொன்ன
வாதம்வகையானபாக மாய்ந்துசெய்யடி. (கடுஅ)

## 81. தருசு செம்பு.

துகையாகச் செய்யச்சொன்ன மூத்தபள்ளி-அடி
துடித்துமே சொல்லாதே மார்க்கமல்லடி
வகையான கண்ட ரதுபலம் நாலெடு-நாற்றய்
வகையானமூக்காற் பலந்தானேயெடுத்து
பகையாகரெண்டுஞ்சேர்த்து அரைத்துச்சாமம்-வில்லை
பதிவாகக் கட்டிநீ ரவிபுடமிடு
நகையாநீ எடுத்துநீ பார்த்துக் கொள்ளு-கடி
நாடியே மிருதாரு சிங்கியுங் கூட்டே. (கரு௬)

கூட்டியே கரியிடைக்கிக் காலதாகும் அரை
கூட்டி வில்லைரவிதனில் காயவைத்தடி
போட்டிடுப் புடம்போட்டு காரங்கூட்டி-நல்ல
புதுக்குகை தன்னில்வைத்து உருக்கித் திரு
பாட்டியே ரவியாகு மிந்தச் செம்பை-மதி
பதிவாய்நொறுக்கு வெள்ளியெடுபலமடி
போட்டியாய்க் கொடுத்தாதி யேமமாதி-சேர்த்துக்
கொடுமையாக வூதியெடு ஆறுவயதாம் (கசு0)

ஆறுவயதென்று சொன்ன மருதூருப் பள்ளி-ரவி
ஆடிஎடை யேமஞ்சேர்த்து உருக்கிக்கொண்டு
கூறுநாத்த மிரதமு மிடையே சேரு-இதில்
கூட்டிடு குமரியின்பால் விட்டரைத்து
வேறுடனே தகட்டின்மேற் பூசிப்பூசிப்-புடம்
வேறுபட மூன்றுபுடம் வைக்கக்கரியாம்
மாறுசொல்லாதே நொறுக்குவெள்ளி பத்திற்-குக்கிட
மாசிலாவெட்டுவய தாகுமே அடி. (கசுக)

கோச்சகக் கலிப்பா.

ஆதிசிவன் சொன்ன அடவான வாதமதில்
சோதிபெறப் பாகமதைச் செய்து மதைப்பார்த்து
நீதிபெற வேயுலகம் நேரான யோகியர்க்குச்
சோதிபெறமுத்தபள்ளி சொல்லினள்காண்சூரணமே

85. கருங்கோழிச் சூரணம்.

தாரங்கெந்தக மோமங்கடுகு
தருமசத்துரு திரிபலை
சாதிப்பத்திரி யேலமுடனே
சாதிக்காய்சவுக் காரமும்
சீரகந்திரிகடுகு சாதி
லிங்கமுங் கருஞ்சீரகம்
சிவதைமூலங் கடுகுரோகணி
சேர்குளவிந்த மொடுபொரிக்
காரமுங்குருசாணி கல்மதங்
கல்நார்கார்போ கரிசியுங்
கரியுப்புடன்கல் லுப்புவளையல்
காய்ச்சுப்பு நவச்சாரமும்
நேர்வாளமபின் மல்லிஉலுவா
நிறையு மகலப்பூவுட
னிவ்வளயத்துட னின்னமருந்து
தன்னைக்கேளடி பள்ளீரே. (கசஉ)

தன்னைக்கேள்பெருங் காயமோடிந்து
சத்திச்சாரமெவட் சாரமுஞ்
சகலரோக மகலவேபுகழ்
தருவெப்பாலை காந்தமும்

வின்னமனுகா லவங்கப் பூவிராய்
விளங்கமும் வாலுழுவையும்
விறல்தருவிளா லரிசிகோதுமை
மேவுமரிசி தன்னுடன்
வன்னச்சித்திர மூலவேருடன்
வாணவுப்புஞ் சரியதாய்
வகைக்குக்காற்பலம் மிகுத்திடாமலே
வகைப்படிநன்றாய் நிறுத்தெடு
இன்னும்பரங்கிப் பட்டைநாற்பலந்
தன்னைமுன்மருந் தோடுபோட்
டிடித்துமருந்தை நடத்துந்தொழிலை
விடுத்துக்கேளும் பள்ளீரே. (கசுங)

கேளுமேனி திருகுகள்ளி
கெடியகாணம் பொடுதலை
கெம்பிரத்தும்பை பசுவின்கோசலம்
கெஞ்சுமஞ்சிலை கொச்சியும்
வேளைசங்கங்குப்பி யுத்தாமணி
வெள்ளாட்டுச்சிறு நீருடன்
விதமதாக வகைக்கொருபடி
யிதமதாயதை யெடுத்திடு
நீளும்பானை புதியதாயெடு
நாலுஞ்சாறு தனைவிடு
நிசமதாய்க்கருங் கோழியொன்று
வசமதாய் பிசகாதெடு
மாளும்படியே யறுத்ததின்குடல்
சூழும்ரோமம் போக்கியே
மருந்துப்பொடியைக் கோழிவயிற்றிற்
பொருந்தவையடி பள்ளீரே. (கசுச)

வைத்துவாயைத் தைத்திடு பானை
வாயினிலே வைத்திடு
மறு சட்டிகொண்டு மூடிச்சந்தை
மண்சீலைசெய்து மூடிடு
செய்யவடுப்பில் தரித்திடுதீயைச்
சிறுகப்பெறுகா தெரித்திடு
திட்டந்தானே பானைபட்டதாய்
சட்டந்தானே பதம்விட்டுநீ
பையக்கோழியை யெடுத்திடு
நையக்கையினால் பிசித்திடு
பண்பதாகவெடுத் ததையெலும்
பானதையெல்லா மெடுத்திடு
வெய்யவன்பட வுலர்த்திடுநர
றுய்யவேநீ கொடுத்திடு
வெருகடிகொளவகலும் நோய்களைக்
கருதிக்கேளடி பள்ளீரே. (கசுரு)

கருதிமேகச் சூலையாம்பல்
கள்ளிக்கிரந்தி பவுத்திரம்
கைகால்திமிர்ப்பு முடக்குப்பீலி
கருப்புடன்மேகப் பிடிப்புமே
உருகுமூனம் வெடிக்குஞ்சூலை
யூரல்மேகம் பெருஞ்சொரி
உதரவலிகள் குன்மரோக
முடம்புவலிகுத் துளைச்சலும்
குருதிப்படுவன் படருந்தாமரை
குருகநீர்க ளரையாப்புடன்
குடலில்வாத மேகச்சிலந்தி
குஷ்டநோய் சலக்கிரிச்சினம்

பருதிப்பரவு பக்கவாயு
பகரொணுரோக வகையெலாம்
பகலவன்கண்ட பனியைப்போல
அகலும்பாரடி பள்ளீரே. (கஅ௫)

86. கருங்கோழிச் சூரணம் (வேறு.)

அகலுமளிஞ்சிவேரு நன்னொச்சி
வேருமெருக்கம் வேருடன்
ஆனவேலி திருகுகள்ளி
அமுக்குராவெள்ளை யெருக்கின்வேர்
திகலவரைப்பாய் பழத்தினளவாய்
சேர்க்குங்கற்க மேதுகேள்
சிறந்தகாயும் விராகனெட்டு
சேர்த்தேயுள்ளி யிதழுடன்
புகலுமரிசம் பலமிரண்டு
பொருந்துசுக்குஞ் சவுட்டுமண்
போதக்கடுகோர் பலமுமோமம்
புதியகணமுமதி யுப்பும்
இகலப்புடலும் வளையலவண
மிசைந்தஉலுவா சீரகம்
ஏருபலமு மரையதாகவே
யின்னமறிவாய் பள்ளீரே.
இன்னஞ்சீனங்கல்மதம் நாலு
மேற்றவிளங்கங் காரியும்
இசைந்தகாந்தஞ் சவுக்காரநிறை
யேற்றவிராகன் மூன்றுடன்
வன்னமரத்தை வெடியுப்புருப்பை
வாளமுளையும் போக்கியே

வாய்த்தஅக்காரஞ் சிவதைதேசாரம்
வகையுபலமுங் காலதாய்
திண்ணமுடனே யிடித்துவடித்துத்
திருகுகள்ளிப் பாலதுஞ்
சேர்த்துக்காற்படி நேர்த்தியாயரை
தீட்டிமுன்மருந் தூட்டியே
முன்னமோர்கருங் கோழியாண்டு
மூன்றுசென்ற தறுத்தத்தின்
முடியுங்காலுங் குடலுரோம
முழுதும்போக்கடி பள்ளீரே (கசஅ)

போக்கிமருந்தை வயிற்றிலடைத்து
போற்றிமூடித் தைத்துமே
புதியதாளி லழிஞ்சிலெருக்கு
புகழும்வச்சிர நொச்சியும்
தாக்கிவெள்ளருகா திருகுகள்ளி
தானுங்காணச் சாருடன்
சமனாய்விடுத்துக் கோழியுடனே
சட்டிகொண்டு கெட்டியாய்
வாய்க்குப்பொருந்துஞ் சீலைமண்செய்து
வாழ்த்தியடுப்பி லேற்றியே
வரியோர்சாதி விறகாலெரித்து
வற்றிச்சுண்டி யாறிடில்
நீக்கிக்குக்குடத் தெலும்பையகத்தி
நிண்ணச்சாறு முலர்த்தியே
நேரதாய்த்தசை யதனுள்மருந்து
நெடியபருதி காட்டிடே. (கசக)

காட்டியுலர்த்தி மருந்துந்தைசையுங்
கண்டசாற்றின் வண்டலும்
கடுகவெடுத்து இடித்துவடித்துக்
கலசத்தினுட் செலுத்தியே

நீட்டித்தேக மறிந்துமருந்து
நேரமோர்வெறு கடியதாய்
நேசமாய்ச்சிவ சுதனைப்பணிந்து
நினைவதாகநற் றேனுடன்

கூட்டிச்சுருக்குக் கியாழத்துடனுங்
கொள்ளுமிஞ்சிச் சாறுடன்
குளிர்ந்தநீரின் வெந்நீருடனுங்
கொண்டுவருக வின்னமும்

ஈட்டிவ்வணத்த னுப்பானத்துட
னிருந்துமருந்தை யருந்திடில்
ஏற்குங்கறிகள் கூட்டும்வகையை
யிதமாய்க்கேளடி பள்ளீரே. (கஎ0)

இதமாந்துவரை கொடிவழுதலை
யிசைந்தமுருங்கைப் பிஞ்சுடன்
ஏத்திடுமரைக் கீரையுமுளைக்
கீரையும்பச்சைப் பயறதும்

பதமாந்தூதளை சுண்டவற்றலும்
பலவகைக்கறி குறவையும்
பகருந்திருக்கை வராலுடன்சுறு
பருத்தவுளுவை நெய்த்தொலி

நிதமுங்காடை முயலுமுடும்பு
சேர்ந்தவுள்ளானுங் கூவுதாரி

நேரும்வெள் ளாட் டிறைச்சியுமிக
சீராமந்த வற்றலின்
விதங்களருந்த லவணமும்வறு
வேண்டிப்பசுவின் மோரினில்
வேகமாகப் போகும்நோயை
விளம்பக்கேடி பள்ளீரே. (கஎக)

விளம்பும்வாத குன்மமும்பித்த
குன்மமுமய்யக் குன்மமும்
வெரிகுன்மம்வலி குன்மமுஞ்சத்தி
குன்மம்பிறட்டு குன்மமும்
தளம்பும்வாய்நீர்க்குன்ம மெட்டுடன்
தரிப்படாதின்னந் திமிர்ப்புடன்
தணியும்வாதச் சூலைகிரந்திச்
சூலைகுண்டல வாதமும்
பயம்படக்குடல் பிறட்டுங்குண்டல
வாயுவும்பெருஞ் சட்டையும்
பாரிசையினின் வாதமிடுப்பு
வாதமுழங்கால் வாதமும்
தியம்புங்கடிகள் வாயுவுளதுஞ்
சேர்ந்தரோகம் நூறதுந்
தினகரன்முன் பனியைப்போலே
தீரும்பாரடி பள்ளீரே. (கஎஉ)

84. கருவங்க சிந்தூரம்.

காரிபலமு நாலுளடுத்துக்
கனியவேயதை யுருக்கிப்பின்
கண்டாயவ்விடை யிணங்கன்பொடித்து
கன்றுவரிப்பாலினில்

வீரியாகவே சாமம்நாலு
வலுக்கவரைத்து உருட்டியே
வகையுடன்சுண்டக் காயின்பிரமாணம்
துகையாய்க் கிருசமிட்டிட

நாரியாக்கேளுங் குமரிப்பாலை
நாடியூற்றிக் கட்டியே
நலமதாகவேவில்லை கட்டியே
பெலமதாய்ப்புடம் போட்டெடு

காரிசிவந்து முருக்கம்பூவெனப்
பாரினிலே வாதமெல்லாம்
கதிந்துமுனிவர் தானுரைத்தது
பதிந்துபாரும் பள்ளீரே. (௲௩)

85. தாரசெந்தூரம்.

தாரம்பலமும் நாலுஎடுத்துத்
தனித்தகிளிஞ்சி நீரதில்
தாக்கிடுபாணிநீரை விட்டுறு
நோக்கியே தாரஞ்சுருக்கிடு

வாரமாகவேசுத்தி யாகுமாம்
நேரமாகவே யெடுத்துமே
வகையதாகவே பலமுநாலெடு
தொகையதாக வப்பிரேகத்தை

கோரமாகவே வீரங்காலெடு
கூட்டிக்கல்வம் பாணியால்
குற்றமற்றரை யெடுத்துப்புடமும்
வித்தகமாக ஒன்றிடு

பாரமாவரியெடுத்துக் கல்வம்
பதியவேவரி பாலினால்
பகரவரைத்துத் தாரமேலிடு
சிகரம்போலவே பள்ளீரே, (௧௭௪)

ஞானிப்புடமா யொன்றுபோட்டிடு
நலமதான முருக்கம்பூ
ஞாலமானமுன் கரி செந்தூரம்
ஏலவேயிடை சேர்த்தரை

கூனிமிர்ந்து தான்வரிப்பாலே
கூடவிட்டு நடத்திடு
கூட்டியேவில்லை வெய்யோன்படமே
தாட்டிக மாகவைத்தெடு

வானிலே வில்லை மேலே கவசம்
வகைய தான வப்பி ரேகம்
வகைய தாக வரைத்து யங்கித்
துகைய தாகவே யிட்டு யே

ஊனி ரவியில் காய வைத்துமே
உள்ள சேவற் புடம தாம்
உற்றுப் போட்டு செவப்புமாகும்
சித்திக் காகும் பள்ளீரே. (௧௭௫)

## 86. துருசுச் செம்பு வேதை.

எடுத்துத்துருசு பலமும்நாலு
இனியகார மதனிடை
எடுத்திநடத்தி யுருக்கிரவியா
மிதமதாகத் தகடடி

அடித்தூக்கத்த நீர்பிழிந்து
எடுத்திடு வெடிசினமும்
அன்பாய்க்களஞ்சி ரெண்டுமிட்டிடு
தென்பாய்க்கரைத்த நீரிலே
விடுத்துரவியைப் பழுக்கக்காய்ச்சி
விதமாயேழு தரந்துவை
விருப்பமாகத் துவைத்தெடுக்கப்
பொருப்பதாக வெட்டையாம்
குடுத்திடுரவி ரெண்டுருக்கியே
தொடுத்திடுகாரிச் செந்தூரம்
குணமதாகவே தான்கருப்பதாம்
மணமதாகும் பள்ளீரே. (கஎசு)

மதியிலெட்டுக் கிரண்டுரவியாம்
வண்மையாகக் கொடுத்துமே
மாட்டியூதிடு மட்டம்கேரிடை
தாட்டிகமாகத் தானிடு
சுதிபெறவேமம் மிடையேசேரு
கணக்கையறிந்து பார்த்துமே
கண்டீர்வாதத்தைப் பாகமாகவே
நன்றாய்ச்செய்து பார்த்தெடு
பதியுமாகுமே புடத்துக்கிருக்கும்
பண்பாயோடா யொளித்திடாப்
பரியுமாகுமே ஞானம்வந்திடும்
துரியமாகுமே யேவலாம்
குணமதாகுமே யகத்தியமாமுனி
குறித்துச்சாத்திரஞ் சொன்னது
கூர்மையாகவே செய்திடவாதம்
நேர்மையாகும் பள்ளீரே. (கஎஎ)

தேனிசேபண வெட்டையுமொன்று
திறமாக்குன்ம மெட்டுமே
திடமதான பறங்கிச்சூலையும்
அடமதான வாதமும்

வானிலேகும் பித்தமுமதி
சாரமூல மேகிடும்
வறண்டவிருமல் சயமும்மேகம்
வகையதான வெட்டையும்

கூனல்நிமிரு மூலமுமரை
யாப்புப்புத்துச் சூலையுங்
கொடியதான நோவுமேகுந்
துடிகண்டடங்கு மூலகரே

ஞானமாமுனி அகத்தியர்சொன்ன
மோனமான வாதத்தை
நலமதாகவே பாகமாக
பலமதாச்செயும் பள்ளீரே. (௧௭௮)

## 87. இலிங்க அயச் செம்பு.

காரிஅயமும் ரவியும்நேரிடை
கனத்தகுகையி லுருக்கியே
கண்டாய்கல்வத்தில் நன்றாயரைத்துக்
காண்பழச்சாறு விட்டிடு

வாரியரவே வன்னிகெற்பம்
வகையரய்ப்பலமு மிட்டுமே
வண்மையாயிரு சாமமரைத்து
உண்மையாக்காரங் கூட்டியே

சாரிபெறவே ஞானிபுடமாங்
தாக்கியேபுடம் போட்டிடு
தகமையும்பெறக் குகையிலிட்டு
வகைபடவதை யுருக்கியே

பாரியாகவே யெடுத்துநீகடை
பக்குவப்பட வூதியே
பண்பாயெடுக்க ரவியுமாகும்
இன்பமாகுமே பள்ளீரே. (கஎகூ)

ரவியினிடைக்கி நாலிலொன்று
நலமாமேமஞ் சேர்த்துமே
நலமரிய்கீகரியி லுருக்கியேயெடு
பெலமதாய்த்தக டாவடி

கவியவேதாரங் கெந்தம்வீரம்
கணக்காய்ச்சூதஞ் சேர்த்திடு
கருதிரவிக்கி நாலிலொன்றெடு
பரிதிவரிபால் விட்டுமே

பவியநடத்தித் தகட்டில்பூசிப்
பாகமாய்ப்புடம் போட்டிடு
பண்பாய்நொருக்கிக் கரியதாகும்
தெம்பாய்மதியி லெட்டிலே

தவியரெண்டு கொடுத்துஊதித்
தங்கமிடையே சேர்த்திடு
தாட்டிகமாகு மேமமாகு
நீட்டிப்பாரும் பள்ளீரே. (கஅஎ)

தள்ளிப்புனலை யுண்டமாமுனி
யுள்ளதறிவி லுதித்துமே

தகமைபெறவே யுலகவாதிக்கி
யுகமையாக வுரைத்தது
வெள்ளியங்கிரி யுதித்தசிவனும்
விருப்பமாக நூல்தனில்
வேதம்பெறவே சொன்னதைமுனி
நீதமாக வெடுத்துமே

கள்ளிக்கறந்த பாலைப்போலே
தெள்ளியேயிதிற் சொன்னது
கருத்துடன்பாகங் கண்டெடுத்து
விருத்தமாகச் செய்தது

பள்ளியரேபாகங் கண்டெடுத்துத்
துள்ளியேவாதஞ் செய்திடு
பக்குவமாக ஞானயோகம்
மிக்கவந்திடும் பள்ளீரே. (கஅக)

பரையினுதம் வேதமேயிரு
பருதிவாய்க்கல்வ மீதிடு
பகரவீரங் காயிடுபாணி
நகரவரைத்துப் புடமிடு

உரையதாப்போடு வெளுக்குந்திரும்ப
வரையிசைபாணி தன்னிலே
உற்றெடுத்து வில்லைகட்டியே
மெத்தவேபுடம் போட்டெடு

குறையில்லாமலே தாரம்நாலு
பரையினுத மொன்றிடு
கூட்டியேகல்வ மிட்டுவரிப்பால்
நாட்டியேயிதை யரைத்திடு

வரையதாயதை வில்லைகட்டியே
உறைகொள்ரவி தானிடு
வடிவதாக வெடுத்திடுபாக
முடிவுகேளடி பள்ளீரே. (கஅ௨)

காரங்காலுஞ் சுண்ணமும்படி
சாரம்நாலு அளந்திடு
கனியச்சட்டி யிட்டிடுபாதித்
துணிவாய்வில்லை வைத்திடு

பாரவேமூடு சுண்ணம்நீரால்
கோரமாக வழுத்தியே
புதியவடுப்பி லேத்திடுசாமம்
முடியக்கமல மெரித்திடு

வாரவேயெடு முருக்கம்பூவாம்
தேரவியிற் ருக்கிடு
வடிவதாக ரெண்டுக்கொன்றிடு
துடிவதாகக் கருப்புமாம்

தேரவேமதி யெட்டில்ரெண்டிடு
கோரமாக வூதிடு
திடமதாக எமமிடசேர்
சடமுமேமம் பள்ளீரே. (கஅ௩)

சயமுங்காச மெலிகடியீழை
நயமதாகு முலகிலே
சதிராய்மேக மிருபதும்வலி
கெதியாயோடு முலகிலே

பயமுங்குற மெட்டெடுபடும்
பதிவாய்வாத மெண்பதும்

பதிவாய்ச்சூலை நாற்பதுமேகும்
விதிவாய்வந்த கிராணியும்
செயமாய்க்கன்ன சூலையுமுதல்
சீரியவிடுப்புப் பிடியுடன்
செங்கரப்பனும் போகுமெனவே
சங்கதிற்கண்ட பனிப்போலே
மதியாய்ப்பொதிகை மாமுனிசொன்ன
மதியையறிந்து பாரடி
ஆகமகலை நூலையறிநீ
யோகமாகும் பள்ளீரே. (கஅச)

88. மூலக் கிராணிக்குப் புட்டவியல்.

உள்ளியோமஞ் சுக்குமேலமு
முண்மையாகத்தட்டியே
உற்றுச்சட்டியில் வேடுகட்டியே
யுறுதியா யிளநீர்விடு
தெள்ளியேவேடு தன்னிமேலயிடு
தீரமாக மூன்றையுந்
திட்டமாகவே மூடிச்சட்டியை
நட்டமில்லாம லெரித்திடு
துள்ளியவித்து எடுத்துப்பிசைந்து
தொக்கவே யிடமூலமும்
துஷ்டமூலக் கிராணியுடனே
தோற்றுஞ்சோற்றுக் கழிச்சலும்
மெள்ளக்கழிச்ச லேகிடுமிது
மேன்முனிசொன்ன பாகமும்
மிக்கவறிந்து முறையாய்ச்செய்ய
விதத்தையறியும் பள்ளீரே, (கஅரு)

## 89. பவளச் சுண்ணம்.

தோடைப்பூவு மெடுத்திடு நன்றாய்
வேடுகட்டி பவித்திடு
தொக்கவே யதைப்பிழிந்துநன்றாய்
மிக்கவதையும் வைத்திடு

கோடைப்பவளச் சோறெடுஅதை
யோடவேவைத் தூதிடக்
கொடுமையாகவே சுண்ணமாகும்
அடுமையாய்ப் பணவெடையிடு

ஓடையிருமற் சயமுமோடும்
வாடையிலது ஏகிடும்
ஒக்கவேயெள்ளு தானதையெடு
மிக்கையாக உண்டிடு

பேடையாசினுக் கிருமலுஞ்
சாடையாயதை யொழித்திடும்
பித்தமுமது அடிபடுமென
நித்தமுமுண்ணும் பள்ளீரே. (கஅகூ)

## 90. அயச் செம்பு.

அபமுங்கெந்தகம் வீரங்காரம்
அதிலுள்ள ரவிதாணிடை
அணிபக்கல்வத்தி லிட்டுப்பழச்சார்
துணியச்சாம மூன்றரை

நயமாய்வில்லைசெய் சூரியன்பட
மயமாயுலர்த்திக் கெஜபுடம்
நாட்டியிட்டு மூன்ரவியிடை
கூட்டிக்காரி சேர்த்தரை

பயமாய்வில்லைசெய் புடமிடுஎடு
பதியக்குகையி லிட்டுமே
பார்த்துஉருக்கு மணியதாகும்
நேர்த்தியாயதை யூதிடு

செயமாய்ரவியாம் எடுத்திடுமதி
தயவாயெட்டு ரெண்டிடு
சரியாயுருக்கியேமம் இடைசேர்
பரியாம்பாரடி பள்ளீரே. (கஅஎ)

## 91. உலோக செந்தூரம்.

வைத்தலோகம் பலமும்நாலு
வகைபெற ரவிதானிடை
வருத்து இடைசேர் குகையிலிட்டுத்
தொடுத்துரெண்டையு முருக்கிட

சித்தமாகநொறுக்கி மணியாய்ச்
சிறக்கக்கல்வ மிட்டிடு
சித்திபெறவேயுடைத்துப் பொடித்து
நத்தியேவன்னி கெற்பமும்

குற்றமில்லாமற் பலமுமொன்று
குணமதாகக் காரமும்
கொண்டுஅரைத்து விடுத்துப்பழச்சாறு
குணம்தாய்ச் சாமம்நாலரை

வித்தகமாகவரைத்து வழித்து
விதமதாகவே வில்லைசெய்
விருப்பமாகமே வெய்யோன்முகத்தில்
நெருக்கவைத்திடு பள்ளீரே. (கஅஅ)

புத்தியாகப்புடம் ஒன்றுவைத்து
புதுக்குகையிலிட் டுருக்கியே
புலம்படபிறங் கரியதாகும்
நலம்படவஞ்சு உருக்கியே

நத்தியாகவே காரங்கூட்டி
நலமதாக நடத்தியே
நாடிபேகுகை யிட்டுருக்கவே
தேடியுமது மணியுமாம்

சித்தியாகவே யூதியெடுக்கச்
சிறந்தசூரியன் போலவே
சிறந்துவந்திடுஞ் செம்பையெடுத்து
கரந்தமதியில் பத்துக்கு

பத்தியாகவேயொன் றுஇட்டிடு
சித்தியேமயிலைச்சேரு
பகுந்துமாற்றுஎட்டதாகும்
உகந்தசெந்தூரம்பள்ளீரே. (கஅகூ)

அயத்தின்செம்பை நாலுருக்கியே
யன்பாயேமமொன் றிடு
அதையுருக்கியே தகடாவடித்து
அன்பாய்மருந்து பூசக்கேள்

நயத்திலேசிலை கெந்திசூதம்
நலமதாக வீரமும்
நலமதான கட்டுக்கரைதான்
பெலமாய்க்கல்வ மிட்டுமே

பயத்திலேயரை தானேவரிப்பால்
பக்குவமாக விட்டுமே

பண்பாயரைத்துத் தகட்டிற்பூசித்
தெம்பாய்நொறுக்கிப் புடமிடு
தயத்தில்வைக்கக் கருப்பதாகுந்
தானேபொடித்துச் சொல்லக்கேள்
தாக்கிடக்கரி செம்புமாகும்
நோக்கிக்கேளடி பள்ளீரே. (கசுo)

நொறுங்கினகரி நாலத்தொன்று
நுகர்வெங்காரம் பொரிச்செடு
நோக்குவெங்கார மிடைமஞ்ஞேசிலே
பார்க்கச்சிலே சூதமாய்
நருங்கினதொரு செங்கீரைச்சாற்றில்
நலமாயரைத்து உலர்த்தியே
நாடியேஓடு தன்னிலேவைத்து
மூடியேஞானிப் புடமிடு
உருக்கிமுருக்கம் பூவதுபோலே
நொறுங்கிச்சிவந்து இருந்திடும்
உறுதிபோலவே செம்புநூற்றில்
அருதியொன்று கொடுத்திடு
அருதியாகவே செம்புகட்டியே
உறுதியாய் மதியேழிலே
அட்வாகமூன்று ரவியைச்சேர்த்திடத்
திடமாயாகும் பள்ளீரே (கூசுக)

திடமாய்ச்செந்தூரம் பணவிடையுண்ணு
தீர்க்கமாகுமே பிணியது
திறமாம்வாத மெண்பதுமுதல்
நடமானசூலே பதினெட்டும்

'வடமகோதி ரமும்பீலிகை •
வகையதாகும் நரைதிரை
வாட்டமாகவே யேகிடுமது
நாட்டமில்லா தொழிந்திடும்

தடமாயயத்தை மறைத்துநூலில்
திடமாயிரும்பு என்றதில்
கண்டிறவாதி கல்லுளியிலிருந்த
விண்டிறசெம்பு நல்லது

தடமாய்ப்புனலை யெடுத்துஉண்ட
திடமகாமுனி சொன்னது
தாக்கிவீதை யாகும்படிக்கி
நோக்கிப்பாரு பள்ளீயரே. (கசுஉ)

92. அயமறைத்துச் சொல்லிய பாகத்துக்கு விபரம்.

வாதிக்கயந்தானே மறைத்துப்
பேதிக்கிரும்பு சொன்னது
வகையாகுக்க லெலும்பைக்கடித்துத்
துடியும்ரெத்தமுங் கண்டாப்போல்

சேதியிலிரும்பிலிருந்த கருநீர்ச்
செம்பிற்சேர்ந்து வர்ணத்தைச்
செருத்துஅழிக்கப் பிழித்துவங்கத்தைத்
திறமாய்க்கொடுத்து ஊதியே

சோதியெடுத்துப் பொன்னதாச்சுது
குணமாயலைந்து திரிந்திடா
கொடுமையான வொழுகரையெடு
திடமாய்ரவியைச் சேர்த்திடை

நாதியாகவே சித்தியாகுமாம்
வேதியாமுனி சொன்னது
நடத்தும்பாகந் திடத்துடன்கண்டு
நலமாய்ச்செய்யும் பள்ளீரே. (கசுக)

கலிப்பா.

ஊனே யுயிரே யுயிருக்குண் மெய்ப் பொருளே
தேனேநீ மூத்தபள்ளி சொன்னதெல்லா மெய்யாமோ
நானேநான் சொல்லும்வகை நாட்டமாய்ப் பித்தளையு
ஆனேன் பொன்னுக நாட்டி லரைவேனே. [ம்

## 93. சத்துக்குவங்க செந்தூரம்.

பள்ளு.

வங்கத்தைத்தகடடித்துக் கல்வம்
இங்கிதப்பலம் நாலிடு
வகையதாயிட் டதைக்குமரிநீ
ரதுகைபடவே யரைத்துப்பின்
துங்கமாகவேவில்லை கட்டிப்பின்
தொக்கவேபானுவிற் காயவை
துடியதாகவே பெரும்புடமிடு
படியவேகையா லெடுத்திடு
பங்கமாகவே பவளநிறமாம்
பதியவேயதை யரைத்திடு
பருகவேயஞ்சுபுட மிட்டெடுக்கச்
சதிசெய்சத்து இல்லையாம்
உங்கள்சிறப்பு நூறுரவியா
முகந்துசெந்தூர முறையிதாம்

உறுதியாகவே முனிவர்சொன்ன
வருதிகாணும் பள்ளீரே. (கசுச)

பொட்டிலேயெடு சீனம்நேரே
பொருந்தவேகல் லுப்பெடு
பொடித்துச்சட்டியி லுருக்கியெடுத்துப்
பொருந்தமுன்வங்கப் பவளத்தில்

கட்டளையிடைசேர்த்து வரிப்பால்
திட்டமுடனே யரைத்துப்பின்
காணரவியிற் காயவைத்ததைத்
தோணவேபுட மிட்டெடு

இட்டமுடனே முருக்கம்பூப்போல
சட்டமாகவே சிவந்திடும்
இனியதாகவே ரவிநூற்றொன்றில்
கனியவேயதைக் கொடுத்திடு

முட்டரவியு மேமமாயிது
சிட்டரேயாண்டு இருந்திடும்
செயம்காமுனி யருளின்சொல்லை
நயமாயாராய்ச்சி செய்திடே. (கசுரு)

பணவெடைமதுதனிலே யுண்டிடக்
குணமதாகும் வியாதியும்
பதியவேகுன்ம மெட்டுமேரும்
விதியின்சூலை பதினெட்டும்

உளைவதான வாதமெண்பதும்
சினமதாகப் போய்விடும்
உகந்தமேக மிருபத்தொன்றும்
நயந்துகாட்டி லொளிந்திடும்

சணமானநரை திரையறுமிகச்
சடியுமெய்யெலா மரிப்புப்போல்
சதியாம்நோய்க ளகன்றுமிக்க
விதியின்கெதியாய்ப் போய்விடும்

தனியாநோய்கள் தனிந்திடுமிகச்
சரியாய்க்காயஞ் சித்தியாம்
சாற்றுவீரிதைப் பார்த்துப்பாகஞ்
சரிமகாமுனி சொன்னதே. (கசுசு)

94. வங்கசேந்தூரம்.

குமரிச்சோறு தனையெடுத்துநீ
கூட்டிக்கடுக்கா யுடைத்திடு
குணமதாயதைப் போட்டுப்பிசைந்து
கூர்ந்துபிழிய நீர்தாம்

அமரிக்கையுடன் வங்கத்திலிடு
அரைத்துவில்லை ரவியிடு
அடவதாகவே பொரியப்புடமுந்
திடமதாகப் போட்டெடு

தமரிக்கையுடனஞ்சு புடத்தில்
தாக்கச்சிவக்கு முருக்கம்பூ
தாக்கியேயெடு சிலையுஞ்சீதமுந்
தாகநேரிடை யிட்டிடு

நமரிக்கை வரிப்பாலைநேரிடு
நாட்டியே மெள்ளப்பூட்டிடு
நலமதாகவே வில்லைகட்டியே
உலரவேபுடம் போட்டிடே. (கசுஎ)

பேட்டுளெடுக்கமுருக் கம்பூப்போல
நாட்டிற்பண்டித ரெல்லாரும்
பொருந்தமதுவிற் பணவெடையிட
அருந்தச்சயமுங் காசமும்

கேட்டுவேவாத மெண்பதும்போகும்
நாட்டுமேவலி குன்மமும்
கருத்தசூலைபதி னெட்டும்போகும்
சுருதியாய்ப் பித்தம்நாற்பதும்

மாட்டுக்கரியமேக முமனை
யாட்டியரையிற் புத்துவும்
வளிமகோதரம் பவுத்திரமுதல்
ஒழியுமேழரை நாளினில்

பாட்டுக்கரியபத்திய மரைக்
கீரைபிஞ்சு மாங்கொட்டை
ப்தியவேசுட்ட வத்தலையாவின்
பாலுங்கூட்டி யுண்டிடே. (கசுஅ)

## 95. காக்கைப்பொன் செம்பு.

உண்டிடவொரு குண்டவன்செம்பு
உறுதிபெறவே சொல்லுவேன்
உற்றுக்காக்கைப் பொன்னுதாலு
உறுதியான குகைதனில்

கண்டிடவதை யுருக்கியெடுத்துக்
கனிவாய்க்கட்டி யிட்டுநீ
கதிபெறவதின் மேலேகவசங்
கல்லுப்புபலம் நாலெடு

பண்டி தவீர மொன்றுமெடுத்துப்
பதியக்கல்வ மிட்டுநீ
பாகத்துடனே பொடித்துச்சூடன்
ஏகத்துடனே போட்டுநீ

புண்டிதப்புடம் போடஅதரும்
புறப்படுமதை எடுத்துவை
பொருந்தக்குடவ ணடியில்நின்ற
அருந்தஉப்பைப் பொதிந்திடே. (௧௯௯)

பொதிந்துஇப்படி யஞ்சுபுடத்தில்
போக்கெடேஎல்லாம் பதருமாம்
போகமான அதலொலாமெடு
தாகமாகவே காரியம்

வதிந்துஒன்றிடு அரைத்துஉருக்கி
வாடஊதி யெடுத்துப்பார்
வலுமையாகவே ரவியுமாகும்
வடிவதான அலரிபோல்

கதிந்துரவியில் நாலுக்கொன்றிடு
கனிவாகஏமம் ஒன்றிடு
கரியிலுருக்கி யடித்திடுதட்டிக்
கருவாய்த்தகடு தன்னிலே

உதிந்தநாற்றம் வீரம்நிறுத்து
உறுதியான தகட்டிற்கு
உற்றுநிறுத்து அரைக்கால்வாசி
யுறுதியாகப் பொடித்திடே. (௨00)

பொடித்துக்கல்வ மீதிலிட்டுநீ
போக்கொடே தகட்டைக்காயவை

பொருந்தவெடுத்து நெருப்பதாகப்
புலமைப்படவே செந்தியில்
அருந்தஇட்டெடு தகடும்அதரும்
அன்பதாக நொறுங்கிடும்
அடவாயெடுத்து மதியில்நாலொன்று
திடமதாகக்கொடுத்திடு
நடித்துஉருக்கி யெடுத்துப்பாரு
நலமாய்மாற்று ஆறதாம்
நலமையாக விற்றுச்செலவும்
பிலமதான ஞானம்பார்
வடித்துமாமுனி பள்ளிற்சொன்ன
வளமையான வாதத்தை
வகையதாயதைப் பாகமாக
வலுவாச்செய்யும் பள்ளீரே. (௨0௧)

96. துருசிச்செம்பு.

துருசுதன்னைப் பலமெடுத்துபின்
தூக்கிமெள்ள வுருக்கிப்பின்
தொக்கதாகவே ரவியதாகு
மிக்கவேஅதை யெடுத்திடு
பரியதாகவே நாலுக்கொன்றிடு
பாரயமேம மொன்றிடு
பக்குவப்படியுருக்கித் தகடாய்
மிக்கவேயதை யடித்திடு
புரியுந்தகடுக் கரைக்கால்வாசி
புகல்கெந்தகம் வீரமும்

பொங்கோடெரிறுத்து அரைக்கால்வாசி
பொடித்துக்கல்வ மீதிடு
நரியதாகக்காய்ச்சித் தகடை
நலமாயதிலே வைத்திடு
நாடித்தகடு வெட்டையாகும்
நலமாய்க்கேளும் பள்ளிரே. (உ0உ)

மதியிலெட்டுக் குரெண்டுஊது
மயமாயேமம் ஒன்றிட்டு
மகம்பெறவேமம் எட்டதாகும்
மதியாய்ப்பழுத்தது கேர்மைபார்
விதியிலா வெடியுப்புக்காவிக்கு
மிக்கவிருந்திடு முண்மைபார்
விருப்பமாகவே பாகத்தைக்கண்டு
உருப்படச்செய்யும் வாதிகேள்

நிதியதாகுமே எளிதிலேவேதை
நிசமதாகச் செய்திட
நிகரில்பெரிய ஞானமாகுமே
பகரில்சுழியின் மீதெரு
பதியுமாகவே யகத்தியமுனி
கெதியாய்ச்சொன்ன நீதிபார்
பரிவுடனுண்டே செய்திடவாதம்
பலிக்கும்பாரடி பள்ளிரே. (உ0௩)

97. சகல நஞ்சுகளுக்கு முறிவு.

கோச்சகம்.

மங்கை புருடனிடம் வாதாகப் பின்னொருவன்
செங்கையினால் சேரச் சினந்த வகையதனால்

இங்கவே பாஷாணந் திறமாக நஞ்சையுண்டால் [ண்.
இங்கிதமாய்த் தான்முறிக்க வியல்பாகச் செய்தனர்கா

பள்ளு.

கன்னியரேஎட்டிக் கொட்டைதின்ற
கனத்தநஞ்சை முறிக்கவே
கருணைபெறவே நவ்வற்சாறு
கசக்கியுண்ண முறிந்துபோம்
பின்னிலேமருதோன்றி யுண்டு
பிதற்றுவாரை முறிக்கவே
பிசகில்லாத தான்றிக்காய்தட்டி
நூறையாய்ப் பாணிவிட்டுநீ
தன்னிலேகொடு மூன்றுபோது
உன்னியேயது முறிந்திடும்
தீக்கவூமத்தங் காயைத்தின்றிடத்
தாமரையிலை கசக்கியே
துன்னியேசாறு கொடுத்திடக்கடல்
நன்மையாக வொழிந்திடும்
தொன்மையாமுனி யருளினரிது
நன்மையாகு மூலகரே. (உ0௬)
கள்ளிப்பாலை மெள்ளவுண்ட
கனத்தகன்னியை யிருத்தியே
கருத்தஆவரை பிடித்துப்பிழிந்து
பொருந்திப்போடத் தீருமாம்
துள்ளிஅலரி மூலம்எண்ணெய்
உள்ளிற்கொண்டு மயங்கியே
துடித்துக்கடக்கக் கடுக்காய்நறுக்கிப்
பொடித்துப்பாணியில் குழப்பியே

துள்ளிப்பாலடை தன்னிலேயிடு
மெள்ளநஞ்சு முறியுமாம்
குணமதாகநெய் யுண்டபேர்க்கும்
மணமாய்வெந்நீரைக் கொடுத்திட

தெள்ளியுருகி நீரிலிறங்கும்
உள்ளபடிக்கி நல்லது
திரமையாகவேமுனி வர்சொன்ன
வுரகமாகுமே பள்ளீரே. (உ0ரு)

நெல்லிவேரைப்பிடுங்கி யரைத்து
நேராய்ச்சர்க்கரை தனையிட்டு
நிருணயத்துடனுண்ட பேர்க்கு
தருணமாக முறிந்திட

பல்லுகூசுமெலு மிச்சம்பழம்
நல்லசாறு அரைப்படி
பகர்ந்துகொடுக்க நஞ்சுமுறியும்
உகந்துகருணை செய்திடு

சொல்லுகிறேன்சுண்ணாம்பு தின்றவள்
மெல்லமஞ்ச ளுண்டிட
சித்தியாகவே முறிந்திடுமது
பத்தியாகவே செய்திடு

கள்ளின்வாளத்தை யுண்டிடவாந்தி
கழிச்சல்மயக்கங் கண்டிட்டால்
கடினமாகவே வசம்புசுட்டுக்
கரிக்கித்தேனை விட்டுமே

மெல்லக்கொடுக்க முறிந்திடுமது
சொல்லைப்போலே நின்றிடும்

மேன்மைமாமுனி கூறினரிதை
யாண்மையாகும் பள்ளீரே. (உ0சு

சிவதைவேரைப் பிடுங்கியுண்டிட
சிறந்தநஞ்சை முறிக்கவே
சேரும் வெள்வேலைச் சாறுபிழிந்து
தீர்க்கமாகவே கொடுத்திட

அவத்தை யில்லாமன் முறிந்திடுமது
கவனமாக வொழிந்திடும்
அன்பாய்க்குன்றி யுண்டிடிலதைத்
தென்பாய் முறிக்க மருந்துகேள்

கவனமாகவே காரம்பொரித்துத்
தவனமாகக் கொடுத்திட
கருணையாகவே முறிந்திடுமது
தருணமாக வொழிந்திடும்

தவனம்வெள்ளைப் பாஷாணமுண்ட
தக்கவாளைக் கிடத்தியே
தாட்டிகமாக மிளகுபாணியும்
நீட்டவேதீரும் பள்ளீரே. (உ0எ)

வெற்றிலையெண்ணெ விளாவிக்குடிக்கும்
விருப்பமான பெண்ணுக்கு
வீதமான முத்தினதேங்காய்
நீதமாய்ப்பாலைப் பிழிந்துமே

பற்றவேகொடு விடங்கள்முறியும்
சித்திபெறவே நல்லது
பரிவுடன்வீரந் தனையுமுண்டால்
புளியாரைமூலி பிழிந்திடு

சாற்றிலரைக்காற் படியுமுண்டால்
பத்தியாக மூரிந்திடும்
சரியாகப்பூரந் தனையுமுண்டு
நெறியாய்வாய்கள் குழைந்திட்டால்

வித்தகரேயிள நீரிற்சீனம்
விருப்பமாகப் பொடித்திடு
விரும்பிவழுக்கை தின்றிடநலம்
கரும்பிலினிது பள்ளீரே. (உ0அ)

தாளகமுண்டு தவித்துக்கிடந்தால்
தாட்டிகமாக வோமத்தைத்
தாகமுடனே கரிக்கிப்பாணி
யோகமாகக் கொடுத்திட

நீளமாகவே முறிந்திடுமது
சோரம்வீரந் தின்றிடில்
நிர்ணயத்துட னேமாசிக்காயைத்
தருணம்வெள்ளாட்டுப் பாலிலே

வாளமாக வரைத்துக்குழப்பி
வலுமையாகக் கொடுத்திட
வடிவதாக வொழிந்திடுமது
துடிகளடங்கிப் போய்விடும்

கூளமாகவே ரசத்தின்பதங்கங்
கூட்டிக்கொடுக்க வெந்திட்டால்
குணமதாக வாவின்பாலை
யுண்ணவேகொடு பள்ளீரே. (உ0கூ)

தொடுக்கவேகந் தீர்ந்துபோகு
மடுத்துமெள்ளப் பார்த்திடு

குணமதாக வெல்லாநஞ்சுக்கு
மணமதாகு நீலிவேர்

படுத்துமேயதைத் தட்டிசட்டியில்
அடுத்துமேயதைக் கஷாயமாய்
பக்குவப்படி யிறுத்துக்கொடுக்க
மிக்கவேதீரும் நஞ்செலாம்

தடுத்துமேநஞ் செல்லாமுறியக்
கொடுத்திடலுணங் கொடிதனைத்
தாட்டிகமாக மூன்றுபோது
நீட்டிக்கொடுக்கப் போய்விடும்

உடுத்தவகத்திய மாமுனிவருந்
தொடுத்துநஞ்சை முறிக்கவே
உண்மையாகவே பண்டிதஞ்செய்யத்
தன்மையாகும் பள்ளீரே. (உகய)

ஆதியான நூலையறிந்து
அன்பாய்ப்பள்ளு இருநூறாய்
அடவதாகப் படித்துப்பண்டிதந்
திடமதாகச் செய்திடு

சோதிபெறவே களங்குசெந்தூரஞ்
சுகமதான பிட்டுடன்
சுருக்கமாகப் புகையுடனயம்
நெருக்கமாகச் செம்பையும்

விதியாகவே சுரக்கிழாயம்
விருப்பமாகச் சொன்னதில்
வேகமுடனே பாகமாக
வித்தகரோநீங்கள் செய்திடில்

சாதிச்சிறிய னாயிருந்தாலும்
வேதமாமுனி யாகுவார்
சகலசரக்கு மடுத்துப்பாரு
நிகரில்வந்திடும் பள்ளீரே. (உகக)

## 98. சுரக் கஷாயம்.

சீந்திகாஞ்சொரி வேம்புபடகஞ்
சிறந்தமட்டி முத்தமுஞ்
சேரும்லாம்பிச்சை கோஷ்டந்திப்பிலி
தேக்குடன்கண்டங் காரியும்

ஈந்துசுக்குப் பனிரெண்டுமிது
வெடுத்தமளவு வடுப்பட
இலங்குங்கையுங் கோலுங்காலுட
னிசைந்தபூத சாஸ்திரங்

தீந்தகிழமை திசையும்ரெத்தினம்
திசவதார மொன்றுடன்
திகழும்ராசி தன்னுடனதிற்
சேர்த்துபயத்தை யூற்றியே

போந்தவெரித்துக் குறுகச்சலமும்
பொருந்துமரைக்கா லிறக்கியே
பொருந்துஞ்சுரங்க ளனைத்துங்கடலிற்
புகுதும்பாரடி பள்ளீரே. (உகஉ)

## 99. ஷை வேறு

முட்டியிரண்டு சங்கம்வேரும்
மூன்றுநிறைக ளொருபலம்
முதிர்ந்தசுக்குப் பறங்கிகாவெளி
முதிருங்கிரந்தி முக்காலாக்

திட்டமரத்தை படகம்பிரப்பிந்
தேக்குவெள்ளை யருகரை
சிறந்தபூமி யாவாரைகால்
சேரக்கூட்டி யிடித்துமே
தொட்டதோயம் விட்டுக்காய்ச்சித்
துடிப்பதாகக் கொடுக்கையில்
தோணும்புளிபைத் தானும்நீக்கிற்
சொல்லக்கேளும் பிணியதை
கட்டினமான திமிர்வறட்சி
கடுந்தபிடிப்புக் காலெரிவு
கடலைநீட்டித் தேடியோடிக்
கலங்கும்பாரடி பள்ளீரே. (உகங)

100. சர்வசுரக் கஷாயம்.

பள்ளு.

அருளுஞ்சுக்க ரத்தைரோணி
ஆனகண்டு திப்பிலி
அடுத்ததேக்கு பிச்சைமுத்த
மதுவுமுக்கா வேளையும்
தெருளுங்கண்டங் காலிகோட்டம்
சிறந்த[illegible]கம் புடோலுடன்
சீந்திலுடனே சித்திரமூலம்
சேரக்கேளடி பள்ளீரே. (உகச)
சேருமுட்டி யிரண்டுவேம்பு
சிறுகாஞ்சொறி காந்தியும்
சிறுகுறிஞ்சா சிறுய்சித்துடன்
திறுவுங்கொத்த மல்லியும்

பேரிஞ்சோமங் தும்பைதுளசி
பெருத்ததோடை கோரையும்
பெருமரப்பட்டை குருவின்சாணி
பேசக்கேளடி பள்ளீரே. (உகரு)

பேசமதுரங் குப்பைமுசுக்கை
பெருத்தவேப்பம் நாக்குடன்
பெலத்தவெட்டி வேருமிலுப்பைப்
பூவுமரசம் பட்டையும்

பூசெங்கழுநீர் தூதுவளையும்
புரியுமுந்திரி யரிதகி
பொருந்தும்நெல்லி கிராம்பூவுடனே
போதக்கேளடி பள்ளீரே. (உகசு)

போதச்சோம்பு பொன்முசுட்டையும்
புகழும்பாவட்டை சங்குடன்
பொருந்துமுன்னை வெள்ளறுகுமே
பூண்டநொச்சிப் பட்டையும்

பாதிரியுடன் குமுழுஞ்செவியும்
பருத்தசிற்று மணக்கம்வேர்
பருமரமஞ்சள் திப்பிலிமூலம்
பகரக்கேளடி பள்ளீரே. (உ.கள)

பகருமஞ்சட்டி பெருமருந்துவேர்
பருத்தபிரப்பங் கிழங்குடன்
பாவகாய்க்கரணை வேருமந்த
வேளைவேளை வேருமே

நிகருமறுப துடனேநாலு
நீங்கிடாவகை யாவையும்

நேர்மையாக வேரடியரிடித்
தேடிச்சேரடி பள்ளீரே. (உகஅ)

தேடிவேரு வகையிருபலஞ்
சிறந்தகிழங்கு மொருபலஞ்
சிறப்பதாகக் கடைமருந்தெல்லாஞ்
சேரும்பலமு மொன்றரை

கூடிநறுக்கி யிடித்துஎடுத்துக்
கோதுவான போதுமே
கூடிகலசத் திட்டுப்பின்னும்
கூறக்கேளடி பள்ளீரே. (உகக)

கூறுமருந்து கழஞ்சிராறு
கோதில்லாத சட்டியில்
குருணிசலமும் விட்டெரித்துக்
குறுகக்காய்ச்சி யறச்சேருப்

சேரவிருபோ தருந்துமறுநாள்
செலுத்துமுதனாள் போலவே
சிறுகச்சிறுக வருந்தவருந்தச்
செப்பக்கேளடி பள்ளீரே. (உஉ0)

செப்புவேனின்னும் பேதிமிகுதி
சிறந்தமூழாயத் தூளதைச்
சிறப்பதாக வருந்துகியாழும்
சேர்த்தெரித்துக் கொடுத்திட

ஒப்பமாயிதின் படியருந்திட
உகந்துவருகும் வேளையில்
ஓடியொளிக்கும் பிணியைத்தானு
முகந்துகேளடி பள்ளீரே (உஉக)

உசந்தவாதி பித்தசுரமும்
ஒப்பில்லாத கபசுரம்
ஓதுவாயுவு சுரத்தின்சூலை
யுண்ணுங்கறடுப் பிடிப்புகள்

பாதக்குடைச்சல் சன்னிபாதம்
பருத்தசுரத்தின் வகையெலாம்
பறந்துபோமென அகத்தியவேதன்
பகர்ந்துவிட்டாண்டி பள்ளீரே. (உ௦உ)

## 101. உதிரக்கட்டுக்கு நஞ்சுக் கஷாயம்.

பள்ளு.

அகலுஞ்சுக்கு மரத்தைபிரண்டு
மடுத்தகடுகு மிரண்டுடன்
அசமதாகம் போளமாபொடி
அமைந்தபுட்டி கிட்டமுந்

திகலுமூலமுள்ளி கருங்கொள்
தேக்குரோணி விளங்கமும்
சேருமுக்காவேளை காட்டுச்
சீரமுங் கருஞ்சீரகம்

பகலும்வங்காள மஞ்சட்கடுக்காய்
பகர்ந்ததாணி சணல்வி[illegible]
பத்துமாளி வித்துங்கண்டு
பறங்கியுடனே பிரம்புமே

புகலுஞ்சித்திர மூலம்இசுரி
புகழ்வெள்ளறுகு தூதளை
பொரிநிலாவாரை சங்கின்மூலம்
பொதியமிளகு கரணையே. (உ௦௩)

க்ரணைமூங்கி விலைப்பிராணி
கதித்தகண்டங் கத்திரி
காணுமுள்ளி கஞ்சாங்கோரை
கழுதும்பை மலைவேப்பிலை

உரணுஞ்சாரணை மூக்குரட்டையும்
உற்றவேப்பம் புட்டையும்
உகந்தும் நாற்பத்தஞ்சில்கார
சாரம் பலங்களிரண்டீரை

பெறணிபத்திரி பிடியொன்றெடுநீ
பெலத்தவேரும் காற்பலம்
பிசகாதிவையே யிடத்துநறுக்கிப்
பெருத்தபாண்டத் தடைத்துமுக்

குறுணிசலத்தை விடுத்தூஅடுப்பைக்
கூட்டியெரித்து மூட்டியே
குறுகக்காய்ச்சிப் படியதாக்கிக்
கொடுக்கும்வகைகேள் பள்ளிரே. (உஉச)

கொடுநீயதனை யெடுநீவீசம்
குணமதாயிரு போதுமே
கொடுத்துவருக அடுத்தவுதிரங்
தடுப்படாமலே வெளிப்படும்

படும்படுதிரச் சூலைபக்கவாய்வு
பறக்குஞ்சூசிகா வாய்வுடன்
பருத்தமெய்யி லுருத்தசுவாசம்
படியுஞ்சுரோணித வாயுவுமே

மடியுஞ்சுரங்கள் வாய்வுகரப்பன்
வளர்ந்தமேக வறட்சியும்

வாங்குமேகப் பிடிப்புமுடக்கு
வலியுங்குத்தல் கன்றிடும்
தெடியபுளியும் புகையும்போக்கித்
தினமுமிதனை யறிந்திடத்
தீருஞ்சகலரோக முளதுந்
தீர்ந்துபோமடி பள்ளிரே. (உஉரு)

வாழ்த்து.

ஆனைமுகனும் வாழிகாணிளை
யோனுமுருகன் வாழிகாண்
அடுத்துமுருகன் வாழிகாணிவை
யெடுத்தபண்டிதர் வாழிகாண்
கோனுஞ்சிவனும் வாழிகாண்பறை
ஞானநீதி வாழிகாண்
குணமதாய்ச்சூதம் வாழிகாணிதை
யுணர்வாயுண்டவர் வாழிகாண்
ஞானமும்நீதி வாழிகாண்வாத
மானதங்கமும் வாழிகாண்
நலமதான கெந்திவாழி
பெலமாம்வாதி வாழிகாண்
வானப்பொதிகை தனிலுகந்தவர்
ஞானமான வகத்தியர்
வடிவதாக வாழிகாண்பள்ளுத்
திடமாய்ப்படிப்போர் வாழியே. (உஉசு)

அகஸ்தியர் பள்ளு இருநூறு
முற்றிற்று.



கடவுள் துணை.

# அகஸ்தியர்பள்ளு

## பொழிப்புரை விளக்கம்.

---

சகோதரர்களே! மேற்படி நாமம்பூண்ட இப்பொழிப்பை இங்கெடுத்த நேரிட்ட காரணம் கீழ்க்காணும் விஷயங்களால் மெல்லெனத் தெள்ளிதாய் விளங்கும். அகஸ்தியர் பள்ளு என்னும் இக்கிரந்தமானது சில செய்யுட்கள் அதிகத் தெளிவாகவும், சில செய்யுட்கள் கருதலாகவும் அமையப்பெற்றிருப்பதால், அனுபவசாலிகள் தெரிந்து கொள்ளக்கூடுமாயினும் மற்றவர்கள் இலேசாகத் தெரிந்துகொள்வது துர்லபம். இன்னும் அவற்றுள் அநேக பாகங்களில் நிறை, அளவு, செய்பாகம் முதலிய அநேக விஷயங்கள் திட்டமாகச் சொல்லப்படவில்லை. அவ்வகைகளும் அனுபவசாலிகளான வைத்தியர்கள், பண்பட்ட இரசவாதிகள், ஆகியவர்களுக்கு மாத்திரம் உபயோகப்படுமேயொழிய மற்றவர்களுக்கு அவ்வளவாகப் பிரயோசனப்படா. இன்னும்அதிற்சொல்லப்பட்டிருக்கிற பலவகைப் பாகங்களும் பல வி[illegible]களிலும் சிதைவுண்டிருக்கின்றன. ஒருவகைவியா[illegible]ச் சிகிச்சையை நிச்சயிக்க வேண்டுமானால் அக்கிரந்தத்தை ஆதியோடந்தமாகப் பார்க்க ஆவசியகமாகும். இவ்விதமே இரசவாத சம்பந்தமான பலமுறைகளும் பலவிடங்களிற் சிதைவுண்டிருப்பதால் ஒவ்வொன்றின் முன்பின் தொடர்ச்சியைக்கண்டு கொள்வதற்கு அக்கிரந்தத்தை ஆதியோடந்தமாக நிதானித்துப் பார்க்கவேண்டியதா

ரும். அதனாற் காலதாமதமும் மனச்சோர்வு முண்டாக ஏதுவாகும். அவ்விதபாகங்களை யெல்லாம் ஒருவாறு வரிசையாகவும், முறைக்கிரமமாகவும் எழுதுவதினால் கற்றோர் மற்றோர் முதலியயாவரும் எவ்விதவருத்தமுமின்றி அதிகச்சுலபமாகத் தெரிந்துகொள்ளுதற்கு மார்க்கமாகும்.

அக்கிரந்தமானது அனுபவசாலிகளான வைத்தியர்கள், கைதேர்ந்த இரசவாதிகள் முதலியவர்களின் உபயோகத்திற்கென உத்தேசிக்கப்பட்டிருக்கினும் நம்மால் வெளிப்படுத்தப்படும் ஒவ்வொரு கிரந்தத்தையும் கைக்கொண்டு நம்மைப் பலவிதத்தாலும் ஆதரித்தும் உற்சாகப்படுத்தியும்வரும் ஒவ்வொரு சுதேசாபிமானிகளுக்கும் அது பிரயோசனப்படவேண்டுமென்பது நமது கருத்து.

பலகாள் அனுபவசர்லிகளான வல்லபண்டிதர்களும் பின்வாங்கும் கஷ்டசாத்தியமான பலவியாதிகளின் சிகிச்சைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. இரசவாதஞ் செய்யவேண்டுமென்னும் பேராசைப் பேய்தலைக்கேறிவழிதுறையின்றித்தாங்கள் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த பொருளை அவமே செலவு செய்து தங்கள் வாழ்நாட்களை வீணாட்களாக்காமலும், 'அருமையான மூலிகைகளுக்காக ஹிமயபருவதம், பொதிகைமலை, பச்சைமலை முதலியவிடங்களுக்குப் போய்த்தேடித் திரியாமலும் இலகுவாய்ச் செய்யக்கூடியவைகளும் கடைச்சரக்குகளே சம்பந்தமானவைகளுமான பல இரசவாத முறைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆகையால் இக்கிரந்தமானது மிகவும் முக்கியமும் அபூர்வமுமான கிரந்தங்களில் ஒன்றென்பதிற்

சந்தேகமில்லை. ஆனதுபற்றி இக்கிரந்தமானது கூடி னவரையில் விபரமாக இருக்கவேண்டியது மிகவும் ஆவசியகம்.

இன்னனபலவகைக்காரணங்களினால் அதிற்சொல்லப்படும் முறைகளில் கரவானவைகளைத் தெளிவாகவும், மறைவானவைகளை வெளியாகவும், விடுபட்டவைகளைச் சேர்த்தும், அனாவசியமானவைகளை நீக்கியும், நிறை, அளவு முதலியவைகளை விளக்கியும் நமது அனுபவப்படியும் பெரியோர்களின் கைபாக முறைப்படியும் தெளிவாக எழுதப்பட்டிருக்கின்றன. ஆகையால் இது யாவருக்கும் பிரயோசனப் படுமென்பதில் எவ்வித ஆக்ஷேபணையுமில்லை.

ஆகையால் சுதேசாபிமானமுள்ள கனவான்களும் மற்றவர்களும் அடியேனாலியற்றப்பட்டவைகளும் வெளிப்படுத்தப் பட்டவைகளுமான பலகிரந்தங்களையு மங்கீகரித்து அடியேனைப் பலவிதத்திலுங் கனப்படுத்தி வருவதுபோல் இந்த அகஸ்தியர் பள்ளு என்னும் கிரந்தத்தையும் இனியச்சிடப்படுங் கிரந்தங்களையும் அங்கீகரித்து ஆதரித்து வரும்படியாகக் கேட்டுக்கொள்கின்றேன்.

இக்கிரந்தத்தை ஆதியோடந்தமாகக் கவனித்து இதிற்கண்ட முறைப்படியே செய்து கொள்பவர்கள் மகாவியாதிகளான பலவியாதிகளைத் தீர்க்கவும் இரசவாதத்தின் வழிதுறையின்றி நேரிடும் வீண்செலவை மீத்துக்கொள்ளவும் இது ஒரு பெருத்த கருவியாயிருக்கும்.

ஆகையால், நோயற்றவாழ்வையும் நன்மார்க்க செல்வத்தையும் விரும்பும் ஒவ்வொரு அறிவாளிக

ளும் தங்களுக்கும் தங்கள் மனைவி, மக்கள் முதலிய யாவருக்கும் பிரயோசனப்படும்படி இதனை ஆதியோடந்தமாகக் கவனித்து இதன்படி நடந்துகொள்ள வேண்டுமென்பதே அடியேன் கோரிக்கை.

ஆகையால், இக்கிரந்தத்திற்சொல்லப்பட்டிருக்கிற பற்பலவகை வைத்திய முறைகளையும், வாதமுறைகளையும் கவனித்து அவற்றின்படி செய்து அனுபவிப்பவர்கள் கடவுளினது கிருபையால் கஷ்டமாகிய மகா ரோகங்களினின்றும் நீக்கப்பட்டு இகபர சுகானுபவங்களை யுடையவர்களாய் இம்மை மறுமைக்குரிய பயன்களை யடைந்து நீடூழிவாழ்வார்களாக.

ஆமீன்.

---

## 1. சுரக் கஷாயம்.

மேற்றோல் சீவின சுக்கு விராகனெடை-௧௨, உலர்ந்த கண்டங்கத்திரி சமூலம் விராகனெடை - ௧௧, சிறுதேக்கு விராகனெடை-௧௦, அரிசித்திப்பிலி விராகனெடை-௯, கோஷ்டம் விராகனெடை-௮, இலாமிச்சம்வேர் விராகனெடை-௭, கோரைக்கிழங்கு விராகனெடை-௬, சிற்றாமுட்டிவேர் விராகனெடை-௫, பற்படாகம் விராகனெடை-௪, நிலவேம்பு விராகனெடை-௩, சிறுகாஞ்சோறிவேர்ப்பட்டை விராகனெடை-௨, மேற்புறணி நீக்கிய சீந்திற் கொடி (உலர்த்தினது) விராகனெடை-௧.

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளை யெல்லாம் கல்லுரலிலிட்டு நைபச் சிதைத்து வைத்துக் கொள்ளவும். இதில் ஒன்றரைப் பலம் தூளையெடுத்துக்

காற்படி ஜலத்திற் போட்டு நான்கிலொரு பாகமாகச் சுண்டவைத்திறக்கி வடிகட்டிப் பானஞ் செய்விக்கவும். இவ்விதம் வேளை ஒன்றுக்கு ஒன்றரைப் பலமாகக் கஷாயஞ்செய்து உபயோகிக்க வேண்டும். இவ்விதம் காலைமாலையிரண்டுவேளையுஞ் செய்து வந்தால், வாதசுரம், கபசுரம், வாதகபசுரம், ஜலதோஷம், நீர்க்கோர்வை, தேகக் கடுப்பு முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—வியாதிபலம், தேகபலம் ஆகியவைகளுக்குத் தகுந்தபடி இலகு ஆகாரமாக உபயோகிக்கவேண்டும். பா-நி-212.

---

## 2. ௸ வேறு.

சங்கம் வேர்ப்பட்டை, சிற்றாமுட்டிவேர், பேராமுட்டிவேர் இவை வகைக்குப் பலம்-க, மேற்றோல் சீவின சுக்கு, பறங்கிச் சக்கை, முக்காவேளை, கிரந்திநாயகவேர்ப்பட்டை இவை வகை-க க்குப் பலம்-௯, சன்னராஷ்டம், பற்படாகம், பிரப்பங்கிழங்கு, சிறுதேக்கு, -உலர்த்தின வெள்ளறுகு இவை வகை-க-க்குப் பலம்-௨, நிலஆவாரை பலம்-வ.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் உரலிலையை இடித்து வைத்துக் கொள்ளவும். வேளையொன்றிற்கு ஒன்றரைப்பல வீதமாக எடுத்துக் காற்படி ஜலத்திற் போட்டு நான்கிலொரு பாகமாகச் சுண்டவைத்துக் காய்ச்சி இறக்கி வடிகட்டிப் பானஞ் செய்விக்க வேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டு வேளையுஞ் செய்துவர, வாயுசம்பந்தமான சுரங்கள், தேகத்திமிர், கைகால்திமிர், தேக வறட்சி, கைகால் பி

டிப்பு, இடுப்புப் பிடிப்பு, கைகால் எரிவு, மெய்யெரிவு முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—வியாதி கடினமா யிருந்தாற் புளியை நீக்கி வைக்கவும். பா. நி. 213.

---

3. சர்வசுரக் கஷாயம்.

(a) மேற்றோல் சீவின சுக்கு, கடுகுரோகணி, சன்னராஷ்டம், அரிசித்திப்பிலி, சிறுதேக்கு, செஞ்சந்தனம், கோஷ்டம், பற்படாகம், பேய்ப்புடல்.நிலவேம்பு, நன்னாரி, சீமை நிலவேம்பு, துராலெலை, கொத்துமல்லி, வித்தை நீக்கின பேரிச்சங்காய், ஓமம், கஞ்சாங்கோரை, பெருமரப்பட்டை, குராசாணியோமம், அதிமதுரம், சதகுப்பை, உலர்த்தின வேப்பீர்க்கு, உலர்த்தின இலுப்பைப்பூ, அரசம்பட்டை, விதைநீக்கின திராக்ஷப்பழம், மஞ்சட் கடுக்காய்த்தோல், நெல்லிவற்றல், இலவங்கம், சோம்பு, உலர்த்தின வெள்ளறுகு, வெண்ணொச்சிப் பட்டை, செவ்வியம், கண்டத்திப்பிலி, மஞ்சிட்டி இவை வகை-க-க்குப் பலம்-கஉ.

(b) முக்காவேளைவேர், கண்டங்கத்திரிவேர், சித்திரமூல வேர்ப்பட்டை, சிற்றாமுட்டி வேர்ப்பட்டை, பேராமுட்டி வேர்ப்பட்டை, சிறுகாஞ்சொறி வேர்ப்பட்டை, தும்பைவேர்ப்பட்டை, துளசிவேர்ப்பட்டை, ஆடாதோடை வேர்ப்பட்டை, முசுமுசுக்கை வேர்ப்பட்டை, வெட்டிவேர், விலாமிச்சம்வேர், பூசணிவேர், தூதுவளை வேர்ப்பட்டை, பொன்முசுட்டை வேர்ப்பட்டை, பாவட்டை வேர்ப்பட்டை, சங்கம்வேர்ப்பட்டை, முன்னை வேர்ப்பட்டை, பாதிரி வேர்ப்பட்

டை, நிலக்குமிழ் வேர்ப்பட்டை, சிற்றுமணக்கம் வே. ர்ப்பட்டை, பெருமருந்துப் பட்டை, நல்லவேளை வேர்ப்பட்டை, நாய்வேளை வேர்ப்பட்டை, இவை வகை-க-க்குப் பலம்-உ.

(c) உலர்த்தின கோரைக்கிழங்கு, உலர்த்தின சீந்திற் கிழங்கு, உலர்த்தின செங்கழுநீர்க் கிழங்கு, உலர்த்தின மரமஞ்சட்கிழங்கு, பிரப்பங்கிழங்கு, * சுத்திசெய் துலர்த்தின கருணைக் கிழங்கு இவை வகை-க-க்குப் பலம்-க.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாய்ச் சேர்த்து நைய இடித்துச் சிதைத்துப் புதுப்பாண்டத்தில் வைத்துக்கொள்ளவும். இதில் வேளை-க-க்கு ஒன்றரைம்பலம் வீதமாக எடுத்துக் காற்படி ஜலத்திற்போட்டு நான்கிலொரு பாகமாகச் சுண்டவைத் திறக்கி வடிகட்டித் திப்பிநீக்கிக் கஷாயத்தைச் சாப்பிடவும். இவ்விதம் காலைமாலை யிரண்டுவேளையும் பானஞ்செய்யவேண்டும். ஒவ்வொருவேளையும் புதிதுபுதிதாகச் செய்துகொள்ள வேண்டும். இப்படிச் செய்துவந்தால், வாதசுரம், பித்தசுரம், கபசுரம் முதலிய எல்லாவகைச்சுரங்களும், சன்னிபாதங்களும் தீரும். எல்லாவகை வாயுக்களும் தீரும். சூலை, புண்கள், கரடுகள், பிடிப்புகள், கால்குடைச்சல் முதலிய அநேக வியாதிகள் தீரும்.

பத்தியம்:—வியாதிபலம், தேகபலம் ஆகியவைகளுக்குத் தகுந்தபடி சமையோசிதம்போல் ஏற்படுத்

---

* இதனைப் புளித்தமோரில் வேகவைத்து உலர்த்திக் கொள்வதே இதன் சுத்தியாம்.

திக்கொள்வது வைத்தியர்களின் கடமையாம். பா-பி. 214. முதல் 222 வரை.

குறிப்பு.

இவ்வளவு சரக்குகளையும் அவசரசமான காலங்களில் தேடிச் சேகரிப்பது சில சமையங்களிற் கஷ்டமாகும். ஆகையால் சாவகாசமான காலங்களில் இச்சரக்குகளைச் சேகரித்து நன்று யிடித்துச் சிதைத்து ஆறுபடி ஜலம்வார்த்து இருபத்து நான்கு மணிநேரம் ஊறவைத்து வாலையிலிட்டு நாலுபுட்டி திராவகம் இறக்கி வைத்துக்கொள்ளவும். வேளை யொன்றுக்கு ஒரு அவுன்ஸ் முதல் இரண்டு அவுன்ஸ் வரையில் உபயோகித்துவர,மேற்கண்ட ரோகங்களெல்லாம் தீரும். இவ்விதம் சித்தப்படுத்தி வைத்துக்கொண்டால் எந்தச் சமையத்திலும் உபயோகிப்பதற் கேதுவாகும்.

---

## 4. கபக் கஷாயம்.

மஞ்சட் கடுக்காய்த்தோல், நெல்லிவற்றல், தான்றிக்காய்த்தோல், மேற்றோல் சீவின இஞ்சி இவை வகை-கஃக்கு விராகனெடை-ச, இவை யெல்லாவற்றையுஞ் சிதைத்து இரண்டு ஆழாக்குஜலத்திற்போட்டு அரை ஆழாக்காகச் சுண்டவைத்து இறக்கி வடிகட்டித் திப்பிநீக்கிக் கீழ்க்காணும் மேன்பொடியைத் தூவிப் பானஞ்செய்ய வேண்டும்.

மேன்பொடி:—மேற்றோல் சீவின சுக்கு, மிளகு, அரிசித்திப்பிலி, இவற்றைத் தனித்தனி வறுத்திடித்த சூரணம் விராகனெடை-வ, இம்மூன்றையும் ஒன்றாகக் கலந்து கொள்வதே மேன்பொடியாம்.

இந்த மேன்பொடியை முன் சித்தப்படுத்தி வை த்திருக்கிற கஷாயத்திற் போட்டுக்கலக்கிப் பானஞ் செய்யவேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டுவே ளையும் மூன்றுநாள் பானஞ்செய்துவர, சிலேற்பன ச ம்பந்தரோகம், இளைப்பு, சுரம், க்ஷயம் முதலியரோ கங்கள் தீரும். பா-கெ-67.

---

## 5. சூரத்துக் கஷாயம்.

வெண்சந்தனம், இலாமிச்சைவேர், வெட்பாலை யரிசி, கோரைக்கிழங்கு, மேற்றோல் சீவின சுக்கு இ வை வகை-க-க்கு விராகனெடை-ந, சீனிச்சருக்கரை ப லம்-௨.

செய்முறை:—மேற்கண்ட சரக்குகளை நன்றாய்ச் சிதைத்து இரண்டு ஆழாக்கு ஜலத்திற்போட்டு அ ரை ஆழாக்காகச் சுண்டவைத்து இறக்கி வடிகட்டித் திப்பிநீக்கின கஷாயத்தில் மேற்படி சீனிச்சருக்கரை யைப்போட்டுக் கலக்கிப் பானஞ்செய்ய வேண்டும். இவ்விதம் காலை மாலை இரண்டுவேளையும் செய்துவர ஜலதோஷம், சுரம், வாயு, பித்தகாமாலை, கண்ணில் நீர்வடிதல் முதலிய ரோகங்கள் தீரும். பா-கெ-91.

---

## 6. நஞ்சுக் கஷாயம்.

(a) மேற்றோல் சீவினசுக்கு, சன்னராஷ்டம், தும்பராஷ்டம், கடுகு, வெண்கடுகு, ஓமம், கரியபோ ளம், அரபொடி, துராலெலைப், சீமை நிலவேம்பு, சி ட்டம், கண்டத்திப்பிலி, வெள்ளைப்பூண்டிதழ், கரு ங்கொள், சிறுதேக்கு, கடுகுரோகணி, வாய்விளங்கம்

மூக்காவேளை, காட்டுச்சீரகம், கருஞ்சீரகம், மரமஞ்சள், மஞ்சட் கடுக்காய்த்தோல், தான்றிக்காய்த்தோல், சணல்விதை, பறங்கிப்பட்டை, பிரப்பங்கிழங்கு, நில ஆவாரை, மிளகரணை, புளியரணை, கண்டங்கத்திரி, நீர்முள்ளி, கஞ்சாங்கோரை, கௌதும்பை, வெள்ளைச் சாரணைக்கிழங்கு, வேப்பம்பட்டை, வெள்ளறுகு, உலர்த்தின தூதுவளை இவை வகை-க-க்குப் பலம்-உ0,

(b) மூங்கில் இலை, மூங்கிற் புறணி, மலை வேப்பிலை இவை வகை-க-க்குப் பலம்-க.

(c) சித்திரமூல வேர்ப்பட்டை, இசிரிவேர், சங்கம்வேர்ப்பட்டை, மூக்குரட்டைவேர் இவை வகை-க-க்குப் பலம்-ச.

செய்முறை:—இவையெல்லாவற்றையும் ஒன்றாய்ச்சேர்த்து நைய இடித்துப் புதுப்பாண்டத்தில் வைத்துக்கொள்ளவும். வேளையொன்றுக்கு அரைப்பலம் வீதம் எடுத்து இரண்டு ஆழாக்கு ஜலத்திற்போட்டு அரை ஆழாக்காகச் சுண்டவைத்து வடிகட்டித் திப்பிநீக்கிப் பானஞ்செய்விக்க வேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டுவேளையும் உபயோகித்துவர, சூதகபந்தம், சூதகச்சூலை, பக்கவாயு, சூசிகாவாயு, சுவாசரோகம், சோணிதவாயு, சுரரோகங்கள், வாயுவுசம்பந்த ரோகங்கள், கரப்பான் ரோகங்கள், மேகவறட்சி, மேகப்பிடிப்பு, முடக்கு ரோகங்கள், தேகவலி, தேகங்குத்தல் முதலிய பலரோகங்கள் தீரும்.

பத்தியம்:—புளி, புகை ஆகியவைகளை நீக்கவேண்டியது. சமயோசிதம்போல பத்தியம் எற்படுத்திக்

கொள்ளவேண்டியது வைத்தியர்களின் கடமையாம். பா-ரு-223 முதல் 225 வரை.

குறிப்பு.

இதுபோன்ற இன்னொரு முறையானது நமது பரம்பரையில் வழங்கப்பட்டு வருவதால் அம்முறையையும் இங்கெழுதுவாம் அம்முறையிது:—

---

நஞ்சுக்கஷாயம் (வேறு.)

மேற்றோல் சீவினசுக்கு, ஓமம், சதகுப்பை, பறங்கிப்பட்டை, பிரப்பங்கிழங்கு, சிறுதேக்கு, சங்கம் வேர்ப்பட்டை, முக்காவேளை, மிளகரணை வேர்ப்பட்டை இவை வகை-க-க்குப் பலம்-உ, சன்னராஷ்டம், கண்டத்திப்பிலி, உலர்த்தினவெள்ளறுகு, வாய்விளங்கம், மரமஞ்சள், இசிரிவேர், கடுகுரோகணி; ஆளிவிதை, தூராலெலை, சீமை நிலவேம்பு, சணல்விதை, கருங்கொள்ளு, இவை வகை-க-க்குப் பலம்-ய, உலர்த்தின கண்டங்கத்திரி சமூலம் பலம்-உ.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் சேர்த்திடித்துப் புதுப்பாண்டத்தில் வைத்துக் கொள்ளவும். வேளை ஒன்றுக்கு அரைப்பலம் வீதமாக-உ-ஆழாக்கு ஜலத்திற்போட்டு நான்கிலொருபாகமாகச் சுண்டவைத்து வடிகட்டிப் பானஞ் செய்விக்கவும். இவ்விதம் செய்துவர, சூதகசம்பந்தமான எல்லா ரோகங்களும் தீரும். பிரசவித்து அழுக்கு தடைபட்டிருந்தால், இதனை யுபயோகிக்க உடனே குணமுண்டாகும்.

இது முன் முறையைப் பார்க்கினும் அதிக சுலபமானதா யிருக்கினும் சற்றேறக்குறைய முன்முறையிற் சொல்லப்பட்ட ரோகங்களெல்லாம் தீரும்.

---

## 7. சகல சுரக் குளிகை.

அரிசித் திப்பிலிச்சூரணம் விராகனெடை-ரு, சுத்திசெய்த ஜாதிலிங்கம் விராகனெடை-ரு, சுத்திசெய்த நர்பிச்சூரணம் விராகனெடை-க, எலுமிச்சம்பழச்சா று செல்லத்தக்க அளவு.

செய்முறை:— முன் மூன்று சரக்குகளையுங் கல்வத்திலிட்டு ஓர் ஜாமநேரம் அரைத்துக் கலந்து பிறகு மேற்படி சாற்றைச் சிறுகச்சிறுகவார்த்து இரண்டுசாமமரைத்துப் பயறளவுமாத்திரைகள் செய்துநிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும். உ௨ விராகனெடை சீரகத்தை ஒரு ஆழாக்கு ஜலத்திற்போட்டு-வ-ஆழாக்காகச் சுண்டவைத்து வடிகட்டின கஷாயத்தில் மேற்படி மாத்திரைகளில் ஒன்றை இழைத்துப் பானஞ்செய்விக்க வேண்டும். இவ்விதம் காலை மாலை யிரண்டுவேளையும் செய்துவர எல்லாவகைச் சுரங்களும் தீரும். பா-செ-141.

---

## 8. அஷ்டசுரக் குளிகை.

சுத்திசெய்த இரசம், சுத்திசெய்த கெந்தகம், சுத்திசெய்த இரசகர்ப்பூரம், சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு, சாதிக்காய் இவை வகை-க-க்கு விராகனெடை-உ௨, சோற்றுக் கற்றாழைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையும் கெந்தகத்தையுங் கல்வத்திலிட்டரைத்து நன்ருய்க் கறுத்தபின்பு பூரத்தைச் சேர்த்தரைத்துப் பிறகு வாளத்தைச் சேர்த்தரைத்து பிறகு ஜாதிக்காயைத் தூள்செய்து சேர்த்து அரைத்து எல்லாம் நன்ருய் மசிந்தபின்பு மேற்படி சோற்றுக் கற்ருழைச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமமரைத்துப் பயறளவு மாத்திரைகள் செயது நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க.

அனுபானம்:—பனைவெல்லம், நல்லவெல்லம், இவைகளுக்குள் மாத்திரையைப் பொதிந்து விழுங்க வேண்டும்.

உபயோகம்:—வயிற்றிலுள்ள துர்நீர்களைநீக்கி எல்லாவகை சுரங்களையும் கண்டிக்கும்.

இதனை பேதி மாத்திரையாகவும் உபயோகிக்கலாம். தேக சுபாவத்திற்குத் தகுந்தபடி இரண்டு மூன்று மாத்திரைகளும் கொடுக்கலாம். இதன் பிரமாணத்தை அனுபவத்தால் நிச்சயித்து அறிந்துகொள்ளவேண்டும். பா. செ. 142.

## குறிப்பு

இந்த மாத்திரையை அரைக்கும்போது அரைவிராகனெடை கருவேலம்பிசின் சூரணத்தைச் சேர்த்துக் கொண்டரைத்தால் மாத்திரைகள் உடைந்து போகாமல் பக்குவமாயிருக்கும். பிசின் சேர்க்காவிட்டால் மாத்திரைகள் நொறுங்கித் தூளாகிவிடும். மாத்திரையுருட்டப் பதமாயிருக்கும்.

## 9. மாறல் சுரக் குளிகை.

சுத்திசெய்த வெள்ளைப்பாஷாணம், சுத்திசெய்த அரிதாரம், சுத்திசெய்த லிங்கம் இவை வகை-க-க்கு விராகனெடை-க, மிதிபாகல் இலைச்சாறு செல்லத் தக்க அளவு.

செய்முறை:—முதலில் அரிதாரத்தைக் கல்வத்திலிட்டு நன்றாய்ப் பொடித்துப் பிறகு வெள்ளைப்பாஷாணத்தைச் சேர்த்தரைத்துப் பின்பு லிங்கத்தைச் சேர்த்தரைத்து மூன்றும் ஒன்றாய் மிஸ்ரமித்தபின்பு மேற்படி பாகல் இலைச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து நான்கு சாமமரைத்துச் சிறுபயறளவு மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-க.

அனுபானம்:—பசுமோர் கால்ஆழாக்கில் மாத்திரையைக் கரைத்துப் பானஞ் செய்விக்கவேண்டும். சமயோசிதம்போல் காலையில் ஒருவேளை அல்லது காலை மாலை யிரண்டுவேளையும் உபயோகிக்கலாம்.

உபயோகம்:—மாறல் சுரம், குளிர்சுரம் ஆகியவைகள் தீரும்.

பத்தியம்:—பசுமோர்ச்சாதம், பசுமோர் ஆகியவைகளும் பச்சைப்பயற்றை வறுத்துப் பச்சையரிசியுடன்சேர்த்துக் காய்ச்சின கஞ்சிவகைகளும் ஆகும்.

பா. நீ. 143.

### குறிப்பு.

இந்த மாத்திரையால் சிலருக்கு வாந்தி யுண்டாவதுண்டு. ஆகையால் இதனைச் செய்த ஆறுமாதத்திற்

குப் பின்பு உபயோகித்தால் அவ்விதம் வாந்தியுண்டாக ஏதுவிராது. இதனை அனுபவசாலிகள் தேகக் கூறறிந்து உபயோகிக்க வேண்டியதே கிரமம். அனுபவமில்லாதவர்கள் இதனை உபயோகிக்காம லிருப்பது உத்தமம்.

---

## 10. சுர மாத்திரை.

பொரித்த வெண்காரம் விராகனெடை-௪, கிளிஞ்சிலை வேகவைத்த சுண்ணும்பை வஸ்திரகாயஞ் செய்த தூள் விராகனெடை-௪, எலுமிச்சம் பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி யிரண்டையுங் கல்வத்தி விட்டு மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுக விட்டு ஒரு சாமமரைத்து மிளகுப் பிரமாண மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-உ.

அனுபானம்:—ஒரு விராகனெடை மிளகை வறுத்துத் தூள் செய்து கால் ஆழாக்கு வெந்நீரிற் போட்டுக் கலக்கி மேற்படி மாத்திரைகளை யிழைத்துப்பானஞ் செய்விக்கவும். இவ்விதம் காலைமாலை யிரண்டு வேளையும் செய்யலாம்.

உபயோகம்:—எல்லாவகை சுரங்களும் தீரும்.

பா-ரெ-147.

---

## 11. சுரப்புகை.

ஆமையோடு, வெள்ளைப் பூண்டுத்தோல், யானை நகம், அண்டங் காக்கை யிறகு இவை வகைக்குச் சமனெடை.

இவை யெல்லாவற்றையும் இடித்துத் தூள்செய்து விராட்டித் துண்டைக் கொளுத்திப் புகையடங்கின பின்பு அதில் மேற்படி சூரணத்தில் இரண்டொரு விரா்கனெடை போடப் புகையுண்டாகும். அந்தப்புகையை ரோகியின் முகத்திற் படும்படி செய்ய எல்லா வகை சுரங்களும் தீரும். பா-ரெ-51.

---

## 12. சுரப்புகை. வேறு.

கலைமான் இலத்தி, மயிலிறகு, பாம்புச்சட்டை, குதிரைக் குளம்பு, மாட்டுக்குளம்பு, பன்றிக்குளம்பு, வெள்ளைப் பூண்டுத்தோல், தேன்மெழுகு, இந்துப்பு, பச்சைசாந்தித்தோல், இவை வகை ஒன்றுக்குச் சமனெடை.

இவை யெல்லாவற்றையும் நன்று யிடித்துத்தூள் செய்து மேற்கண்ட முறைப்படி செய்ய எல்லாவகைச் சுரங்களும் தீரும். பா-ரெ-56.

---

## 13 சிந்தாமணிக் குளிகை.

சுத்திசெய்த நாபி, சுத்திசெய்த இரசம், சுத்தித்த கெந்தகம். சுத்திசெய்த வெண்காரம், சுத்திசெய்த ஜாதிலிங்கம், பொரித்த பெருங்காயம். வறுத்துச் சூரணித்த திப்பிலிச் சூரணம் இவை வகை-க-க்குச் சமனெடை, எருக்கம்பால் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையும் கெந்தகத்தையும் கல்வத்திலிட்டு நன்றாய்க் கறுக்கிற வரையிலரைத்து எருக்கம்பாலைச் சிறுகச் சிறுக விட்டு இரசம் மடிந்துபோகிற வரையிலரைத்துப் பிறகு லிங்கத்தையும் வெண்காரத்தையும் சேர்த்தரைத்துப் பிறகு மற்றச் சரக்குகளையுஞ் சேர்த்து மேற்படி பாலைச் சிறுகச்சிறுகவிட்டு மூன்று சாமமரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகள்செய்து வைத்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-க.

அனுபானம்:—பசுவின்பால், இஞ்சிச்சாறு, சீரகக் கஷாயம், சுக்குக் கஷாய முதலியனவுகளாம்.

உபயோகம்:—எல்லா வகைச் சுரங்களும், சன்னி வகைகளும் தீரும். பா-செ-146.

## குறிப்பு.

இதன் மூலத்தில் கெந்தகம் சொல்லப்பட வில்லையாயினும் அனுபவத்தில் கெந்தகம் சேர்த்துச் செய்யப்பட்டு வருகின்றபடியால் அனுபவப்படியே யிங்கெழுதப்பட்டிருக்கிறது.

---

## 14. வாதசன்னிக் குளிகை.

சுத்திசெய்த கெந்தகம், சுத்திசெய்த இரசம், சுத்திசெய்த நாபிச்சூரணம், பொரித்த வெண்காரம், மிளகுச் சூரணம், இவை வகை ஒன்றுக்கு விராகனெடை-உ௰, ஊமத்தனிலைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையும் கெந்தகத்தையுங் கல்வத்திலிட்டு நன்றாய்க் கறுக்கிறவரையி லரைத்து

பிறகு மற்றச் சரக்குகளையுஞ் சேர்த்து அரைமணி நேரம் அரைத்து நன்றாய் மிஸ்ரமான பின்பு மேற் சொல்லப்பட்டிருக்கிற ஊமத்தனிலைச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து-ச-சாமநேர மரைத்து குன்றிமணிப் பிரமாண மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ.

அனுபானம்:—இஞ்சிச்சாறு, சுக்குக் கஷாயம் முதலியவைகளாம்.

உபயோகம்:—வாதசன்னி முதலிய பல சன்னி ரோகங்கள் தீரும். பா-செ-144.

குறிப்பு.

இந்த மாத்திரையினால் மயக்கமுண்டாகும். ஆகையால் தேக சுபாவமறிந்து உபயோகிக்க வேண்டியது.

---

5. சன்னிசுர மாத்திரை.

சுத்திசெய்த இரசம், சுத்திசெய்த கெந்தகம், மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், தான்றிக்காய்த் தோற் சூரணம், நெல்லிவற்றற் சூரணம். இவை வகை -க-க்கு விராகனெடை-க, சுத்திசெய்த வாளம் விராகனெடை-ந. எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையுங் கெந்தகத்தையுங் கல்வத்திலிட்டு நன்றாய்க் கறுக்கிற வரையிலரைத்து மற்றச் சூரணங்களையுஞ் சேர்த்து அரைத்து மிஸ்ர

மித்துப் பிறகு வாளக்தைச் சிறுகச் சிறுகச் சேர்த்த ரைத்து எல்லாம் ஒன்ருக நன்ருய் மிஸ்ரமானபின்பு எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுகவிட்டு நான்கு சாமமரைத்துச் சிறுபயறளவு மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ.

அனுபானம்:—இஞ்சிச்சாறு, துளசிச்சாறு.

உபயோகம்:—சன்னிவகைகள், சுரவகைகள் ஆகியவைகள் தீரும். சுரம் சன்னி முதலியவைகளாற் காணுந் தாகமுந் தீரும். பா-நி-115.

---

## 16. பேதி மாத்திரை.

சுத்திசெய்த இரசம், சுத்திசெய்த கெந்தகம், சுத்திசெய்த நாபிச்சூரணம், சுத்திசெய்த அரிதாரம், பொரித்த வெண்காரம், வெட்டிவேர்ச் சூரணம், மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், தான்றிக்காய்த்தோற் சூரணம், நெல்லிவற்றற் சூரணம், மேற்றோல்சீவின சுக்குச் சூரணம், மிளகுச்சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம் இவை வகை-க-க்கு வராகனெடை-க, சுத்திசெய்த நேர்வாளப் பருப்பு விராகனெடை-சு, கையாந்தகரைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையுங் கெந்தகத்தையுங் கல்வத்திலிட்டு நன்ருய்க் கறுக்கிற வரையிலரைத்து எடுத்துக் கொள்ளவும். பிறகு தாளகத்தைத் தனியே கல்வத்திற்போட்டு மைபோற் பொடித்து எடுத்துக்கொள்ளவும். பிறகு எல்லாச்சரக்குகளையும் ஒன்ருகச் சேர்த்து ஒருமணி நேரமரைத்து எல்லாம் ஒன்

று கூ மிஸ்ரமான பின்பு வாளத்தைச் சிறுகச் சிறுகச் சேர்த்தரைத்து அதுவுமசிந்த பின்பு கையாந்தகரைச் சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து நான்குசாமமரைத்து அவரைப் பயறளவு மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ.

அனுபானமும், உபயோகமும்:—தேகசுபாவத்திற்குத் தகுந்தபடி இரண்டு அல்லது, மூன்று மாத்திரைகளை மோரில் அனுபானித்துக் கொடுக்க நன்றாய்ப் பேதியாகி வயிற்றிலுள்ள துர்நீர்களெல்லாம் வெளிப்படும்.

கையாந்தகரைச் சாறு விராகனெடை-உ, தேன் விராகனெடை-க, இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்படி யிரண்டு மாத்திரைகளை யனுபானித்துண்ண பித்த சுரங்கள்போகும்.

வெண்ணொச்சியிலைச் சாறு விராகனெடை - உ, தேன் விராகனெடை-க. இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட மாத்திரைகளைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண வாத சுரங்கள் போகும்.

சீனிச் சர்க்கரை விராகனெடை-ஒ, தேன் விராகனெடை-ஒ. இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட மாத்திரைகளைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண அறுவகைச் சுரங்கள் தீரும். பா-நி-9-10.

---

## 17. சன்னிக் கலிக்கம்.

வாகைவிதைச் சூரணம், மேற்றோல் சீவினசுக்குச் சூரணம், கடுகு, இந்துப்பு, இவை வகை-க-க்குப்

பல்ம்-௨, முருங்கைப் பட்டைச்சாறு செல்லத்தக்க அளவு, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—கடுகைக் கல்வத்திலிட்டு அரைத்துத் தூள்செய்து பிறகு மற்றச்சரக்குகளையும் சேர்த்தரைத்து மிஸ்ரமித்து முருங்கைப் பட்டைச் சாற்றை சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வழித்து ஒருபீங்கானிலிட்டு உலர்த்திக் கொள்ளவும். பிறகு கல்வத்திலிட்டுப் பொடித்து எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து நீண்ட மாத்திரைகளாகச் செய்து உலர்த்தி வைத்துக் கொள்ளவேண்டும்.

உபயோகம்:—இந்த மாத்திரையை முலைப்பாலிலிழைத்து ஒரு அரிசிப் பிரமாணம் கண்ணிலிட வேண்டும். இப்படி சன்னிமூர்க்கமா யிருக்குங் காலங்களிற் கலிக்கமிட சன்னிரோகம் தீரும். பா-நி-61.



## 18. ஷை (வேறு.)

அரிசித்திப்பிலிச் சூரணம், பொரித்த பெருங்காயச் சூரணம், மிளகுச் சூரணம், இந்துப்புத்தூள் இவை வகை-க-க்கு விராகனெடை-௨, ௨, பசுவின் வெண்ணெய் பலம்-க, பசுவின் கோமயம் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—நான்கு சரக்குகளையுங் கல்வத்திலிட்டு அரைமணி நேரமரைத்து எல்லாம் மிஸ்ரமான பின்பு பசுவின் கோமயத்தைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமமரைத்து வழித்துப் பீங்கான் பாத்திரத்திற்போட்டு உலர்த்திப் பிறகு கல்வத்திலிட்டு

பொடித்துப் பசுவின் வெண்ணெயைச் சேர்த்து ஒரு சாமமரைத்துப் பீங்கான் சிமிழிற் பத்திரப்படுத்தவும்.

உபயோகம்:—இதில் ஓர் அரிசிப் பிரமாணமெடுத்து நான்குதுளி எலுமிச்சம்பழச் சாற்றில் இழைத்துக் கண்ணிலிட சன்னி முதலியரோகங்கள் தீரும்.

பா-கி-62.

குறிப்பு.

இதன் மூலத்தில் முதலில் வெண்ணெயைச் சேர்த்தரைத்துப் பிறகு பசுவின் கோமயத்தை விட்டரைத்து மாத்திரை செய்யும்படியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும் அனுபவத்தின்படி யிங்கெழுதப்பட்டிருக்கிறது. இன்னும் இவ்வித வியாதிகளில் கண்ணிற்குக் கலிக்கமிட்டால் ஆங்கிலேய வைத்தியர்கள் நகைப்பார்கள். கண்ணிற்குக் கலிக்க மிடுவதைப் பார்க்கிலும் மூக்கில் நசியம் ஆக்கிராண மிடுவது உசிதமெனச் சொல்கின்றார்கள். ஆனால் ஆயுர்வேத சாஸ்திரங்களோ கண்கலிக்கம், நாசி நசியம், ஆக்கிராண முதலியவைகளைச் சொல்கின்றன. கண்ணிற்குக் கலிக்க மிடுவது சில சமையங்களில் அதிகப் பிரயோசனமுள்ளதெனக் காணப்பட்டிருக்கிறது. ஒரு ஸ்திரீக்கு ஒரு தடவை சன்னிகண்டு ஸ்மரணை யில்லாமலும் பற்கள் கிட்டப்பட்டு மிருந்தது. ஆங்கிலேய டாக்டர்கள் பல சிகிச்சைகள் செய்தும் ஒன்றும் பிரயோசனப்படவில்லை. வேறு விதியில்லாமையால் மேற்கண்ட மாத்திரை கண்ணிற்குக் கலிக்கமிடப் பட்டது. உடனே ஸ்மரணை யுண்டாகி வாய்திறக்கப்பட்டு வேறு மருந்து கஞ்சி முதலானவைகள் சென்று வியாதி குணப்பட்டது. ஆங்கிலேய டாக்டர்கள் ஆயுர்வேததை

த்தியர்கள் ஆகிய இருவருக்கும். இடையிலுள்ள பே தங்களை அவரவர்கள் அனுபவத்தினாற்றெரிந்து நிச்சயித்துக் கொள்ளவேண்டும்.



## 19. ஆக்கிராணம்.

முட்டைச்சாம்பல் (அதாவது வறுட்டிபை) யெரித்துக் குளிர ஆறினபின் தாள் செய்துவஸ்திரகாயஞ் செய்து எடுத்துக் கொள்வதேயாம்.) இவ்விதம் வஸ்திரகாயஞ் செய்யப்பட்ட சாம்பல் பலம்-சு, மிளகுச்சூரணம் விராகனெடை-ரு, சுத்திசெய்த நாபிச்சூரணம் விராகனெடை-வ, எருக்கம்பால் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சாமான்களைக் கல்வத்திற்போட்டு அரைத்து மிஸ்ரமித்து எருக்கம்பாலைத்தெளித்து அரைக்கவேண்டும். பாலை அதிகமாக விட்டால் குளகுளப் புள்ளதாகிவிடும். அப்படியாகிவிட்டால்-உ-சாமமரைத்து வெயிலிலுலர்த்தி மறுபடியும் கல்வத்திலிட்டுப் பொடித்துச் சூரணமாக்கிக் கொள்ள வேண்டும்.

உபயோகம்:—இந்தச் சூரணத்தில் அரைக்குன்றிமணி யெடை யெடுத்து நாசியில் ஆக்கிராணஞ் செய்விக்கவும். இவ்விதம் பிரதிதினமும் இரண்டு மூன்று தடவைகள் செய்து வந்தால், சன்னி, தோஷ முதலியவைகள் தீரும். பா-ரெ-50.



## 20. ஷை (வேறு.)

பேய்ப்பீர்க்கம் விதைப்பருப்பு பலம்-ச, சுத்திசெய்த நாபிச் சூரணம் பலம்-க, மிளகுச் சூரணம் பலம்-க.

செய்முறை.—மேற்கண்டவைகளை அம்மியிலிட்டு-உ-சாமமரைத்து சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

உபயோகம்:–இதில் அரைக்குன்றிமணி யெடுத்து நாசியில் ஆக்கிராணஞ் செய்யவேண்டும். இப்படி தினம் இரண்டொரு தடவைசெய்ய சன்னி, தோஷம், சுரம் ஆகியவைகள் தீரும். பா - நி - 57

குறிப்பு.

இதிற் சொல்லியிருக்கிற கணக்கின்படி செய்வது அனுவசியம். ஆகையால் விராகனெடைக் கணக்காக எடுத்தூக் கீல்வத்திலிட்டரைத்துக் கொள்வது உசிதமாயிருக்கும்.



## 21. ஷை (வேறு)

எருமைச்சாணியை வறட்டிதட்டி யுலர்த்திச் சுட்டெரித்துச் சாம்பலாக்கி வஸ்திரகாயஞ் செய்த தூள் பலம்-க. இதனை ஒரு பீங்கான் பாத்திரத்திற் போட்டு இது நன்றாய் நனையும்படியாக அதில் எருக்கம்பாலைக் கறந்து விட்டுப் பிசைந்து வெயிலிலுலர்த்த வேண்டும். அது நன்றாய் உலர்ந்தபின்பு தூள்செய்து முன் பீங்கான் பாத்திரத்திற்போட்டு முன் போற் பாலைக் கரந்து முன்போற் காயவைக்க வேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி எழுதடவை பாலைவிட்டு உலர்த்தி முடிவாக உலர்த்திப் பொடித்துக் கொள்ள வேண்டும். மிளகுத்தூள்பலம்-வ, இவ்விரண்டையும் சேர்த்து ஒருசாமமரைத்துச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

உபயோகம்:—இதில் இரண்டு மூன்று அரிசி யெடை மூக்கில் ஆக்கிராணஞ் செய்விக்க மேகசுர முதலியவைகள் தீரும். பா-தி- 58.

---

## 22. சன்னி தோஷ நசியம்.

வெண்ணொச்சிக் கொழுந்து, புங்கங்கொழுந்து, மிளகுச் சூரணம், தோலுரித்த வெள்ளைப்பூண்டு, இவை வகை-க-க்கு விராகனெடை-உ௦, இவை யெல்லாவற்றையும் நன்றாயிடித்து ஒருமெல்லிய வஸ்திரத்தில் வைத்துப் பிழிந்து கண்ட சாற்றிற்குச் சமனெடை பசுவின் மூத்திரத்தைச் சேர்த்து ஒன்று அல்லது இரண்டுதுளி நாசியில் நசியஞ் செய்யவேண்டும். இவ்விதம் தினம் இரண்டொருதடவை செய்ய எல்லார்வகைச் சன்னிகளும் தீரும். பா-தி- 111.

---

## 23. சுரநசியம்.

சிற்றாமணக்கம் பருப்பு, மிளகுச் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், இந்துப்புத்தூள், தோலுரித்த வெள்ளைப்பூண்டிதழ், இவை வகை-க-க்கு விராகனெடை-உ௦, வேலிப்பருத்திச்சாறு, பாகல்இலைச்சாறு, இவை வகை ஒன்றுக்குச் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சரக்குகளைக் கல்வத்திலிட்டு ஒன்றாய் மிஸ்ரமாகும்படியாக ஒருமணிநேரமரைத்துப் பிறகு வேலிப்பருத்திச் சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து ஒருசாமமரைத்து வடித்துப் பீங்கானிலிட்டு வர்த்தி நன்றாயுலர்ந்த பின்பு கல்வத்திலிட்டுப் பொடித்துப் பாகல் இலைச்சாற்றைச் சிறுகச்

சிறுக வார்த்து ஒருசாமமரைத்து மாத்திரைகளாகச் செய்து வைத்துக் கொள்ளவும்.

உபயோகம்:—இதனை முலைப்பாலிலிழைத்து இரண்டு அரிசியெடை மூக்கில் நசியஞ் செய்யவேண்டும். இதனைத் தூள்செய்து நாசியில் ஆக்கிராணமாகவும் உபயோகிக்கலாம். இவ்விதம் சிலதடவைகள் செய்ய எல்லாவகைச் சுரங்களும் தீரும். பா-நி- 59

---

## 24. சூதகசன்னிவலி முதலியவைகளுக்கு.

சுத்திசெய்த அரிதாரம் விராகனெடை-கவ, இதனைக் கல்வத்திலிட்டு நன்றாய்ப் பொடித்து முலைப் பாலைச் சிறுகச் சிறுகவார்த்து நான்குசாம மரைக்க வேண்டும். பிறகு இதனை யுலர்த்திப் பொடித்துச் சீஷாவில் வைத்துக் கொள்ளவேண்டும். அவசியமான போது, ஒன்று, அல்லது, இரண்டு அரிசியெடை யெடுத்துக் கொஞ்சம் முலைப்பாலிற்கரைத்துத் துணியில் வடிகட்டி ஒவ்வொரு நாசித் துவாரத்திலும் இரண்டு துளிவீதம் நசியஞ் செய்ய வேண்டும். இப்படிச் செய்வதால் சூதகசன்னி, வலிப்பு, சிரநோய்முதலியவைகள் தீரும்.

இன்னும் இந்தத்தூள் விராகனெடை-க, வேப்பெண்ணெய் பலம்-கஉ இவ்விரண்டையும் சேர்த்துக் காய்ச்சித் தேகத்தின்மீதுபூசித் தேய்க்க சன்னி ரோகம், குதிரைவலி, முயல்வலி, தோஷம் முதலியவைகள் போம். பா-நி- 46.

---

25. கெற்போற்பத்தி குழித்தைலம்.

ஆற்றுக்கொம்மட்டிக்காய் விதை பலம்-௧0, சுத்திசெய்த வாளப்பருப்பு பலம்-௧0, இவ்விரண்டையும் வெயிலிலுலர்த்திக் குழித்தைலமாக இறக்கிக் கொள்ளவும். (குழித்தைல மிறக்கும் முறைகள் நமது இரசவாத சிந்தாமணி யிலும் மற்ற கிரந்தங்களிலும் பலதடவைகள் எழுதப்பட் டிருக்கிறது. அவசியமானவர்கள் அதைப் பார்த்துச் செய்யவும்.) மேற்படி ஷ்தலத்தை ஒரு சீஷாவிற் பத்திரப்படுத்தவும். மேற்படி ஷ்தலம் விராகனெடை-௧, விரலிமஞ்சட் சூரணம் விராகனெடை-௧0. இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டு ஒரு மணி நேரமரைத்து இதனைத்தனியே யெடுத்துக்கொள்ளவும். இவ்விதம் சித்தப்படுத்தின சூரணத்தின் பிரமாணம் குன்றிமணி யெடை-௩-௫.

அநுபானம்:—காப்பிக்கொட்டையை வறுத்திடித்த தூள் விராகனெடை-௨௭; இதில் ஒரு ஆழாக்கு வெந்நீரைவிட்டு பத்துநிமிஷ நேர மூடிவைத்து ஜலத்தை யிறுத்து அதில் இரண்டு பலம் பனைவெல்லத்தைப்போட்டுக் கரைத்து வடிகட்டி அதில்காய்ச்சின அரை ஆழாக்குப் பாலையும்விட்டு வைத்துக்கொள்ளவும். இவ்விதம் சித்தப்படுத்தின காப்பி அரைஆழாக்கு முதல் முக்கால் ஆழாக்கு வரையில் உபயோகிக்கலாம்.

இதனை சூதகம் கண்டநாள் முதல் அல்லது, மறுநாள்முதல் ஆரம்பித்து மூன்றுநாள் தொடர்ச்சியாகக் காலையில் மாத்திரம் உபயோகிக்க வேண்டியது. சூதகம் கண்டிருக்கும்போது பேதிக்குக் கொடுப்பது

முறையன்று. ஆயினும் இந்த மருந்தை அந்தக்காலங் களிற்றான் கொடுக்கும்படியாக சாஸ்திரத்திற் சொல் லப்பட் டிருப்பதுபோலவே அனுபோகத்திலும் நாம் உபயோகித்து வருகின்றோம். இதனால் அநேகருக் குப் பலதடவைகளிலும் சுகமே காணப்பட் டிருக் கின்றது. ஆனால் சிகிச்சகர்கள் தேக சுபாவத்தை ய றிந்துசெய்யவேண்டு மென்பதுதான் முக்கியமான வி ஷயம்,

உபயோகம்:—சூதகக்கட்டு, சூதகசம்பந்தமா யுண்டாகும் வயிற்றுநோய், இடுப்புநோய், அக்கிரம சூதகம், முதலிய சூதகசம்பந்தமான எல்லாவியாதிக ளும் நீங்கும். கற்பப்பையிலுள்ள புழுக்கள் வியாதி கள் முதலியவைகள் நீங்கிக் கெற்பந்தரிக்கும்.

பா-தி- 66.

## குறிப்பு.

இந்த மருந்தினால் சூதகக்கட்டு சூதகபந்தம் ஆ கியரோகம் தீராவிட்டால் வேறு எந்த மருந்தினா லும் தீராதென்பதற்கு இது ஒரு அறிகுறியாம். முதல் தடவை மூன்றுநாளுங் கொடுத்து மறுதட வையில் சூதகங் கிரமப்பட்டுவிட்டால் உத்தமம். அப்படிக் கில்லையாயின் மறுசூதகத்தில் மூன்றுநா ளும் உபயோகிக்க வேண்டும். இவ்விதம் மூன்றுமா தத்திலும் உபயோகிக்க வேண்டும். முதற்றடவையிற் கெற்பந்தரிக்கும். அப்படித் தரிக்காவிட்டால் இரண் டாந் தடவை யாயினும் தரித்துவிடும். இரண்டாந்த டவை தரிக்காவிட்டால் மூன்றாந்தடவை கட்டாயம் தரித்துவிடும். அப்படியும் தரிக்காவிட்டால் பெரி யோர்கள் சாபம் முதலியவைகளினால் கெற்பந்தரிக்

காது என நிதானிக்க வேண்டும். பெரியோர்களினால் அச்சாபம் நிவர்த்திக்கப்பட்டால் ஒருவேளை செற்பந்தரிக்கலாம்.



## 26. பீனிச நசியம்.

மிளகுத்தூள், இந்துப்புத்தூள், மேற்றோல்சீவிய சுக்குச் சூரணம், வாய்விளங்கச் சூரணம், கஞ்சாச் சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-உ௫, பசுவினெய் பலம்-க௦.

செய்முறை:—மேற்படி சூரணங்களை அம்மியில் வைத்துக் கொஞ்சம் பசும்பால் தெளித்து மைப்போலரைத்து மேற்படி நெய்யிற்கரைத்து எரிந்துபோகாமல் பதமாக எரித்து வடித்துக்கொள்ளவும்.

உபயோகம்:—இந்த நெய்யில் ஒன்று அலலது இரண்டு துளியை ஒவ்வொரு நாசியிலும் விட்டுவரவும். இவ்விதம் காலை மாலை யிரண்டு வேளையும் உபயோகித்துவர, மண்டைவலி, பீனிசரோகம் ஆகியவைகள் தீரும். பா-தி- 60.

## 27. மூலத்தைலம்.

சுத்திசெய்த இரசம் விராகனெடை - ௫, சுத்திசெய்த நெல்லிக்காய்க் கெந்தகம் விராகனெடை-௫, பசுவின் நெய் பலம்-க௦, எருக்கம்பால் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையும் கெந்தகத்தையும் கல்வத்திலிட்டு அரைத்து நன்றாய்க்கறுத்த பின்பு

ளருக்கம்பாலைச் சிறுகச் சிறுகவிட்டு நான்கு சாமம் அரைக்கவேண்டும்; பிறகு சாண் அகலம் சாண்நீள முள்ள ஒருவெள்ளைத் துணியின் மீது இதனைத்தடவி ஈரமில்லாமல் உலர வைத்து திரியாகத்திரித்து மேற் படி நெய்யில் நனைத்துச் சுடர்த்தைலமாக இறக்கிக் கொள்ள வேண்டும். (சுடர்த்தைலம் இறக்கும் முறை யானது நமது யூநாநி வைத்திய தாதுவிர்த்தி போதினி யிரண்டாம் பாகத்தில் வகை விபரமாகச் சொல்லப் பட்டிருக்கிறது. அவசியமானவர்கள் அதைப்பார்த் துக் கொள்ளவும்.) முன்னிறக்கின தைலத்தையே மடக்கி மடக்கி மூன்றுதடவை யிறக்கி சீஷாவிற் பத் திரப்படுத்தவும்.

உபயோகம்:—இந்தத் தைலத்தில் நடுவிரலைத் தோய்த்து மூலமுளைகளின் மீது பூசிவருவதால், அம் முளைகள் கறுகி உதிர்ந்துபோகும். இது மூலமுளைக ளைக் கரைத்தெடுக்க ஒரு சிறந்தமுறை. பா-நி- 27.

---

## 28. மூலவாயு அடை.

குறுவை அரிசிமா ஆழாக்கு - க, * சுத்திசெய்த வெருகங்கிழங்குச் சூரணம் பலம்-உ, பசுவெண்ணெய் பலம்-உ, தோலுரித்த வெள்ளைப் பூண்டுபலம்-உ, ஓம ம் பலம்-ங, பொரித்த பெருங்காயம் குன்றிமணி யெ டை-உ:

---

* வெருகங் கிழங்கைச் சிறு துண்டுகளாகச் செய்து புளித்தமோரிற் போட்டு நன்றாய் வேகவைத்தெடுத்து வெ யிலிலுலர்த்தி யிடித்துத் தூள் செய்து கொள்வதே சுத்தி யாம்.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் பொட்டுப் பிசைந்து தோசை மாவைப்போல் இளகலாகச் செய்து கொள்ளவேண்டும். பிறகு தோசைச் சட்டியைக் காயவைத்து விளக்கெண்ணெய் தடவி அதில் ஒரு சிற்றகப்பையால் மொண்டு விட்டுப் பரப்பி வேகவைத்து வெந்தபின்பு எடுத்துக் கொள்ளவும். இவ்விதம் தேக பலத்திற்குத் தகுந்தபடி இரண்டு மூன்று சித்தப்படுத்திக் கொள்ளவும். பிரதிதினமும் ஜீரணசக்திக்குத் தகுந்தபடி ஒன்று இரண்டு மூன்று அடைகள் சாப்பிட்டு வரவும். இவ்விதம் செய்து வருவதால், மூலக்கிராணி, மூலவாயு, அக்கினி மந்தம், மூலம் முதலிய ரோகங்கள் தீரும். பா-செ-45.

## குறிப்பு

இம்முறையிற் சொல்லப்பட்டிருக்கிற அளவு இக்காலத் தவர்க்கு ஏற்காது. நாகரீகம் அதிகப்பட்டு தேகபலம், தேக தத்துவம் குறைந்திருக்கிற இக்காலத்துள்ள மனிதர்களுக்குத் தகுந்தபடி இங்கு எழுதப்பட்டிருக்கிறது.

---

## 29. கிராணி மூலத்துக்கு.

ஜாதிக்காய்ச் சூரணம், செண்பகமொட்டு, குராசானியோமம், அபின், இவை வகை-க-க்கு விராகனெடை-உ, கஞ்சாக் கஷாயம் செல்லத்தக்க அளவு.

செய்முறை.—மேற்படி சரக்குகளைக் கல்வத்தி லிட்டு அரைமணி நேரமரைத்து ஒன்றாக மிஸ்ரமித்து மேற்படி கஷாயத்தைச் சிறுகச் சிறுக வார்த்து இ

ரண்டு சாமமரைத்துக் குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ள வேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க, உ.

உபயோகம்,—கிராணிமூலம், வயிற்றுவலி, வயிற்றுக் கடுப்பு, வயிற்றிரைச்சல், மூலவேத்னை முதலியவைகள் தீரும். பா-செ-68.

குறிப்பு.

மூலத்தில் சொல்லி யிருக்கப்பட்ட முறையானது நமது அனுபவத்திற்கு ஒத்திராமையால் பெரியோர் அனுபவப்படி இங்கெழுதப்பட் டிருக்கிறது. இஷ்டமானவர்கள் அந்த சொல்லப்பட் டிருக்கின்றபடியும் செய்துகொள்ளலாம்.

---

## 30. கிராணி அடை.

வெந்தயம் விராகனெடை-க, ஜீரகம் விராகனெடை-க. இவ்விரண்டையும் அரைப்பலம் பன்றி நெய்யிலிட்டு வறுத்து மணம் வந்த தருணத்தில் கொஞ்சம்ஜலம்விட்டுக் கடைந்து அதில் ஒருகோழிமுட்டையின் வெள்ளையம்புளியை விட்டுக் கொஞ்சம் விளக்கெண்ணெயை விட்டு அரைபக்குவமாகப் பொரிந்த பக்குவத்திலெடுத்துக் காலையிற் சாப்பிட வேண்டும். இவ்விதம் மாலையிலும் உபயோகிக்க வேண்டும். இவ்விதம் செய்துவந்தால் கிராணி ரோகம் தீரும்.

பா-செ-96.

## 31. மூலக்கிராணி அடை.

குறுவையரிசி ஆழாக்கு-௨, பிரண்டைத்தளிர் பலம்-க௨, இரண்டையும் உரலிலிட்டு இடித்து மாவாகத் தெள்ளி வெயிலில் உலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும். அவசியமான காலங்களில் கொஞ்சம் மாவை யெடுத்து ஜலத்திற்கரைத்து தோசைச் சட்டியில் கொஞ்சம் விளக்கெண்ணெய் வார்த்து முன் கரைத்த மாவைவிட்டு அடையாகச் சுட்டுச்சாப்பிடவேண்டும். இவ்விதம் காலையில் ஒருவேளை, அல்லது, காலைமாலையிரண்டுவேளையும் சமயோசிதம்போல் சாப்பிட்டுவர மூலக்கிராணி தீரும். பர்-நெ.99.



## 32. வெளிமூலப் பூச்சு

சுத்திசெய்த கெந்தகம், சுத்திசெய்த அரிதாரம், துத்தம், துருசு, லிங்கம், இவை வகை-க-க்கு விராகனெடை-க, நெய் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் கல்வத்திலிட்டு ஒருமணி நேரமரைத்து நன்றாய் மிஸ்ரமான பின்பு பசுவின் நெய்யைச் சிறுகச் சிறுக விட்டு-௨-சாமமரைத்துக் களிம்புப் பதமாக எடுத்துக் கொள்ளவேண்டும். பின் பீங்கான் பர்த்திரத்திற் பத்திரப் படுத்தவேண்டும்.

உபயோகம்:—இந்தக் களிம்பிற் கொஞ்சமெடுத்து மூல முளைகளின்மீது தடவி புளியம் புறணியை நெருப்பாக்கி அந்த அனலில் அரைநாழிகை நேரம் காட்டவேண்டும். இவ்விதம் சமயோசிதம்போல பிர

ந்திதினமுஞ் செய்துவர வெளியிலுள்ள மூல முளைக ள் தீய்ந்து உதிர்ந்துபோம். பா-ரெ-103.

---

## 33. சீதபேதிக்கு பேதி முறை

மஞ்சட் கடுக்காய்த்தோல் பலம்-க, கடுகுரோக ணி பலம்-க, குச்சி காம்புநீக்கிய சூரத்துநிலஆவாரை பலம்-க, இவைகளைச் சிதைத்து அரைப்படி ஜலத்திற் போட்டு நான்கிலொரு பாகமாகச் சுண்டவைத்திறக் கி வடிகட்டி யெடுத்துக் கொள்ளவும். தேகசுபாவத்தி ற்குத் தகுந்தபடி இந்தக்கஷாயம் பலம்-க-முதல்-உ,தே ங்காய்த் தனிப்பால் பலம்-க, உ, சீனிச்சருக்கரை பல ம்-கூ, (அவரவர்களுக்குப் பிரியமான வரையிற் சேர்த் துக் கொள்ளலாம்.) இதனைக் காலையிற் சாப்பிட்டால் பழைய மலங்கள் வெளிப்பட்டு அது சம்பந்தமாக உண்டாயிருக்கிற சீதபேதி நிற்கும். சோகை ரோகம் தீரும். பா-கி- 135.

### குறிப்பு.

சீதபேதியானது பழமலம் தங்கிநின்று அதனல் உண்டாயிருந்தால், எவ்விதமான கட்டுவாதி மருந்து களைக் கொடுத்தபோதிலும் அது கட்டுப்படாது. அவ் வித ரோகத்திற்கு இவ்வித அவுடதங்களை உபயோ கித்துப் பழையமலங்களை நீக்கிச் சுத்திசெய்து பிறகு கட்டுவாதிகளை உபயோகித்துக் கட்டுப் படுத்தவேண் டும். அவசியமானல் மேற்படி கஷாயத்தை அளவில் அதிகப் படுத்திக்கொள்ளலாம். ஒன்றைவிட்டொரு நாளாகப் பலதடவைகளும் உபயோகிக்கலாம்.

---

## 34. மூலகிராணிப் பிட்டு.

தோலுரித்த வெள்ளைப்பூண்டிதழ், மேற்றோல்சீவின சுக்குச் சூரணம், ஏலச்சூரணம் இவை வகை-க-க்குப் பலம்-க. இம்மூன்றையும் அம்மியிற் சேர்த்தரைத்து எடுத்துக் கொள்ளவும். ஒரு சிறு மண் பாத்திரத்தில் அரைவாசி இளநீரைவிட்டு அதன்வாயில் மெல்லிய வஸ்திரத்தை வேடுகட்டி அதன்மேல் முன் சித்தப்படுத்தினதை வைத்து மேற்சட்டிமூடி அடுப்பேற்றி மெதுவாயெரித்து இளநீர்சுண்டின பின்பு எடுத்துப் பீங்கான் பாத்திரத்தில் வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-உ-க.

உபயோகம்:—மேற்கண்ட மருந்தைக் காலை மாலை யிரண்டு வேளையும் உபயோகித்துவர மூலரோகம், மூலக்கிராணி, சோறு சோறாய்க்கழியும் கழிச்சல், மூலசம்பந்தபேதி ஆகியவைகள் தீரும். பா-நி- 185.

### குறிப்பு.

முன் சித்தப்படுத்தின மருந்திற்குச் சமனெடை பனைவெல்லத்தைச் சேர்த்தரைத்து லேகியபதமாகச் செய்துகொண்டு உபயோகித்தாலும் சிரேஷ்ட குணத்தைத்தரும்.

---

## 35. கருங்கோழிச் சூரணம்.

(a) சுத்தி செய்த அரிதாரம், சுத்திசெய்த கெந்தகம், ஓமம், கடுகு, மஞ்சட் கடுக்காய்த்தோல் தான்றிக்காய்த்தோல், நெல்லிவற்றல், ஜாதிப்பத்திரி,

ல்லரிசி, ஜாதிக்காய், சவுக்காரம், நற்சீரகம், மேற்றோல் சீவினசுக்கு, மிளகு, அரிசித்திப்பிலி, சுத்திசெய்த ஜாதிலிங்கம், கருஞ்சீரகம், சுத்திசெய்தசிவதைவேர், கடுகுரோகணி, மஞ்சள், நாட்டு வெண்காரம், குராசானியோமம், கல்மதம், கல்நார், கார்போகரிசி, கறியுப்பு, கல்லுப்பு, விளையலுப்பு, காய்ச்சுப்பு, நவச்சாரம், சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு, அபினி, கொத்துமல்லிவிதை, வெந்தயம், பெருஞ்சீரகம், பெருங்காயம், இந்துப்பு, சத்திச்சாரம், எவட்சாரம், வெட்பாலையரிசி, காந்தம், இலவங்கம், வாய்விளங்கம், வாலுளுவையரிசி, விளாலரிசி, கோதுமையரிசி, சித்திரமூலவேர், வெடியுப்பு இவை வகை-க-க்குப் பலம்-வ, சுத்திசெய்த பறங்கிப்பட்டை பலம்-ச.

(b) குப்பைமேனிச்சாறு, கொள்ளுக் கஷாயம், பொடுதலைச்சாறு, தும்பைச்சாறு, பசுவின் மூத்திரம், வெண்ணொச்சியிலைச்சாறு, நல்லவேளைச்சாறு, பீநாறிச்சங்கங் குப்பிச்சாறு, வேலிப்பருத்தி சமூலச்சாறு, வெள்ளாட்டுநீர் இவை வகை-க-க்குப் படி-க, திருகுகள்ளி பலம்-க().

(c) யௌவனமான கருங்கோழி-க.

செய்முறை:—கோழியை அறுத்து கால், தலை, ரோமம் ஆகியவைகளைப்போக்கி வயிற்றைக்கிறி ஈரல் குடல் முதலியவைகளை நீக்கிச் சுத்திசெய்து கொள்ளவேண்டும். (a) யிலுள்ள சரக்குகளில் இடிக்கவேண்டியவைகளை யிடித்துச் சூரணித்து வடிகட்டிக்கொள்ளவேண்டும். உப்புவகைகளையெல்லாம் பொடித்துக் கொள்ளவேண்டும். காயம், அபின், வாளம் இவைக

ளைத் தனித்தனியே யரைத்துச் சூரணத்திற் கலந்து கொள்ளவேண்டும். அரிதாரம், கெந்தகம், லிங்கம் முதலியவைகளையும் தனித்தனியே அரைத்துச் சூரணத்திற் கலந்து கொள்ளவேண்டும். இவ்விதம் (a) யிலுள்ள எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து கோழி வயிற்றிற் செலுத்தி இரண்டு புறமும் ஒன்றாகத் தைத்து ஒருபுதுத்தாளியில் (b) யிலுள்ள சாறுவகைகளையும் நீருவகைகளையும் விட்டுத் தாளிவாய்க்கு வேடு கட்டி அதன்மேல் முன்சித்தப்படுத்தி வைத்திருக்கிற கோழியை வைத்து மேற்சட்டிமூடி ஏழுசீலைமண் செய்து அடுப்பேற்றி ஒருஜாதி விறகால் சாறுவற்று கிறவரையில் சுமாராய் எரித்துக் குளிர ஆறவிட்டுப் பிரித்தெடுத்து எலும்பு, சவ்வு ஆகியவைகளை நீக்கி மற்றவைகளை யெல்லாம் ஒன்றாய்ச் சேர்த்து வெயிலில் உலர்த்தி இடித்து வடிகட்டிச் சீஷாவிற்பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-௦-௧-௧௦-௨, வியாதிபலம் தேகபலம் முதலியவைகளுக்குத் தக்கபடி உபயோகிக்கவேண்டும்.

அனுபானம்:—தேன், சுக்குக்கஷாயம், இஞ்சிச்சாறு, இளவெந்நீர், இவற்றுள் ஒன்றில் அனுபானித்து வியாதி பலத்திற்குத் தகுந்தபடி அரைமண்டலம் ஒரு மண்டலம் சாப்பிடவேண்டும்.

உபயோகம்:—மேகரோகங்கள், சூலைரோகங்கள், ஆப்பல்ரோகங்கள், கள்ளிப்பூக்கிரந்தி முதலிய பல கிரந்தி ரோகங்கள், பௌத்திரரோகங்கள், கைகால் திமிர்ப்பு, கைகால் முடக்கு, பீலிகை ரோகம், கருமே

கம், மேகப்பிடிப்பு, வெடிசூலை, மேக ஊறல், பெருஞ்சொறி, பேய்ச்சொறி, வயிற்றுவலிகள், குன்மரோகங்கள், தேக உளைச்சல், தேகவலி, தேகக்குத்து, இரத்தப்படுவன், படர்தாமரை, அரையாப்பு, குடல்வாதம், மேகச்சிலந்தி, குஷ்டரோகம், மூத்திரக் கிரிச்சரம், பக்கவாயு முதலிய அநேகரோகங்கள் தீரும்.

பத்தியம்:—முளைக்கீரை, அரைக்கீரை, பச்சைப் பயறு, துவரை, முருங்கைப்பிஞ்சு, வழுதுணங்காய், காடை, கௌதாரி, முயல், உடும்பு, திரிக்கை, சுறா, இவையாம்.

உப்பைப் பசுவின்மோர்விட்டுப் பொன்னிறமாக வறுத்துச் சேர்த்துக்கொள்ளவும். பா-கி-162-166

குறிப்பு,

சுகுமார தேகிகளுக்கு தேன், சுக்குக்கஷாயம், இஞ்சிச்சாறு, இவற்றில் ஒன்றில் கால் அல்லது அரை விராகனெடை சூரணத்தை மத்தித்துக் காலையில்மாத்திரம் உபயோகிக்கவும். சிலருக்கு இரண்டு மூன்று தடவை பேதியாகும். ஒன்றைவிட்டொருநாளும் உபயோகிக்கலாம். இது பல்லாண்டுகளாய் அனுபவசித்திப்பெற்ற முறை.



## 35. ஷை (வேறு.)

(உ) தோலுரித்த பூண்டு, மிளகு, இவை வகை-க-க்குப் பலம்-உ, மேற்தோல் நீக்கினசுக்கு, கடுகு, சவுட்டுமண் வகை-க-க்குப் பலம்-க, பொரித்த பெருங்காயம் பலம்-௩, அரிசித்திப்பிலி, ஓமம், இந்துப்பு,

பேய்ப்புடல், வளையலுப்பு, வெங்காயம், சீரகம் இவை வ்கை-க-க்கு விராகனெடை-ரு, சவுக்காரம், காட்டு வெண்காரம், வாய்விளங்கம், காந்தம் இவை வகை-க-க்கு விராகனெடை-ரு, சிற்றரத்தை, வெடியுப்பு, சதகுப்பை, சுத்திசெய்த சிவதைவேர், சுத்திசெய்த வாளம், கருஞ்சீரகம், இவை வகை-க-க்கு விராகனெடை-உ௮, அக்கிராகாரம் விராகனெடை-உ. இவற்றுள் இடித்துச் சூரணம்செய்ய வேண்டியவைகளைச் சூர்ணித்து கல்வத்தில் தூள்செய்ப வேண்டியவைகளைத் தூள்செய்து எல்லாவற்றையும் ஒன்றாய்க்கலந்து திருகுகள்ளிப்பாலைச் சிறுகச்சிறுகவார்த்து இரண்டுசாமம ரைத்து எடுத்து வைத்துக்கொள்ளவும்.

(b) திருகுகள்ளி வேர்ப்பட்டை, அமுக்குரா வேர்ப்பட்டை, வெள்ளெருக்கவேர்ப்பட்டை, அழிஞ்சில்வேர்ப்பட்டை, எருக்கின் வேர்ப்பட்டை, கொடிவேலி வேர்ப்பட்டை இவை வகை-க-க்குப்பலம்-௮, இவற்றைத் தனித்தனி ஜலம்வார்த்து வெண்ணெய்போலரைத்து ஒன்றாய்ச்சேர்த்து (a) யிலுள்ள சூரணத்துடன் கலந்து கொள்ளவும்.

(c) வெள்ளெருக்கு இலை, வெண்ணொச்சியிலை, எருக்கிலை, அழிஞ்சியிலை, பிரண்டை, திருகுகள்ளி, இவற்றைத் தனித்தனி பிடித்தசாறு வகை-க-க்குப் படி-க, வெள்ளாட்டு மூத்திரம், கோமூத்திரம், கொள்ளுவேகவைத்த ஜலம் இவை வகை-க-க்குப்படி - ௮, இவையெல்லாவற்றையும் ஒன்றாய்க்கலந்து பானைக்குள் விடவேண்டும்.

(d) யௌவனமான கருங்கோழி-க.

செய்முறை:—முன் முறையிற் சொல்லியிருக்கிறபடியே கோழியையறுத்துச் சுத்திசெய்து முன் சித்தப்படுத்தியிருக்கிற மருந்தை நன்றாய் மிஸ்ரமித்துக் கோழிவயிற்றிற்செலுத்தித் தைத்து (c). யி லுள்ளவைகளைத் தாளியில்விட்டு வேடுகட்டி அதன்மேற் கோழியைவைத்து மேல்மூடி முன்போல் சித்தப்படுத்திக் கொள்ளவும்.

பிரமாணம்:—முன்முறையிற் கண்டபடியேயாம்.

அனுபானம்:—முன்முறையிற் சொன்னபடியேயாம்.

உபயோகம்:—சத்திகுன்மம், எரிகுன்மம், வலிகுன்மம், வாயுகுன்மம் முதலிய எட்டுவகைக் குன்மங்களும், குடல்வாதம், குடல்முறுக்கு நோய், குடற்புரட்டு வாதம் முதலிய நூற்றிருபத்தாறு வாதவகைகளும், வாதசூலை, கிரந்திசூலை முதலிய பலவகைச் சூலைகளும் தீரும்.

பத்தியம்:—முன் முறையிற் சொல்லப்பட்டவைகளேயாம். பா-நி-167-172.

---

## 37. புண்களுக்குத் திரி.

சுத்திசெய்த பொன்னரிதாரம், சுத்திசெய்த கவுரிப்பாஷாணம், சுத்திசெய்த வெள்ளைப்பாஷாணம், சுத்திசெய்த துத்தம், சுத்திசெய்த துருசு, சுத்திசெய்த இரசம், சுத்திசெய்த கெந்தகம், சித்திரமூலவேர்ப்பட்டைச்சூரணம், உலர்த்தின நாகத்தின் சதைச்சூரணம், கண்டத்திப்பிலிச் சூரணம், கண்டங்கத்திரி ச

மூலச் சூரணம், முட்கத்திரிக்காய்ச் சூரணம், திராட்சப்பழம், இவை வகை-க-க்கு விராகனெடை - உ, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையும் கெந்தகத்தையும் சேர்த்து நன்றாய்க் கறுக்கிறவரையிலரைத்துத் தனியேயெடுத்து வைத்துக்கொள்ளவும். மற்ற சரக்குகளையும் தனித்தனியே பொடித்துக்கொள்ளவேண்டும். பிறகு எல்லாவற்றையும் ஒன்றாய்க்கலந்து ஒரு சாமமரைத்து இரண்டு விரல் அகலம் நான்கு அங்குல நீளமுள்ள வெள்ளை வஸ்திரத்துண்டுகளிற் பரப்பித் திரிகளாகச்செய்து வைத்துக் கொள்ளவேண்டும். இந்தத் திரியிலொன்றை யெடுத்துப் பசுவின்நெய்யில்நனைத்துப் புண்களிற் படும்படியாகப் புகைகாட்ட வேண்டும். இவ்விதம் ஏழுபொழுது மூன்றரைநாள்செய்து மூன்றரைநாள் மறுபத்தியமிருந்து எட்டாநாள் விளக்கெண்ணெய் தேய்த்து ஸ்நானஞ்செய்ய வேண்டும்.

உபயோகம்:—கள்ளிப்பூக்கிரந்தி, லிங்கப்புற்று, யோனிப்புற்று, கால்முடக்கு, கைமுடக்கு, கரப்பான் ரோகம், அரையாப்புரோகம், யோனி யுள்ரணம், லிங்க உள்ரணம் முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—ரோகபலம், தேகபலம் ஆகியவைகளுக்குத் தகுந்தபடி புளி, புகை, பெண் ஆகியவைகளை நீக்கிவைக்க வேண்டும். உப்பைவறுத்துச் சேர்த்துக்கொள்ள வேண்டும். பா-நி-7-8,

---

## 38. குஷ்டப் புகை.

சுத்திசெய்த துத்தம், சுத்திசெய்த துரிசு, சுத்திசெய்த வெள்ளைப் பாஷாணம், சுத்திசெய்த மனோசி

லே, சுத்திசெய்த அரிதாரம், நல்லபாம்புச் சதைச்சூ ரணம், சுத்திசெய்த ஜாதிலிங்கம், கடுகு, தேன்மெ ழுகு, எருக்குக்கரி, இவை வகை - க - க்கு விராகனெ டை-உ.ஶ, சிறு கண்ணுகை அரபொடி விராகனெடை - கவ, பருத்தியிலைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—எல்லாச் சரக்குகளையும் ஒன்றாய்ச்சேர்த்தரைத்து ஒன்றாய் மிஸ்ரமான பின்பு பருத்தியிலைச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டுசாமமரைத்து எழு பில்லைகளாகச்செய்து வெயிலிலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

உபயோகிக்கும் விதம்:—நோயாளியை நாற்காலியிலுட்காரவைத்துக் கழுத்துவரையில் உரப்பானகித்தான் துணியைச்சுற்றித் தொங்கவிட்டுப் புளியம்புறணியை நெருப்பாக்கி அதில் ஒரு பில்லையைத் தூள்செய்துபோட்டு அதை நாற்காலியின் கீழ் வைக்கவேண்டும். இப்படிச் செய்வதால் மருந்தின்புகையானது தேகமெங்கும் பரவிச்செல்ல ஏதுவாகும். முகம், கண் முதலியவைகளிற் படாமல் ஜாக்கிரதையும் செய்யவேண்டியது. இவ்விதம் எழுபொழுது மூன்றரை நாட்கள்செய்து மறு மூன்றரைநாள் மறுபத்தியம் காத்துஎட்டாநாள் வெந்நீர் ஸ்நானஞ்செய்விக்கவும்.

உபயோகம்:—குட்டம், கிரந்திப்புண், யோனிப்புற்று, லிங்கப்புற்று, அரையாப்பு, கொள்ளிக்கரப்பான், குன்மம், சூலைரோகம், முதலியவைகளும் பாண்டு ரோகங்களுந் தீரும்.

## குறிப்பு.

இவ்விதப் புகை போடுவதற்கு (All cure bath) என்னும் ஒருவகை ஆவிபிடிக்கும் அறைசெய்யப்பட்

டுமிருக்கிறது. அதைவாங்கி உபயோகித்துக்கொண்டால் மிகவும் நன்மையாக இருக்கும்.

---

39. ஷ (வேறு.)

சுத்தித்த பறங்கிவைப்புப் பாஷாணம், சுத்திசெய்த மிருதார்சிங்கி, சுத்திசெய்த கெந்தகம், உலர்த்தின நாகத்தின்கண்டம் இவை வகை-க•க்கு விராகனெடை-டீதே.

செய்முறை:-இவை யெல்லாவற்றையும் தனித்தனி தூள்செய்து ஒன்றாய்ச் சேர்த்து ஒருசாமமரைத்து இரண்டங்குலம் அகலம் ஐந்தங்குலம் நீளமுள்ள சீலைத்துண்டுகளில் பரப்பித் திரியாகத் திரித்து வைத்துக் கொண்டு வேளை ஒன்றுக்கு ஒரு திரியாக வேப்பெண்ணெயில் நனைத்துக் கொளுத்தி மேற்சொல்லியபடி புகைபிடிக்க வேண்டும். புண் முதலியவைகளிலும் காண்பிக்கவேண்டும். வியாதிபலம் தேகபலத்திற்குத் தகுந்தபடி மூன்றரைநாள், ஐந்தரைநாள் செய்து அத்தனை நாள் மறு பத்தியமுங்காக்கவேண்டும்.

உபயோகம்:—துஷ்டரோகங்கள், சன்னிரோகங்கள், பறங்கிப்புண், பறங்கிச்சூலை, சூனியமுதலியவை தீரும்.

பத்தியம்:—முன் முறையிற்சொன்னவைகளேயாம். பா-ஷி- 13.

---

## 40. ஷை (வேறு)

சுத்திசெய்த இரசம், சுத்திசெய்த வெள்ளைப்பாஷாணம், இவை வகை-க-க்கு விராகனெடை-உ, துத்தம், துருசு, சுத்திசெய்த லிங்கம், காரீயம், எருக்கின் கரி, இவை வகை-க-க்கு விராகனெடை-கவ, குப்பைமேனி இலைச்சாறு செல்தைத்தக்க அளவு.

செய்முறை:—வங்கத்தையுருக்கி இரசத்தில் தொந்தித்துக் கொள்ளவேண்டும். பிறகு ஒவ்வொரு சரக்கையும் தனித்தனி பொடித்து எல்லாவற்றையும் ஒன்றாய் மிஸ்ரமித்துக் கல்வத்திலிட்டுக் குப்பைமேனிச் சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமமரைத்துப் பணிரெண்டு மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவும்

உபயோகம்:—38-வது முறையிற் சொல்லியிருக்கிறபடி ஆறுநாட்கள் செய்து மறு ஆறுநாள் மறுபத்தியமிருந்தால் குழிப்புண், அழிபுண், புரைப்புண் ஆகியவைகள் தீரும். பா-நி- 14-15.

---

## 41. குழிப்புண் திரி.

சுத்திசெய்த லிங்கம், சுத்திசெய்த இரசம், துருசு, பவளப்புற்றுப் பாஷாணம், பால்துத்தம், கர்ப்பூரம், மிருதார்சிங்கி, மனோசிலை, மஞ்சட் கடுக்காய்த்தோற் சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை - கவ, தேன்மெழுகு விராகனெடை பணிரெண்டரை முதல் இருபத்தைந்து வரை.

செய்முறை.—கெந்தகத்தையும் இரசத்தையும் கல்வத்திலிட்டு நன்றாய்க் கறுக்கிறவரையி லரைத்துந்

தனியே யெடுத்து வைத்துக்கொள்ள வேண்டும். ம ற்றைச் சரக்குகளையும் தனித்தனி பொடித்து முடிவி ற் எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து ஒருசாமம் வ ரையிலரைத்து மெழுகை யுருக்கி தண்ணீர் போலுரு கின பிறகு மேற்படி அலை அதிற்போட்டுக் கிளறிப் பீங்கான் டப்பியில் எடுத்துப் பத்திரப்படுத்தவும்.

உபயோகம்:—குழி விழுந்த புண்ணு யிருந்தால் அந்தக் குழி கொள்ளும்படியாக இந்த மெழுகில் தி ரி செய்து அதில் வைத்துவர வேண்டும். இவ்விதமே புரையோடின புண்களிலும் அதற்குத் தகுந்தபடி நீ ண்ட திரியாகச் செய்து புரைக்குட் செலுத்திவரவே ண்டும். இவ்விதம் செய்துவர குழிவிழுந்த புண்கள், புரையோடின புண்கள், அரையாப்பு, பௌத்திரம், முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—தேக சுபாவம், வியாதிபலம் ஆகிய வைகளுக்குத் தகுந்தபடி ஏற்படுத்த வேண்டியது தான். பா-கெ-18-19.

---

## 42. புற்றுப் புகை.

சுத்திசெய்த கருவங்கம் விராகனெடை-உ௰, சு த்திசெய்த இரசம் விராகனெடை-உ௰, சுத்திசெய்த வெள்ளைப் பாஷாணம். சுத்திசெய்த கெந்தகம், துரு சு, சுத்திசெய்த ஜாதிலிங்கம், சுத்திசெய்த அரிதாரம். சுத்திசெய்த மிருதார்சிங்கி, கருஞ்சீரகச் சூரணம், க டுகுமா, வெள்ளைக்கடுகுமா, இவை வகை-க-க்கு விரா கனெடை-கவ, பருத்தியிலைச்சாறு செல்லத்தக்க அ ளவு.

செய்முறை:—வங்கத்தையுருக்கி இரசத்திற்றொ ந்தித்துக் கொள்ளவேண்டும். மற்றச் சரக்குகளையும் தனித்தனி தூள்செய்து கொள்ளவேண்டும். பிறகு எ ல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்து ஒருமணி நேரம ரைத்துப்பிறகு மேற்படி பருத்திச்சாற்றைச்சிறுகச்சி றுக வார்த்து இரண்டு சாமமரைத்து ஐம்பது மாத்தி ரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள் ளவும்:

உபயோகம்:—37-ம் முறையிற் சொல்லியிருக்கி றபடி புகைபோட புண்கள், தேக உளைச்சல், யோ னிப்புற்று, லிங்கப்புற்று ஆகியவைகள் தீரும்.

பத்தியம்:—மேற்படி முறையிற் சொல்லியிருக் கப்பட்டதே யாம். பா-ரெ-20.

## 43, பிளவை வெண்ணெய்.

துருசு, நவச்சாரம், சுத்திசெய்த வெள்ளைப் பா ஷாணம், இவை வகை-க-க்கு விராகனெடை-கவ, பசு வின் வெண்ணெய் பலம்-க, முதல்-ட-வரை.

செய்முறை:—மேற்படி சரக்குகளைத் தனித்தனி தூள் செய்து பிறகு எல்லாவற்றையு மொன்றாய்ச் சே ர்த்து ஒருமணி நேரமரைத்து வெண்ணெயிற் சிறுகச் சிறுகச் சேர்த்து நான்கு சாமம் அரைத்துச் செம்பு டப்பியில் வைத்துக் கொள்ளவேண்டும்.

உபயோகம்:—இந்த வெண்ணெயை வஸ்திரத்து ண்டில் தடவிப் பிளவைகளின் மீது போடவேண்டும் இவ்விதம் செய்துவர நாற்பத்தெட்டு வகைப் பிளவை களுந் தீரும். பா-தி-26.

## 44. கிரந்திப்புண் உசிதமுறை.

வெண்முருக்கம் பட்டை பலம்-க, பெருங்காயம் விராகனெடை - கவ, பசுவின் வெண்ணெய் பலம்-கவ.

செய்முறை:—முருக்கம் பட்டையை அம்மியில் வைத்து மைபோலரைத்துப் பிறகு காயத்தையுஞ் சேர்த்தரைத்து மைபோலான பின்பு எடுத்து வெண்ணெயையுஞ் சேர்த்து மிஸ்ரமித்து ஆறுபங்காகச்செய்து வைத்துக் கொள்ளவும்.

உபயோகம்:—இதனை வேளைக்கு ஒவ்வொரு உருண்டையாக காலைமாலை யிரண்டு வேளையும் சாப்பிட்டுவர வேண்டும். மோரன்னந் தவிர மற்றொன்றுமாகாது. இவ்விதம் செய்துவந்தால் கிரந்திப்புண் முதலியவை தீரும். பா. செ. 104,

---

## 45. க்ஷயகுலாந்தக ரசாயனம்.

ஏலரிசிச் சூரணம், ஜாதிக்காய்ச்சூரணம், கர்ப்பூரத்தூள், இலவங்கச் சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-உ௦, மிளகுச் சூரணம் விராகனெடை-ங௦, மேற்றோல் சீவின சுக்குச் சூரணம் விராகனெடை-ரு, அரிசித்திப்பிலிச் சூரணம் விராகனெடை - சுவ, சீனிச்சருக்கரை பலம்-உ௦, தேன் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—சூரணங்களை யெல்லாம் ஒன்றாய் மிஸ்ரமித்துச் சர்க்கரையையுஞ் சேர்த்துக் கல்வத்திலிட்டுத் தேனைச் சிறுகச் சிறுக வார்த்து ஒரு சாமம

ரைத்து அரை விராகனெடை நிறையுள்ள மாத்திரைகளாகச் செய்து வைத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—மாத்திரை-க, உ, காலை மாலை யிரண்டுவேளையும் உபயோகிக்கலாம்.

உபயோகம்:—க்ஷயரோகம், இருமல்ரோகம், மேகம் முதலியவைகள் தீரும். பா-நி-18.

---

## 46, நீலகாச நசியம்.

பிரமதண்டுக் கொழுந்து விராகனெடை-ரு, சுத்திசெய்த அரிதாரம் விராகனெடை-க. இவ்விரண்டையும் அரைத்து குன்றிமணிப் பிரமாணம் மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவேண்டும். அவசியமான காலங்களில் கொஞ்சம் முலைப்பாலில் மேற்படி மாத்திரையை யிழைத்து வடிகட்டி ரோகியை மல்லாந்து படுக்கச்செய்து மூக்கில் இரண்டிரண்டு துளி நசியஞ்செய்ய வேண்டும். இவ்விதம் காலைமாலை யிரண்டு வேளையும் மூன்று நாட்கள் செய்தால் கண்ணிலுண்டாகும் காசரோகம், நீலகாசரோகம் ஆகிய கண்ரோகங்கள் தீரும். பா-நி-105.

## 47. கண் மாத்திரை.

காய்ச்சுக்கட்டிச் சூரணம் பலம்-க, களிப்பாக்குச் சூரணம் பலம்-உ, சிறுபீளைச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சூரணங்களை வெண்கலப் பாத்திரத்திற் போட்டு மேற்படி சாற்றைச் சிறுகச்

சிறுக வார்த்து ஒரு வேப்பங்கட்டை மத்தின் நடுவில் அரையணுவைப் புதைத்து அதனால் நான்கு சாமங்களைந்து நீண்ட சிறு மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும். அவசியமான காலங்களில் புளியிலைச் சாற்றிலிழைத்துக் கண்ணிலிட்டு வரவும்.

உபயோகம்:—கண்குந்தம், கண்பூ, கண்கூசுதல் கண்ணீர்வடிதல் ஆகியவை தீரும். பா-நி. 95.

---

## 48, கண்குந்த மாத்திரை.

தான்றிக்காய்ப் பருப்பு, மஞ்சட் கடுக்காய்ப்பருப்பு, வெண்சந்தனத் தூள், பொரித்த பெருங்காயச்சூரணம், மேற்றோல் சீவின சுக்குச்சூரணம், மிளகுச்சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், சீமைக் கிச்சிலிக்கிழங்குச் சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-உ, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை.—மேற்படி சூரணங்களை யெல்லாம் கல்வத்திலிட்டு ஒருமணி நேரமரைத்துப் பிறகு எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து நீண்ட மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

உபயோகம்:—இந்த மாத்திரையை முலைப்பாலில் இழைத்து ஒரு அரிசி அல்லது இரண்டரிசிப் பிரமாணம் கண்ணிலிட்டுவர, கண்குந்த ரோகம் தீரும்.

பா. நி. 63.

---

## 49. ஷ (வேறு)

பச்சைமஞ்சள், மேற்றோல் சீவினசுக்குச் சூரணம், மிளகுச் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம், ருத்திராக்ஷ சூரணம், இவை வகை-க-க்கு விராகனெடை-உ, கண்டங்கத்திரிப் பழச்சாறு செல்லத்தக்க அளவு, எலுமிச்சம்பழச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி சரக்குகளைக் கல்வத்திலிட்டு ஒருமணி நேரமரைத்து நன்றாய் மிஸ்ரமான பின்பு கண்டங்கத்திரிப் பழச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வெயிலில் வைத்து உலர்த்திக் கொள்ளவேண்டும். பிறகு இதனைக் கல்வத்திலிட்டுப் பொடித்து எலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமமரைத்து நீண்ட மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொள்ளவேண்டும். இதனை எலுமிச்சம்பழச் சாற்றில் இழைத்து இரண்டு அரிசியெடை கண்ணிலிட்டு வர, குந்தரோகம் தீரும். பா-கி- 64.

---

## 50. காதுமந்த எண்ணெய்.

கோழிமுட்டை மஞ்சட்கரு, நண்டிறைச்சி, தோலுரித்த வெள்ளைப்பூண்டிதழ், வசம்புச் சூரணம், மைசாக்ஷி, சுத்திசெய்தபூநாகம், இவை வகை-க-க்கு விராகனெடை-கவ, வேப்பெண்ணெய் பலம்-க.

செய்முறை:—மேற்படி வஸ்துக்களை மேற்படி யெண்ணெயிற் போட்டு நீர்சுண்டும்படியாக எரித்து வடிகட்டி சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

உபயோகம்:—காதில் விடும்போது இதனைச் சற்று காய்ச்சி விடவேண்டும். ஒருதுளி அல்லது இரண்டுதுளி விட்டாற்போதுமானது. காலை மாலை யிரண்டு வேளையும் பத்துநாட்கள் செய்துவரின், காதில் நீர்வதல், காதுகுத்தல், காதுளைச்சல், காதில்புழு, காதடைப்பு, காதிரைச்சல் முதலிய காதுநோய்கள் தீரும்.
பா-நி- 69-

## 51. மலஜல அடைப்பிற்கு.

அடைவைத்த கோழிமுட்டைத்தோல், எலிப்புழுக்கை, உலர்த்தின வெள்ளைக் கோழி மலம், இவை வகை-க-க்கு விராகனெடை-உனு, இவைகளைப் பொடித்துச் சூரணமாக வைத்துக் கொள்ளவேண்டும்.

உபயோகம்:—வெள்ளரிக்காயை நெருப்பில்வெதுப்பிப் பிழிந்தசாறு ஆழாக்கு அரை; இதில் மேற்படி சூரணம் சமயத்திற்குத்தகுந்தபடி விராகனெடை-க-கஉ, கலந்து பானஞ் செய்யவேண்டும். இதனையுட்கொண்ட அரை அல்லது ஒருமணி நேரத்திற்குள் மலக்கட்டு ஜலக்கட்டு தீர்ந்து மலஜலம் தாராளமாய் வெளியாகும். பா-நி- 28.

## 52. துத்திச் சூரணம்.

துத்திவிதைச் சூரணம், தகரைவிதைச் சூரணம், நெல்லுப்பொரித்தூள், கல்நார் பற்பம், அல்லது, கல்நார்த்தூள், சாஸ்திரபேதிச் சூரணம், காட்டெருமைப்பாற் சூரணம், அதிமதுரச் சூரணம், சிறுநாகப்பூச் சூரணம், வால்மிளகுச் சூரணம் இவை வகை-க-க்கு

விராகனெடை-ரு, சீனிச்சர்க்கரை பலம்-ரு; கற்கண்டுத்தூள் பலம்-கஅ.

செய்முறை:—மேற்படி சூரணங்களை யெல்லாம் ஒன்ருய்க்கலந்து சீனிச்சர்க்கரை கற்கண்டு ஆகியவைகளையுஞ் சேர்த்து அரைத்து மிஸ்ரமித்துக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-க-உ.

உபயோகம்:—நீரடைப்பு, சதையடைப்பு, பிரமேகம் முதலியவை தீரும். பா-நி- 25.

## குறிப்பு

மேற்கண்ட முறையிலுள்ள கடைச்சரக்குகளை யெல்லாம் வறுத்து இடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணத்தை நிறுத்தெடுத்துக் கொள்ளவும்.

---

## 53. சகலமேக நெய்.

வெள்ளாட்டுப்பால் படி-க, இதில் * கருப்புக் குன்றிமணிக் குழித்தைலம் பலம் ஒன்றைவிட்டு நன்ருய்க் காய்ச்சிப் பதத்தில் பிரையிட்டு மறுநாள் கடைந்து வெண்ணெயை யெடுத்துக் கொள்ளவேண்டும். இந்த வெண்ணெயில் மூன்று அல்லது நான்கு விராகனெடையாகக் காலை மாலை யிரண்டு வேளையும் பத்துநாள் உட்கொண்டுவர மேகநீர், நீரழிவு, மேகக்

* கருப்புக் குன்றிமணியை உடைத்துப் பருப் பெடுத்துப் பசுவின்பால் தெளித்துஒருஇரவு வைத்துமறுநாட்காலையில் அதிக ஈரமில்லா மற்சுமாரய் உலர்த்திப் பாகப்படி குழித்தைல மிறக்கிக் கொள்வதே கருத்தைலமாம்

காந்தல், எலும்புருக்கி ரோகம், பிரமேகம், முதலிய பலரோகங்கள் தீரும். பா-கி-33-34.

---

## 54 கௌசை ஜெயநீர்.

படிக்காரம், வெடியுப்பு, நவச்சாரம், வெண்காரம், இவை வகை-க-க்கு பலம்-உ௰, தாளித்த சிப்பிச் சுண்ணம் பலம்-க௦, பிராந்தி சாருயம் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—முன் நான்கு சரக்குகளையும் கல்வத்திற் போட்டுப் பொடித்துச் சாருயத்தைச் சிறுகச் சிறுகவிட்டு ஒருசாமமரைத்துப் பிறகு சுண்ணாம்பைச் சேர்த்து ஷை சாருயத்தையே சிறுகச் சிறுகவிட்டு இன்னொரு சாமமுமரைத்துப் பீங்கான்பாத்திரத்தில் வைத்து மேற்பீங்கான் வைத்து மூடிச் சந்தில்லாமற் சீலைமண் செய்து ஈரமானவிடத்திற் புதைத்து இருபது நாட்சென்றபின் எடுக்க ஜெயநீர் இறங்கி யிருக்கும். அதை சீஷாவிற் பத்திரப்படுத்திக் கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-கவ-உ.

அநுபானம்:—இளநீர், முள்ளங்கிக் கிழங்குச் சாறு, நெருஞ்சிற் கஷாயம், சுரைக்கொடிக் கஷாயம் முதலிய நீர்பேதி முறைகளாம்.

உபயோகம்:—கௌசை, பாண்டு முதலியவைகள் தீரும். பா-கி- 98.



55. காமாலை பாண்டுப் பிரயோகம்:

கருவங்கம் பலம்-க, சங்குத்தூள் பலம்-க, மேற்றோல் சீவியசுக்குச் சூரணம், மிளகுச் சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம் வகைக்குப் பலம்-உ

செய்முறை:—வங்கத்தையுருக்கிப் பசுமூத்திரத்திற் சாய்க்கவேண்டும். இந்த மூத்திரமானது வங்கம் ஆழ்ந்திருக்கும்படியாகத் தாராளமா யிருக்கவேண்டும். ஓர் தடவைக்கு உபயோகித்த மூத்திரம் மறுதடவைக்குதவாது. தடவைக்குத்தடவை புதிதாகச் சேர்த்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் பத்துத்தடவை மடக்கி மடக்கி யுருக்கிச் சாய்த்தெடுக்க வங்கம் சுத்தியாம். இவ்விதம் சுத்திசெய்த வங்கத்தைச் சட்டியிலிட்டுருக்கி நன்றாயுருகினபின்பு மேற்படி சங்குப் பொடியைச் சிறுகச்சிறுகக்கிராசித்து இரும்புக் கட்டப்பாரையாற்கடைந்துவரவும் வேண்டும். இவ்விதம் சங்குத்தூளெல்லாம் செல்கிற வரையிற் செய்து வந்தால் வங்கமானது மடிந்து பற்பமாகிவிடும். இந்தப்பற்பத்துடன் மூன் சூரணங்களையுஞ் சேர்த்துச் சீஷாவிற் பத்திரப்படுத்த வேண்டும்.

பிரமாணம்:—விராகனெடை-ஒ-க.

அனுபானம்:—தேன், நெய், கையாந்தகரையை அரைத்தவிழுது, கீழ்காய் நெல்லியை அரைத்தவிழுது முதலியவைகளாம்.

உபயோகம்:—காமாலை வகைகள், பாண்டுவகைகள், விஷபாகம், சுவாசரோகம், உளமாந்தை, மேகவறட்சி முதலியவைகள் தீரும். பா-கி- 97.

குறிப்பு.

இதன் மூலத்தில் தனி வங்கத்தை யுபயோகிக்கும்படி கண்டிருப்பினும் பெரியோர்களின் அனுபவப்படி யிங்கெழுதப்பட்டது.

---

## 56. விக்கற் பிரயோகம்

பாற் சாம்பிராணி பலம்-க. (இதனைக் கல்வத்திற் பொடித்துவஸ்திரகாயஞ்செய்துகொள்ளவேண்டும்.) இந்தச் சூரணத்திற்குச் சமனெடை நல்ல வெல்லம். இவ்விரண்டையும் சேர்த்துக் கல்வத்தில் ஒருமணி நேரமரைத்து மிளகுப்பிரமாணம் மாத்திரைகள்செய்து வைத்துக்கொள்ள வேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க-உ.

அனுபானம்:—சர்க்கரை, சுக்கை அரைத்த விழுது முதலியவைகளாம்.

உபயோகம்:—காலை மாலை யிரண்டுவேளையும் ஏழுபொழுது மூன்றரைநாள் உபயோகிக்க,விக்கல், வாயுவு, மார்புநோவு, வயிற்றுநோவு ஆகியவைகள் தீரும். பா-கி-106.

---

## 57. திமிர்வாத ஒற்றிடம்.

வெண்ணொச்சியிலை, வேப்பிலை, புங்கம்பட்டை, திருகுகள்ளிவேர், திருகுகள்ளிக் கொழுந்து, முடக்கொத்தானிலை, இவை வகை-க-க்குச் சமனெடை. இவை யெல்லாவற்றையும் ஒன்றாய்ச்சேர்த்திடித்து இதற்குச் சமனெடைஆற்று வெள்ளை மணலைச்சேர்த்து

ஓட்டில்வறுத்துத் துணியில்வைத்து நோயுள்ளவிடத்தில் ஒற்றிட மிடவேண்டும். இவ்விதம் நோயின் பலத்திற்குத் தகுந்தபடி பிரதிதினமும் மூன்று நான்கு தடவைகள் ஒற்றிடமிட்டுவந்தால், திமிர்வாதம், முழங்கால்வாதம், முழிகள்வாதம், குக்துவாதம் முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—வியாதிபலத்திற்குத் தகுந்தபடி புளி, புகை முதலியவைகளை நீக்கிவைக்க வேண்டும்.

பா-நி-112.

---

## ௫8. வாயுலேகியம்.

அரிசித்திப்பிலி, குராசாணியோமம் இவைவகைக-க-க்குப் பலம்-க, சீனிச்சர்க்கரை அல்லது நாட்டுச்சர்க்கரை பலம்-ச, பசுவின்நெய் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—நெய்யைச் சட்டியில்வார்த்து நன்றாய்க் கொதித்தபின்பு திப்பிலியைப் போட்டுப் பொன்னிறமாக வறுத்தெடுத்துக்கொள்ள வேண்டும் இவ்விதமே குராசாணி யோமத்தையும் நெய்யிற்பொன்னிறமாக வறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும். பிறகு இவ்விரண்டையும் அம்மியில்வைத்து மைபோலரைத்துச் சர்க்கரையைப் பாகுசெய்து பதத்தில் மேற்படி சூரணத்தைப்போட்டுக் கிளறி லேகியபதமாயெடுத்துக்கொள்ளவும்.

பிரமாணம்:—விராகனெடை-க-உ. காலை மாலை இரண்டுவேளையும் உபயோகிக்கவும்.

உபயோகம்:—எல்லாவகை வாயுக்களும் தீரும்.

பா-செ-113.

## 59. பிரமேகப் பிரயோகம்.

நெருஞ்சிமுட் சூரணம் பலம்-கடு, கருஞ்சீரகச் சூரணம் பலம்-ரு. சீனிச்சர்க்கரை பலம்-கஅ.

செய்முறை:—இவை யெல்லாவற்றையும் ஒன்றாய் மிஸ்ரமித்துப் பீங்கான் பாத்திரத்திற் பத்திரப் படுத்தவும்.

பிரமாணம்:—விராகனெடை-கஉ-உ௫.

அனுபானம்:—பசுவினெய், பசுவின் வெண்ணெய் முதலியவைகளாம்.

உபயோகம்:—இதனை நாற்பதுநா ளுப்யோகித்தால், எல்லாவகைப்பிரமேகங்கள், நீரடைப்பு, சதையடைப்பு, கல்லடைப்பு, கைகாலெரிவு, கைகால் காந்துதல், உஷ்ணரோகங்கள், எலும்புருக்கிரோகம், குன்மரோகம் ஆகியவைகள் தீரும். பா-ரெ-114.

---

## 60. சகலரோக நிவாரண தோசை.

சுத்திசெய்த நேர்வாளம் பலம்-க, இதனைச் சட்டியிலிட்டு நன்றாய் வறுத்துக் கருகினபதத்தில் ஒருபடி சிற்றாமணக் கெண்ணெயைவிட்டுக் கடைந்து நாலைந்துகொதிவந்தபின் னிறக்கி ஆறினபின் வடிகட்டிச் சீஷாவில் பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ள வேண்டும்.

கருங்குறுவையரிசியை மாவாக்கி வைத்துக்கொண்டு கொஞ்சம் மாவெடுத்து ஜலத்திற் கரைத்துப் புளிக்கவைத்து முன் எண்ணெயில் நாலைந்துதுளி ஒருசட்டியில்விட்டு முன்மாவை அதிற்போட்டு தோ

சையாகச்சுட்டுச் சர்க்கரையுடன் காலையிற் சிற்றுண்டியாக உபயோகிக்கவேண்டும்.

உபயோகம்:—இவ்விதம் நாற்பதுநாள் உபயோகித்துவந்தால், மலபந்தரோகம், மலச்சிக்கல், குன்மரோகம், சூலைரோகம்,கிருமிரோகம், நாட்பட்டசுரம், காசவகைகள், நாட்பட்ட ரோகங்கள் முதலிய அநேகவகை ரோகங்கள் தீரும். பா-ஙி-136-137.

---

## 61. சூதப் பிரயோகம்.

ஏரளிஞ்சிப்பட்டையை வெயிலிலுலர்த்தி ஒரு பாத்திரத்திற்போட்டு இலுப்பைப்பூவை யிடித்தசாற்றை அதில்விடவேண்டும். அந்தச் சாறானது பட்டைக்குமேல் நாலங்குல மிருக்கவேண்டும். அதாவது பட்டை நாலங்குலம்சாற்றில் ஆழ்ந்திருக்கவேண்டும். பிறகு இதனைப் பிரதிதினமும் வெயிலில்வைத்துப் பிரதிதினமும் நாலைந்து தடவைகள் நன்றாய்ப்புரட்டிக் கொடுத்துவரவும் வேண்டும். கொஞ்சமும் ஈரமில்லாமல் நன்றாயுலர்ந்தபின்பு இடித்துத் தூளாக்கி வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொள்ள வேண்டும். இவ்விதம் சித்தப்படுத்தப்பட்ட ஏரளிஞ்சிப்பட்டைச் சூரணம் படி-வ, சுத்திசெய்த இரசம்பலம்-ச, வடிகட்டின கற்சுண்ணும்பு பலம்-ச, குப்பைமேனிச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்கண்ட கற்சுண்ணத்தையும், மேற்படி சூரணத்தையும் கலந்து வைத்துக்கொள்ள வேண்டும். இரசத்தைக் கல்வத்திலிட்டு மேற்படி சூரணத்திற்கொஞ்சமெடுத்து அதிற்றூவி குப்பைமேனிச்

சாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து அரைக்கவேண்டும். இவ்விதம் கொஞ்சந்தூளைப் போட்டுப் பிறகு மேற்படி குப்பைமேனி ரசத்தைவிட்டு நான்குசாம நேரமரைத்துக் குன்றிமணிப் பிரமாண மாத்திரைகளாகச் செய்துவைத்துக் கொள்ளவேண்டும்.

பிரமாணம்:—மாத்திரை-க-௨.

அனுபானம்:—வெல்லம், சர்க்கரை ஆகியவைகளாம்.

உபயோகம்:—இருமல், சுவாசகாசம், எலிகடி, ஈளைரோகம், குன்மரோகம் முதலியவைகள் தீரும்.

பா-நி-100.

## 62. கண்டவுடதம்.

அதிமதுரம், ஏலம், திப்பிலி, அக்கிராகாரம், திராக்ஷப்பழம், பச்சைக்கர்ப்பூரம், வலம்புரிக்காய், உலர்ந்த இலுப்பைப்பூ, கோரோசனை, நன்னாரி, முத்தக்காசு, உருத்திராக்ஷம், உலர்த்தின பூநாகம் (இதனை வறுத்துக்கொள்ளவும்) கோழிமுட்டை மஞ்சட்கரு, சந்தனம், முசுறுமுட்டை, இவை வகை-க-க்கு விராகனெடை-க, (இவற்றுள் சரக்குகளைத் தனியாயிடித்து வஸ்திரகாயஞ்செய்த சூரணத்தை மேற்கண்ட எடை நிறுத்தெடுத்துக் கொள்ளவேண்டும்) இஞ்சிச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இவை யெல்லாவற்றையுங் கல்வத்திலிட்டு ஒன்றாய்ச் சேர்த்தரைத்து மிஸ்ரமித்து இஞ்சிச்சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து மெழுகைப்போலாவது, அல்லது, மாத்திரை

க்ளாகவாவது செய்து பீங்கான் பாத்திரத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

உபயோகம்:—இதனை முலைப்பாலில் இழைத்து நாக்கில் தடவிவர, திரிதோஷம், சன்னி வகைகள், நாவறட்சி, சீதளத்தாலுண்டாகுந் தாகம் முதலிய அநேக சீதள ரோகங்கள் தீரும். பா-நி-10I.

---

## 63. நஞ்சுகள் முறிவு.

எட்டிக்கொட்டையை தின்று விஷமித்தால் நாவல் இலையை யிடித்துச் சாறுபிழிந்து சுமார் அரை ஆழாக்குப் பானஞ் செய்விக்க, அந்த விஷ முறிந்து போகும்.

மருதோன்றி வேரை யரைத்துச் சாப்பிட்டு விஷமித்தால், ஒருபலங் தான்றிக்காய்த் தோலைக் காற்படி ஜலத்திற்போட்டு ஒரு ஆழாக்காகச் சுண்டவைத்து வடிகட்டிப் பானஞ் செய்விக்கவும். இவ்விதம் மூன்றுபோது கொடுக்க மேற்படி விஷமுறிந்து போகும்.

ஊமத்தங்காயைத் தின்றுவிஷமித்தால், தாமரையிலையை யிடித்துப் பிழிந்தசாறு சுமார் அரையாழாக்குப் பானஞ் செய்விக்க, மேற்படி விஷமுறிந்து போகும்.

கள்ளிப்பாலைக் குடித்து விஷமித்தால், நிலஆவாரையை யிடித்துப் பிழிந்த சாற்றைச் சிறுகச் சிறுகக் குடிப்பாட்ட, மேற்படி விஷமுறிந்து போகும்.

அலரிவேரை யரைத்து எண்ணெயிற் கலக்கிக் குடித்து விஷமித்தால், ஒருபலங் கடுக்காய்த்தோலை

ஒரு ஆழாக்கு ஜலத்திற் போட்டு அரை ஆழாக்காகக் காய்ச்சி வடிகட்டிப் பானஞ் செய்விக்க, அந்த விஷந் தீரும்.

நெய்யை அளவிலதிகமாய்க் குடித்து விஷமித்தால், சற்று சூடான வெந்நீரைக்குடிப்பாட்ட, அந்த விஷ முறிந்துபோகும்.

நெல்லிவேரை யரைத்துச் சர்க்கரையிற் கலந்து சாப்பிட்டு விஷமித்தால், அரைஆழாக்கு எலுமிச்சம் பழச்சாற்றைக் குடிப்பாட்ட, அந்த விஷம்முறிந்து போகும்.

சுண்ணாம்பை அதிகமாகத் தின்று விஷமித்தால், மஞ்சளை யரைத்து ஜலத்திற் கரைத்துப் பானஞ்செய்விக்க, அந்த விஷமுறிந்து போகும்.

நேர்வாளத்தை யுண்டு விஷமித்தால், வசம்பைச் சுட்டுச் சாம்பலாக்கித் தேனிலிழைத்துச் சாப்பிட, அந்த விஷமுறிந்து போகும்.

சிவதைவேரை யதிகமாகச் சாப்பிட்டு விஷமித்தால், வெள்வேலம் பட்டைச் சாற்றைப்பானஞ்செய்ய, அந்த விஷமுறிந்து போகும்.

குன்றிமணிப் பருப்பை யதிகமாகச் சாப்பிட்டு அது விஷமித்தால், வெண்காரத்தைப்பொரித்துப்பொடித்து நெய்யிலனுபானித்துண்ண, அந்தவிஷ முறிந்து போகும்,

வெள்ளைப் பாஷாணத்தைத் தின்று விஷமித்தால், ஒருபலம் மிளகை வறுத்துஉடைத்து ஒரு ஆழாக்கு ஜலம் விட்டு அரை ஆழாக்காகச் சுண்டவைத்துப்

பானஞ் செய்விக்க, மேற்படி விஷமுறிந்து போகும்.

வெற்றிலைச் சாற்றையும் நல்லெண்ணெயையும் சேர்த்துக் குடித்து விஷமித்தால், முற்றினதேங்காய்ப்பாலைக் குடிப்பாட்ட, அந்த விஷமுறிந்து போகும்.

வீரத்தைத் தின்று விஷமித்தால், புளியாரைச்சாற்றைச் சுமார் ஒரு ஆழாக்குப் பானஞ் செய்விக்க, அது முறிந்து போகும். இன்னும் மாசிக்காயைப்பொடித்து வெள்ளாட்டுப் பாலிற் போட்டுக் கலக்கிப்பானஞ் செய்வித்தாலும் நீங்கும்.

இரச கர்ப்பூரத்தைத் தின்று வாய் வெந்தாலும் விஷமித்தாலும், படிக்காரத்தைப் பொரித்துப் பொடித்து இளநீரிற் போட்டுப் பானஞ் செய்விக்க, அந்தவிஷமுறிந்து போகும்.

தாளகத்தைத் தின்று விஷமித்தால், ஓமத்தை வறுத்துக் கருக்கி ஆழாக்கு ஜலத்தைவிட்டு அரை ஆழாக்காகச் சுண்டவைத்து வடிகட்டிப் பானஞ்செய்விக்க, அந்த விஷமுறிந்து போகும்.

இரசப் பதங்கத்தைச் சாப்பிட்டு வாய் வெந்தாலும், விஷமித்தாலும், பசும்பாலைக் குடிப்பாட்டிவர, அந்த விஷமுறிந்து போகும்.

அவுரிவேரைச் சிதைத்துப் ஆழாக்கு ஜலத்திற் போட்டு அரை ஆழாக்காகச் சுண்டவைத்து வடிகட்டிப் பானஞ் செய்விக்க, எல்லாவகை நஞ்சுகளும் முறியும்.

ஓனுங்கொடிக் கொழுந்தைபடரத்து ஒருகொட்டைப்பாக்களவு காலைமாலையிரண்டுவேளையுந்தின்றுவர எல்லாவிஷமு முறியும்.பா-ிா-204-முதல்211-வரை.

## குறிப்பு.

இந்த ஓனுங்கொடியை அதிகமாக உபயோகித்துவந்தால் சிலருக்கு அன்னத்துவேஷ முண்டாவது வழமை யாதலால் இதனை அதிகமா ளுபயோகிக்காமல் ஜாக்கிரதையா யிருக்கவேண்டும்.

---

## 64. மண்டூர பற்பம்.

ஏழுமணிசிபிடிக்குங் காந்தம் பலம்-க, சுத்திசெய்த அயஅரபொடி பலம்-க, சுத்திசெய்த இரசம், சுத்திசெய்த கெந்தகம், இவை வகை-க-க்குப் பலம்-க, சுத்திசெய்த நேர்வாளப் பருப்பு, மிளகுத்தூள், மஞ்சட்கடுக்காய்த்தோற் சூரணம், நெல்லிமுள்ளிச் சூரணம், இவை வகை-க-க்குப் பலம்-வ, கரும்புச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரசத்தையும் கெந்தகத்தையும் தொந்தித்து நன்றாய்க் கருக்கிற வரையிலரைத்துப் பிறகு மற்றச் சரக்குகளையுஞ் சேர்த்து ஒருமணி நேரமரைத்து எல்லா மிஸ்ரமானபின்பு,கரும்புச்சாற்றை சிறுகச் சிறுகவார்த்து நான்குசாம நேரமரைத்துச் சிறு பில்லைகளாகச் செய்து வெயிலிலுலர்த்தி ஓட்டிவிட்டு மேலோடு மூடி ஏழுசீலைமண் செய்து உலர்த்தி இருநூற்றன்பது பல விராட்டியிற் புடமிட்டு ஆறினபின் எடுத்துச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—குன்றிமணிஎடை-ந-ச.

அநுபானம்:—தேன், இஞ்சிச்சாறு முதலிய வைகளாம்.

உபயோகம்:–பித்தகரப்பான், பொறிகரப்பான், கொள்ளிக்கரப்பான், செங்கரப்பான், சூலை, முடக்குவாதம், விப்பிருதி ரோகம், மேகரோகங்கள் முதலிய அநேக ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—வியாதிபலம், தேகபலம் ஆகியவைகளுக்குத் தகுந்தபடி யேற்படுத்த வேண்டியது.

பா-கி-22-21.



## 65. வெள்வங்க பற்பம்.

சுத்திசெய்த வெள்வங்கம் பலம்-க, * புகைநீர் செல்லத்தக்க அளவு, உலர்ந்த வேப்பிலை செல்லத் தக்க அளவு.

செய்முறை:—வங்கத்தை யுருக்கிப் புகைநீரை ஒரு மண்பாத்திரத்திற் போட்டுக் கொண்டு அதில்விட வேண்டும். இந்தப் புகை நீரானது உருக்கிவிட்ட வங்கம் மூழ்கிநிற்கும்படியாக இருக்க வேண்டும். குளிர ஆறினபின்பு, வங்கத்தை யெடுத்து மறுபடியும் உருக்கி முன்போலவே புகைநீரில் விடவேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கிச் செய்ய வங்கமானது நொறுங்கித் தூளாகிவிடும். பிறகு இருப்புப் பாத்திரத்தில் அல்லது மண்பாத்திரத்திற் போட்டுக் கொல்லுலையில் வைத்து நன்றாய்ப் பழுக்க ஊதி ஐந்து ஐந்

* இதன் விபரம் பின் சொல்லப்படும் வெடியுப்புத்திராவகத்திற் காணவும்.

து வேப்பிலையைப் போட்டு இரும்புக் குச்சியால் தூளாகி வரவேண்டும். இவ்விதம் இரண்டுசாமம் வறுத்தெடுக்க களங்க மற்றபற்பமாகும். எடுத்துப் பொடித்துச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை-உ-ச.

அனுபானம்:--மேற்சொல்சீவின சுக்குச்சூரணம், மிளகுச்சூரணம், அரிசித்திப்பிலிச் சூரணம் இவை வகை ஒன்றுக்குச் சமனெடையாகச் சேர்த்து வைத்துக் கொள்ளவும். இந்தத் திரிகடுகு சூரணத்தில் விராகனெடை-ஒ, எடுத்து மேற்படி பற்பத்திற் பிரமாணப்படி சேர்த்துத் தேனில் அல்லது நெய்யில் அனுபானித்து உண்ணவும்.

உபயோகம்:—பாண்டு, சோகை, காமாலை, உளமாந்தை முதலிய ரோகங்கள் தீரும்.

பத்தியம்:—புளி, புளிப்பு வஸ்துக்கள் முதலியவைகளை நீக்க வேண்டும். பா-நி- 38.



## 66. கருவங்க பற்பம்.

கருவங்கம் விராகனெடை-கஉ, நாட்டு நவச்சாரம் விராகனெடை-சஉ, கருவங்கத்தை உருக்கி மேற்படி நவச்சாரத்தைத் தூள் செய்து கிராசித்துப் புகையடங்கினபின் மறுபடியும் கிராசம் கொடுக்கவேண்டியது. இவ்விதம் நவச்சாரத் தூளெல்லாம் செல்கிற வரையில் கிராசித்து எடுக்க ஒருவகைச் சுத்தியாகும்.

பிறகு சுத்திசெய்தகோழிமுட்டையோடு அல்லது பேரண்டவோடு விராகனெடை-அ, நாட்டு நவச்சா

ரம் விராகனெடை-சஉ. இவ்விரண்டையும் மைபோலத் தூள்செய்து முன்சித்தப்படுத்தியிருக்கிற வங்கத்தை யுருக்கி, உருக்கு முகத்தில் இதனை ஒவ்வொரு சிட்டிகையாகக் கிராசித்து இரும்புக் குச்சியால் துளாவி வரவேண்டும். இவ்விதம் எல்லாத் தூள்களும் செல்கிற வரையிற் செய்ய, வங்கமானது சத்தில்லாமல் முடிந்துபோகும். பிறகு அதை யெடுத்துக் கல்வத்திலிட்டுப் * புகைநீரைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமமரைத்து பில்லைசெய்துலர்த்தி அகலிலிட்டு மேலகல் மூடி ஏழு சீலைமண் செய்து கெஜபுடமிட்டுக் குளிர ஆறினபின்னெடுக்க, திவ்யமான பற்பமா யிருக்கும்.

பிரமாணம்;—குன்றிமணியெடை-க-உ.

அனுபானம்:—தேன், நெய் முதலியவைகளாம்.

உபயோகம்:—மேகரோகம், குன்மரோகங்கள், தோஷங்கள் முதலியவைகள் தீரும். பா. நெ. -44.



## 67. கருவங்க பற்பம் (வேறு.)

கருவங்கத்தூள் பலம்-க, அண்ட ஓட்டுத்தூள் பலம்-க, * புகைநீர் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—இரண்டுதூள்களையும் கல்வத்திலிட்டு மேற்படி புகைநீரைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமமரைத்துப் பில்லை செய்துலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடு மூடிச் சீலைமண் செய்து உலர்த்தி

* இதன் விபரம் பின் சொல்லப்படும் வெடியுப்புத்திராவகத்திற் காண்க.

இருநூற்றைம்பது பல விராட்டியிற் புடமிட்டாறின பின்னெடுக்கத் திவ்யமான பற்பமாயிருக்கும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை-உ-ச.

அனுபானம்:—தேன், நெய் முதலியவைகளாம்.

உபயோகம்:—இருமல், காசரோகம், காசரோகத்திலுண்டாகும் வாந்தி, மேகரோகம், தேகவறட்சி, அதிதாக ரோகம், தேகவுளைச்சல் முதலியவைகள் தீரும். பா-ி- 148.



## 68. தாம்பிர பற்பம்.

சுத்திசெய்த தாம்பிர அரபொடி பலம்-க, வெள்ளைப்பூண்டுத்தைலம் பலம்-உ0, கோதுமைமா செல்லத்தக்க அளவு.

செய்முறை:—வெள்ளுள்ளித் தைலத்தைப் பீங்கான் பாத்திரத்தில்விட்டு அதில் மேற்படி தாம்பிர அரபொடியைப்போட்டு வெயிலில் வைத்து வரவேண்டும். பிரதிதினமும் இரண்டொருதடவை நன்றாய்க் கலக்கியும் வரவேண்டும். இடையில் தைலம் உலர்ந்துபோய்விட்டால் செல்லத்தக்க அளவு தைலத்தையும் விட்டுக் கொள்ளவேண்டும். இவ்விதம் இருபதுநாட் சென்றபின்பு எடுத்து அடைபோல்தட்டி பீங்கான் பாத்திரத்தில்வைத்து உலர்த்தவேண்டும். இந்த அடையை ஒருநாளைக் கொருதடவை புறமாற்றிவைத்தும் வரவேண்டும். பிறகு கோதுமைமாவைக் குழைத்து இரண்டு அடையாகத்தட்டி அவைகளுக்கு மத்தியில் முன் சித்தப் படுத்தி வைத்திருக்கிற தாம்பிர

அரபொடி அடையைவைத்துச் சந்தில்லாமல் இரண்டு அடைகளையும் நசுக்கிப் பொருத்தி உலர்த்தி அதன்மீது இரண்டு சீலைமண் செய்துலர்த்தி மூன்றுசாண் சதுரக்குழிவெட்டி அதில் அரைவாசி விராட்டித்தூள், புளியம்புறணித்தூள், ஆட்டுப் புழுக்கை ஆகிய மூன்றையும் சமமாகச்சேர்த்துப் பரப்பிக் கவசத்தை வைத்து அதன்மீது முன்போலவே வராட்டித்தூள், புளியம் புறணித்தூள், ஆட்டுப் புழுக்கைத்தூள் ஆகியவைகளைச் சமபாகமாகச் சேர்த்துக் குழிநிறையப் போட்டு நெருப்பிட்டு நன்றாய்க்குளிர ஆறினபின் னெடுக்கக் கறுஞ்சாயலான வெள்ளைப் பற்பமாயிருக்கும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை - க - உ.

அனுபானம்:—தேன், நெய், இஞ்சிச்சாறு முதலியவைகளாம்.

உபயோகம்:—மேகரோகங்கள், குன்மரோகங்கள், இருமல் ரோகங்கள், வாயுரோகங்கள் ஆகியவைகள் தீரும். பா - ௬ - 47.



## 69. பவளச் சுண்ணம்.

பவளம், அல்லது, பவளப்புற்று பலம்-க, ஆடாதோடைப் பூவை பிட்டுப்போலவித்துப் பிழிந்து எடுத்த சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—மேற்படி பவளத்தை, அல்லது, பவளப் புற்றைக் கல்வத்திலிட்டுப் பொடித்து மேற்படி சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமமரைத்து பில்லைசெய்துலர்த்தி ஈரமில்லாமல் நன்றாயு

லர்ந்தபின்பு குகையிலிட்டு மேற்சில்லிட்டுச் சீலமண் செய்து குகை பழுக்கும்படியாக ஊதியெடுத்து வைத்து ஆறினபின் உடைத்துப்பார்க்கச் சுண்ணமாகியிருக்கும். மஞ்சளிற் போட்டாற் சிவக்கும். அப்படிச் சிவக்காவிட்டால் இன்னொருதடவையும் முன்போற் செய்து கொள்ளவும்.

பிரமாணம்:—குன்றுமணியெடை - ௨ - ௬.

அனுபானம்:—வெண்ணெய், நெய், தேன் முதலியவைகளாம்.

உபயோகம்:—இருமல், க்ஷயம், காசம், சினுக்கிருமல் முதலிய கபரோகங்கள், உஷ்ணரோகங்கள் முதலியவை தீரும். பா - ௭ - 186.



## 70. அப்பிரேக தாளகச் சுண்ணம்.

படிக்காரம் பலம் - க, இதனை நமது இரசவாத சிந்தாமணி பாகத்திற் சொல்லியிருக்கிறபடி கரியில் வைத்தூதிச் சுண்ணமாக்கிக் கொள்ளவேண்டும்.

பிறகு அப்பிரேக நவநீதம் ஒருபங்கு, சவ்வீரம் பங்கு-க, இவ்விரண்டையும் சேர்த்து ஜலம்வார்த்தரைக்க வெண்ணெய்போலாம். இதனை பில்லைசெய்து படிக்காரத்தை ஊதினதுபோலவே இதனையும் கரியில் வைத்தூதி யெடுக்கச் சுண்ணமாகும்.

பிறகு சுத்திசெய்த தாளகம் பலம் - ௨, இது ஒரேகட்டியாக இருக்கவேண்டும். பிறகு முன் சித்தப்படுத்தின சீனச்சுண்ணம் பலம் - ௨, சித்தப்படுத்தின அப்பிரேகச் சுண்ணம் பலம் - ௨, இவ்விரண்டையும்

கல்வத்திலிட்டு உமிநீரைவிட்டு மெழுகுபோலரைத்து த் தாளகக்கட்டிக்குக் கவசம்செய்துலர்த்தி ஒருசட்டியில் நாலங்குலகனம் கற்சுண்ணமிட்டு அதன் நடுவில் முன் சித்தட்படுத்தின தாளகக் கட்டியைவைத்து அதன்மேலும் சுண்ணத்தைக்கொட்டி சட்டிவாயைமூடிச் சீலைமண்செய்து அடுப்பேற்றி நான்குசாமம் எரித்து ஆறினபின்னெடுக்க, வெண்மையான பற்பமாகி யிருக்கும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை-க-உ.

அனுபானம்:—தேன், நெய். வெண்ணெய் ஆகியவைகளாம்.

உபயோகம்,—க்ஷயம், காசம்; ஈழை, இருமல் முதலிய கபரோகங்களெல்லாம்தீரும்.

பா - நெ - 107 - 108.

குறிப்பு

மேற்கண்டபடி படிக்காரத்தையும் அப்பிரேகத்தையும் சுண்ணம்செய்து தாளகத்திற்கு அங்கிபூட்டி பஸ்பம்செய்வதில் விசேஷமென்பதிற் சந்தேகமில்லை. அப்படிச் செய்யக்கூடாத சமையங்களில் படிக்காரத்தைப் பொரித்ததூள் தாளகத்திற்குச் சமனெடை, அப்பிரேக நவநீதம் தாளகத்திற்குச் சமனெடை, இந்த இரண்டையும் உமிநீர்விட்டரைத்து மேற்படி தாளகத்திற்குக் கவசம்செய்து முன்போற் சுண்ணாம்பில் வைத்தெரித்தெடுக்கப் பற்பமாகிவிடும். மேற்கண்ட ரோகங்களில் உபயோகிக்கலாம்.

## 71. அயச்செந்தூரம்.

அய அர்பொடி வேண்டிய அளவு, சோற்றுக் க ற்றாழைச் சோற்றில் மஞ்சட் கடுக்காய்த்தோலை நசிய இடித்துச் சேர்த்து ஒருசாம நேரம் வைத்துப் பிறகு நன்றாய்ப்பிசைந்து வடிகட்டி ஜலத்தை யெடுத்துக் கொள்ளவேண்டும். அயத்தை ஒரு இரும்புப் பாத்தி ரத்திற்போட்டு அடுப்பேற்றி நன்றாய்ச் சிவக்கக்காய் ந்தபின்பு முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற சோற் றுக்கற்றாழைச் சாற்றைவிட்டு இரும்புக் கரண்டியா ல் துளாவி வறுக்கவேண்டும். விட்ட சாறானது சுண் டி வற்றிவிட்டால் மறுபடியும் முன்போல் முன் சா ற்றைவிட்டு வறுக்கவேண்டும். அயத்தூளானது நன் றாய் மடிந்து மாவைப்போலாகிற வரையில் முன்சாற் றை முன்போல் மடக்கி மடக்கிவிட்டு வறுக்கவேண் டும். பிறகு அந்த அயத்தூளின் சமனெடை துத்திவே ர்ப்பட்டைச் சூரணம், இவ்விரண்டையும் சேர்த்துக்க ல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுகச்சிறு கவிட்டு நான்கு சாமமரைக்க வேண்டும். இவ்விதம் அ ரைத்து ஈரமுலர்ந்தபின்பு சிறுபிள்ளைகள் மூத்திரத் தைச் சிறுகச் சிறுகவிட்டு நான்கு சாமமரைக்கவே ண்டும். பிறகு பில்லைதட்டி யுலர்த்தி ஓட்டிலிட்டு மே லகல்மூடி ஐந்து சீலைமண்செய்து உலர்த்தி முழ நீள மும் சாண் ஆழமுமுள்ள குழி ஒன்று தோண்டி அ தில் அரைவாசி வராட்டியை அடுக்கி அதன்மேல் மு ன் சித்தப்படுத்திய கவசத்தைவைத்து அதன்மீதும் விராட்டியை அடுக்கி நெருப்பிட்டு எரிந்து குளிர ஆ றினபின் எடுத்துக் கவசத்தைப்பிரித்து அகலிலுள்ள மருந்தைக் கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச்சாற்றை

விட்டு முன்போல் நான்கு சாமமரைத்து ஈரமுலர்ந்த பின்பு சிறுபிள்ளைகள் மூத்திரத்தைவிட்டு நான்குசாமமரைத்து முன்போல் பில்லைசெய்துலர்த்தி முன்போற் புடமிடவேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கிப் பத்துப்புடமிட்டால், அயமானதுசிவந்து திவ்யமான செந்தூரமாகும்.

பிரமாணம்:—குன்றிமணி யெடை - க - உ.

அனுபானம்:—தேன், நெய், வெண்ணெய் முதலியவைகளாம்.

உபயோகம்:—இரத்த க்ஷீண ரோகங்கள், வாத ரோகங்கள். பித்தபாண்டு ரோகங்கள்; வீக்கங்கள், அன்னத்துவேசம் முதலிய பலரோகங்கள் தீரும்.

பத்தியம்:—இரத்த க்ஷீண ரோகங்களில் புளியை அறவே நீக்கவேண்டியது. மற்ற ரோகங்களில் வியாதிபலம், தேகபலம் ஆகியவைகளுக்குத் தகுந்தபடி உப்பு, புளி முதலியவைகளை அறவே நீக்கியும், சொற்பமாகச்சேர்த்தும் பத்தியம் ஏற்படுத்தவேண்டியது சிகிச்சகர்களின் கடமையாம். பா - நெ - 37.

குறிப்பு.

இந்த அயசெந்தூரமானது கெந்தகம் சேராமற் செந்தூரிக்கப்படுகின்றபடியால், அருமையான முறைகளில் இதுவும் ஒன்று. இதனால் தாதுநஷ்டம், இந்திரிய நஷ்டம் முதலியவைகளும் தீர்ந்து, தேகதிடம், தேகபலம், தேககாந்தி முதலியவைகளுண்டாகும்.

## 72. அயக்காந்த செந்தூரம்.

நல்ல திறமான காந்தம் எட்டுப்பங்கு, சுத்திசெய்த அய அரபொடி பனிரெண்டுபங்கு, பொரித்த வெண்காரம் பனிரெண்டுபங்கு, சோற்றுக் கற்றாழைச்சாறு செல்லத்தக்க அளவு,

செய்முறை.—— முன் மூன்று சரக்கையும் கல்வத்திலிட்டு எல்லாமிஸ்ர மாகும்படி ஒருமணி நேரமரைத்துப் பிறகு கற்றாழைச் சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டுசாம நேரமரைத்து பில்லைசெய்து தாம்பூரதாலத்தில் ஆலிலையைப்பரப்பி அதன்மேல் முன் பில்லையைவைத்துக் கடுவெயிலில் வைக்கவேண்டும். மறுநாள் பில்லையைக் கல்வத்திலிட்டுப் பொடித்துக் குமரிச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டுசாமமரைத்துப் பில்லைசெய்து முன்போல் வெயிலிலுலர்த்தவேண்டும். இது நன்றாய்ச் சிவக்கிறவரையில் இவ்விதம் மடக்கி மடக்கி அரைத்தும் வெயிலில்வைத்தும் வரவேண்டும். பிறகு பொடித்து பேய்ச்சுரக்காய்க்குடுக்கையில் பத்திரப்படுத்தவேண்டும்.

பிரமாணம்:—-குன்றிமணியெடை-க-௩ உ.

அனுபானம்:—தேன், நெய், வெண்ணெய் ஆகியவைகளாம்.

உபயோகம்:—பாண்டுரோகங்கள், சோகைரோகங்கள், காசரோகம், இரத்தகாச ரோகம், ஈழைரோகம், இருமல், இரைப்பு, நாட்பட்டசுரம், நடுக்கல்சுரம், அக்கினிமந்தம், காமாலை, நீராமை முதலியவைகள் தீரும்.

பத்தியம்:—புளிப்பை அறவே நீக்கி இம்மருந்தை உபயோகித்தால் ஏழரை நாளைக்குள் சுகுணமுண்டாகும். பா-செ-23. 24.

---

## 73. சுயமக்கினி செந்தூரம்.

சுத்திசெய்த அயஅரபொடி பலம்-கஉ, கெந்தகம் பலம-கஉ, சுத்திசெய்த இரசம் விராகனெடை-௬, சுத்திசெய்த கெந்தகம் விராகனெடை-ரு, பொரித்த வெண்காரம் விராகனெடை-ரு, எலுமிச்சம்பழச் சாறு செல்லத்தக்க அளவு, ஆற்றுத்தும்மட்டிக்காய்ச் சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—முன் சரக்குகளில் இரசத்தையும் கெந்தகத்தையும் சேர்த்தரைத்து நன்றாய்க் கறுத்த பின்பு மற்றச்சரக்குகளையும் சேர்த்து ஒருமணி நேரமரைத்துப் பிறகு எலுமிச்சம்பழச் சாற்றைவிட்டு நான்குசாமமரைத்து ஈரமுலர்ந்த பின்பு கும்மட்டிக்காய்ச் சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து நான்கு சாமமரைத்து வெண்கலத்தாலத்திற் போட்டுக் கடுவெயிலில் வைக்க வேண்டும். நன்றாய்ச் சிவந்து செந்தூரமாகிவிடும். அப்படிச் சிவக்காவிட்டால், முன்போல் எலுமிச்சம் பழச்சாற்றிலும் ஆற்றுத்தும்மட்டிக்காய்ச் சாற்றிலும் முறையே யிரண்டிரண்டு சாமமரைத்து முன்போற் சூரியபுடமிடவும். நன்றாய்ச் சிவக்கிறவரையில் இவ்விதம் அரைத்தும் சூரியபுடமிட்டும் சித்தப்படுத்திக் கொள்ளவேண்டியது.

பிரமாணம்:—குன்றிமணியெடை-க-கஉ.

அநுபானம்:—தேன், நெய், வெண்ணெய் முதலியவைகளாம்.

உபயோகம்:—சோகை ரோகங்கள், பாண்டுரோகங்கள், கௌசை ரோகங்கள், அரையாப்பு, அக்கினிமந்தம், அஜீரணரோகம் ஆகியவைகள் தீரும்.

பத்தியம்:—வியாதிபலம், தேகபலம் ஆகியவைகளுக்குத் தகுந்தபடி யேற்படுத்திக் கொள்ளவேண்டும். பா-நெ- 39.

---

## 74. கருவங்க செந்தூரம்.

சுத்திசெய்த கருவங்கம் பலம்-௪, வெடியுப்பு பலம்-௪, எருக்கம்பால் செல்லத்தக்க அளவு, சோற்றுக்கற்றாழை அடிமரத்துப்பால் செல்லத்தக்க அளவு.

செய்முறை:—வெடியுப்பைக் கல்வத்திலிட்டுப் பொடித்து எருக்கம்பாலைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து சுண்டைக்காய்ப் பிரமாணமுள்ள மாத்திரைகளாகச் செய்து வைத்துக் கொள்ளவேண்டும். கருவங்கத்தைச் சட்டியிலிட்டு அடுப்பேற்றி உருக்கி நன்றாயுருகினபின்பு முன்சித்தப்படுத்தியிருக்கிற வெடியுப்பு மாத்திரைகளை ஒவ்வொன்றாகக் கிராசித்து இரும்புக் குச்சியால் துளாவி வரவேண்டும். எல்லா மாத்திரைகளும் சென்றுவிட்டால் கருவங்கமானது நொறுங்கிக் களங்கற்றதாகிவிடும். பிறகு இதனைக் கல்வத்திலிட்டுக் குமரிப்பாலைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்து பில்லைசெய்து வர்த்தி ஓட்டிலிட்டு மேலோடு மூடி ஐந்து சீலைமண்

செய்து இருநூறுபல விராட்டியிற் புடமிட்டு ஆறின பின் எடுக்க முருக்கம்பூப் போன்ற செந்தூரமாகியிருக்கும்.

பிரமாணம்:—குன்றிமணி யெடை-கு. உ.

அனுபானம்:—தேன், நெய், வெண்ணெய், அந்தந்த வியாதிகளுக்குத் தகுந்த லேகியங்கள், சூரணங்கள் முதலியவைகளாம்.

உபயோகம்:—பிரமேகம், குன்மரோகம், பிறங்கிச்சூலை, வாதரோகம், பித்தரோகம், அதிசாரமூலம், மூலரோகம், க்ஷயம், இருமல், வெட்டைரோகம், அரையாப்பு, புற்றுகள், இந்திரிய சிராவக ரோகம்,மேகரோகம் முதலியவைகள் தீர்ந்து, தாது விருத்தி, தேகதிடம் முதலியவைக ளுண்டாகும். பா-தி-173-178.

குறிப்பு.

இது வாதமுறைகளுக் காகுமென மூலத்திற் சொல்லி யிருப்பினும் இது வியாதிகளுக்கே விசேஷமாய் உபயோகப்படுத்தப் படுகின்றபடியால் இதனை வைத்திய முறைகளுடன் சேர்த்தெழுதி யிருக்கின்றோம்.

---

## (74 a) கருவங்க செந்தூரம். (வேறு)

கருவங்கம் பலம்-க, பேரண்ட ஓடு, அல்லது, சிற்றண்ட ஓடு பலம்-க, இதனைப் பொடித்துத் தூள் செய்துகொள்ள வேண்டும். வங்கத்தைச் சட்டியிலிட்டு உருக்கி உருக்கு முகத்தில் மேற்படி அண்டத் தூளைச் சிறுகச் சிறுகக் கிராசித்து இரும்புக் குச்சியால் து

ளாவிவர வேண்டும். எல்லாத் தூளும் சென்று வங்கமும் கொறுக்கித் தூளான பின் எடுத்துக் கொள்ளவும்.

சோற்றுக்கற்றாழைச் சோற்றில் கடுக்காய்த் தூளைப்போட்டுப் பிசைந்து வடிகட்டின ஜலம் செல்லத்தக்க அளவு. மேற்படி வங்கத்தூளைக் கல்வத்திலிட்டு மேற்படி சோற்றுக் கற்றாழைச் சாற்றைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்துப் பில்லை செய்து லர்த்தி ஒட்டிலிட்டு மேலோடுமூடி, மூன்று சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் ஐந்து பங்கெடை விராட்டியிற் புடமிட்டு ஆறினபின் எடுத்துக் கொள்ளவும்.

பிறகு மருந்தை யெடுத்துக் கல்வத்திலிட்டு முன்போலரைத்து முன்போற் புடமிடவும். இவ்விதம் மடக்கிமடக்கி ஐந்து புடமிடச் சிவந்துபோகும். அப்படிச் சிவக்காவிட்டால் சிவக்கிற வரையில் இன்னும் இரண்டொரு புடமிடவும்.

பிறகு இச்செந்தூரம் ஒருபங்கு. மனோசிலை ஒரு பங்கு, சுத்திசெய்த இரசம் ஒருபங்கு, இம்மூன்றையும் கல்வத்திலிட்டரைத்து எல்லாம் ஒன்றாய்க் கலந்த பின்பு எருக்கம்பாலைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்துப் பில்லைசெய்து உலர்த்தி ஒட்டிலிட்டு மேலோடு மூடி எழுசீலைமண்செய்து உலர்த்திக் கவசத்தின் பத்துப் பங்கெடை விராட்டியில் புடமிட்டெடுக்க, முருக்கம்பூப்போன்ற செந்தூரமா யிருக்கும்.

பிரமாணம்:--குன்றிமணி யெடை-க. க, உ.

அநுபானம்:—தேன், நெய், வெண்ணெய் முத லியவைகளாம்.

உபயோகம்:—க்ஷயம், காசம், வாதரோகங்கள், குன்மரோகங்கள், சூலைரோகங்கள், பித்தரோகங்க ள், கருப்புமேகங்கள், அரைப்புற்று, லிங்கபுற்று, ம கோதரம், பவுத்திரம் முதலிய அநேக ரோகங்கள் தீ ரும்.

பத்தியம்:—முருங்கைப்பிஞ்சு, அரைக்கீரை, அ வரைப் பிஞ்சு, மாங்கொட்டை, சுட்டபுளி, பசுவின் பால் ஆகியவைகள் ஆகுமெனினும், வியாதிபலம், தே கபலம் முதலியவைகளுக்குத் தகுந்தபடி தேக சுபா வத்திற்கு ஏற்கும் வஸ்துக்களைச் சேர்த்தும் ஏற்காத வஸ்துக்களை நீக்கியும் பத்தியம் வைக்கவேண்டியது சி கிச்சகர்களின் கடமையாம். பா-கி 197-198.

---

## 75. அப்பிரேக செந்தூரம்.

(a) புகைநீர் பலம்-க. சுத்திசெய்த இரசம் பலம் -க, மேற்படி புகைநீரைப் பீங்கான் கிண்ணத்தில் வி ட்டு மேற்படி இரசத்தை அதில் விட்டு வெயிலில்வை த்துவர, இரசமானது வெண்ணிறமாகப் பூத்துப்போ கும். இதனை யெடுத்து வைத்துக்கொள்ளவும்.

(b) கிருஷ்ண அப்பிரேக நவநீதம் பலம்-க, வீர ம் பலம்-வ, இவ்விரண்டையும் சேர்த்து புகைநீரைவி ட்டு ஒருசாம நேரமரைத்து பில்லை செய்துலர்த்தி அ கலிலிட்டு மேலகல்மூடி, ஐந்து சீலைமண் செய்துலர்த் திக் கவசத்தின் இருபது பங்கெடை விராட்டியிற் பு டமிட்டு ஆறினபின்னெடுத்து அந்த எடை அரிதா

ரம் சேர்த்துப் பொடித்துப் புகைநீரை விட்டு இரண்டு சாமமரைத்துப் பில்லை செய்துலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடு மூடிச் சீலைமண் செய்து கஜபுடத்தி னெடைக்கு இருபது பங்கெடை விராட்டியில் புடமிட்டெடுக்க, அப்பிரேகம் சிவந்த நிறமுள்ள தா யிருக்கும்.

பிறகு இந்த அப்பிரேகச் சிவப்பு இரண்டிடை, (௩) யிலுள்ள இரசவெள்ளை ஒருபங்கு, இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டுப் புகைநீரைச் சிறுகச் சிறுக விட்டு ஒருமணி நேரமரைத்து இதனை வழித்து நெருப்புப் பீங்கானிற்போட்டு அது ஆழ்ந்திருக்கும்படியாகப் புகைநீரை விட்டு உமிநெருப்பின்மீது வைத்துப் புகையாமல் ஜாக்கிரதையாக வறுத்து ஈரமில்லாமல் உலர்ந்த பின்பு ஏழுசீலைமண்செய்த குப்பியிலிட்டு,வாயை மாக்கல்லால் மூடிச் சீலைமண்செய்து ஒருமண்பானையில் நாலங்குலம் மணல் பரப்பி, அதன்மேல்குப்பியை வைத்து குப்பிமறையும்படியாக மணலைக்கொட்டி அடுப்பேற்றிக் கமலாக்கினியாகப் பனிரெண்டு சாமம் எரித்துக் குளிர ஆறினபின் குப்பியை உடைத்துப் பார்க்க முருக்கம்பூப் போன்ற செந்தூரமாகி யிருக்கும்.

பிறகு இதனை நெருப்புப் பீங்கானிலிட்டு அது ஆழ்ந்திருக்கும் படியாகப் புகைநீரை விட்டு முன்போல் உமிநெருப்பில் ஈரம் உலரும்படியாக வறுத்தெடுத்து முன்போற் குப்பியி லடைத்து எரித்தெடுக்கச் செந்தூரமாம்.

பிரமாணம்:—குன்றிமணி யெடை-௧. ௬௨.

அனுபானம்:—தேன், நெய், இஞ்சிச்சாறு முத லியவைகளாம்.

உபயோகம்:—எல்லாவகைச் சூலைரோகங்கள், இளம்பிள்ளை வாதமுதல் எண்பது வாதவகைகள், வெட்டை ரோகங்கள், மேகரோகங்கள், க்ஷயரோகங் கள், விஷசுரம், பிளேக்சுரம் முதலிய கொள்ளைநோ ய்கள் ஆகிய ரோகங்கள் தீரும். இது ஒரு கற்பமா கையால் இதனைச் சாப்பிட்டவர்கள் தேகம் செழித் துத் துளிர்த்து யௌவனத்தை யடையும். தேகத்தி லெவ்வித ரோகமுமுண்டாகாமற் பலப்படுத்தி வச்சி ர தேகமாக்கும். பா-ரி-40-முதல்-43.

---

## 76. தாளகக்கட்டு.

தேவையான கொட்டாங் கச்சிகளை யெடுத்துக் கொள்ளவும். தும்பையிலையை வெண்ணெய் போல ரைத்து மேற்படி கொட்டாங்கச்சிகளுக்குட் பூசி வெ யிலில் உலர்த்திக் கொட்டாங்கச்சிகளை யுடைத்துத் தோண்டிக்குள் போட்டுக் குழித்தைலமாக இறக்கி வைத்துக் கொள்ளவும், சுத்திசெய்த தாளகம் பலம்-க, (இது ஓரே கட்டியா யிருக்கவேண்டும்.) இ தனை ஒரு ஓட்டில் வைத்து சூடுகண்டபின்பு மேற்ப டி கொட்டாங்கச்சித் தைலத்தைத் தடவிச் சுருக்கி ட வேண்டும். இந்தத் தைலத்தால் நான்கு சாமம் சுருக்கிட்டால் தாளகமானது கட்டிப்போகும். இத னை யெடுத்துத் தூள்செய்து சீஷாவிற் பத்திரப் படுத்த வும்.

பிரமாணம்:—குன்றிமணி யெடை-க, உ.

அநுப்பானமும், உபயோகமும்:—கொம்புக் கள்ளியை நெருப்பில் வாட்டி யிடித்துப் பிழிந்தசாறு விராகனெடை-கஅ, தேன் விராகனெடை-கஅ, இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட தாளகக்கட்டைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண எல்லாவகை விஷமும் தீரும்.

தகரையிலைச்சாறு விராகனெடை-கஅ, தேன் விராகனெடை-கஅ, இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட தாளகக்கட்டைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண எல்லாவகைத் தேமல் ரோகங்களும் தீரும்.

இவ்விதமே குருவி ஆவிலைச்சாற்றினு மனுபானித்துண்ணத் தேமல் ரோகங்கள் தீரும்.

உலர்த்தின வெள்ளறுகு, உலர்த்தின வெள்ளைச் சாரணைக்கிழங்கு, அமுக்குரா கிழங்கு, சங்கங் குப்பி வேர்ப்பட்டை, ஆமணக்கு வேர்ப்பட்டை. இவற்றைத் தனித்தனி யிடித்து வஸ்திரகாயஞ் செய்த சூரணம் வகை-க-க்குப் பலம்-க, இவை யெல்லாவற்றையும் ஒன்றாய் மிஸ்ரமித்துக் கொள்ளவும். இந்தச் சூரணம் விராகனெடை-அ, தேன் விராகனெடை-க, இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட தாளகக் கட்டை யனுபானித்துண்ண எல்லாவகை மேகரோகங்கள், காமாலை ரோகங்கள் ஆகியவைகள் தீரும்.

மேற்கண்ட சூரணம் வகை-க-க்குப் பலம் - க, மேற்றோல் சீவின சுக்கு, மிளகு, அரிசித்திப்பிலி, இவற்றைத் தனித்தனியிடித்து வஸ்திரகாயஞ்செய்த

சூரணம் வகை-க-க்கு விராகனெடை-கவ இவை யெல்லாவற்றையும் ஒன்றாய் மிஸ்ரமித்து வைத்துக்கொள்ளவும். இந்தச் சூரணம் விராகனெடை-அ, தேன் விராகனெடை-க, இவ்விரண்டையு மிஸ்ரமித்து மேற்கண்ட தாளகக்கட்டைப் பிரமாணப்படி யனுபானித்துண்ண, வாதசூலை முதலிய எல்லாவகைச் சூலைரோகங்களும் தீரும். பா-செ-139-140.



## 77. தாளகச் செந்தூரம்

சுத்திசெய்த மடலரிதாரம் பலம்-க, இலைக்கள்ளிச்சாறு செல்லத்தக்க அளவு.

செய்முறை:—தாளகத்தைக் கல்வத்திலிட்டு நன்றாய்ப்பொடித்து மேற்படிசாற்றைச் சிறுகச்சிறுக வார்த்து நான்குசாமமரைத்து வெயிலில்வைத்து ஈரமில்லாமலுலர்த்திப் பொடித்து எழுசீலைமண்செய்த குப்பியிற்போட்டு வாய்க்கு மாக்கல்காரக் கிட்டடைத்து எழுசீலைமண் செய்துலர்த்தி ஒருபானையில்நாலங்குலமணல்கொட்டி அதன்மேல் முன் குப்பியைவைத்து குப்பி மறையும்படியாக மணலைக்கொட்டி அடுப்பேற்றிக் கமலாக்கினியாக நான்குசாமமெரித்துக் குளிர ஆறினபின் எடுக்க முருக்கம்பூப்போன்ற செந்தூரமாகி யிருக்கும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை-உ-ங.

அனுபானம்,—தேன், நெய் முதலியவைகளாம்.

உபயோகம்:—மேகரோகங்கள், குன்மரோகங்கள், பாண்டுரோகங்கள், பிரமேகம் முதலியவைகள் தீரும். பா-செ-10.

## 78. (a) அரிதாரச் செந்தூரம்.

அரிதாரம் பலம்-ச, (இது பெருத்த கட்டிகளாக இருக்கவேண்டும்.) ஊமச்சியைப்பிளந்து அதற்குள்ளிருக்கிற நீர் ஒருபங்கு, பின் சொல்லப்படும் வெடியுப்புத்திராவகம் பங்கு-க. இவ்விரண்டையும் சேர்த்துக்கலந்து செல்லத்தக்க அளவு எடுத்துக்கொள்ளவேண்டும். தாளகக் கட்டிகளை ஓட்டில்வைத்து அடுப்பேற்றிச் சூடுகண்டபின்பு முன் சேர்த்துவைத்திருக்கும் கிளிஞ்சிநீர்க் கலவையைச் சிறுகச் சிறுகக்கொடுத்துச் சுருக்கிடவேண்டும். நான்குசாமம் சுருக்கிட அரிதாரமானது எல்லாவகைத் தோஷமுமற்றுச் சுத்தியாகிவிடும்.

அப்பிரேக நவநீதம் பலம்-ச, வீரம் பலம்-க, இவ்விரண்டையும் சேர்த்துக் கல்வத்திலரைத்துப் பிறகு வெடியுப்புத்திராவகத்தைச் சிறுகச் சிறுகவிட்டு நான்குசாமமரைத்து பில்லைசெய்துலர்த்தி ஓட்டில்வைத்து மேலோடுமூடிச் சீலைமண்செய்து கவசத்தின் இருபதுபங்கெடை விராட்டியிற் புடமிட்டாறினபின் னெடுக்க ஒருவிதத் தூளாகியிருக்கும்.

இந்தத் தூளைக் கல்வத்திலிட்டு எருக்கம்பாலைச் சிறுகச் சிறுகவிட்டு நான்குசாமமரைத்து முன் சித்தப்படுத்தி யிருக்கிற தாளகக்கட்டிகளுக்குச் சமமாகக் கவசம்செய்து வெயிலிலுலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடுமூடி ஏழுசீலைமண்செய்துலர்த்திக் கவசத்தின் ஆறுபங்கெடை விராட்டியிற் புடமிட்டாறினபின்னெடுக்கத் தாளகமானது முருக்கம்பூப்போன்ற செந்தூரமாகியிருக்கும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை-க-உ.

அனுபானம்:—தேன், நெய் முதலியவைகள்.

உபயோகம்:—க்ஷயரோகம், காசரோகம், குன்மரோகம், மேகரோகம் முதலிய அநேக கடினரோகங்கள் தீரும்.

---

## 78. (b) வங்க அரிதார செந்தூரம்.

மேற்படி அரிதாரம் பலம்-ஒ, (74) வதிற் சொல்லியிருக்கிற கருவங்க செந்தூரம் பலம்-ஒ இரண்டையும் சேர்த்துக் கல்வத்திலிட்டு எருக்கம்பாலைச் சிறுகச் சிறுகவார்த்து நான்குசாமமரைத்து வில்லை செய்துலர்த்தி (78 a) யிற் சொல்லியிருக்கிறபடி அப்பிரேகத்தைப் பாகப்படுத்தி எருக்கம்பாலை விட்டரைத்து மேற்படி பில்லைக்குக் கவசம் செய்து வெயிலிலுலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடுமூடி ஏழுசீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் ஏழுபங்கெடை விராட்டியிற் புடமிட்டாறின பின்னெடுக்க திவ்யமான செந்தூரமாகி யிருக்கும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை-க-உ.

உபயோகம்:—இது காயசித்தி செந்தூரங்களில் ஒன்றானதாகையால் தேகத்திலுள்ள எல்லாவியாதிகளையும் நீக்கித் தேகத்தை வச்சிரகாயமாக்கி ஊக்கத்தையும் பலத்தையு முண்டாக்கும். பா-தி- 174-175.

---

## 79 இரச செந்தூரம்.

சுத்திசெய்த இரசம் பலம்-க, வெடியுப்பு திராவகம் செல்லத்தக்க அளவு.

செய்முறை:--இரசத்தைக கல்வத்திலிட்டு மேற்படி திராவகத்தைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைக்க வேண்டும். பிறகு வெயிலில் வைத்து உலர்த்திப் பொடித்து ஏழுசீலைமண் செய்த குப்பியிற் போட்டு வாய்க்கு மாக்கல்லடைத்துச் சீலைமண் செய்துலர்த்தி ஒரு பண்பானையில் நாலங்குலகன மணலிட்டு அதன்மேல் குப்பியை வைத்து குப்பிமறையும்படியாக மணலைக் கொட்டி அடுப்பேற்றிக் கமலாக்கினியாக ஒருசாமம் எரித்து ஆறவிட்டு எடுக்கச் செந்தூரமாகி யிருக்கும்.

பிரமாணம:—குன்றிமணியெடை-க-க்கு.

அனுபானம்:—தேன்.

உபயோகம்:—குன்மரோகங்கள் தீரும். பா-நி-35.

குறிப்பு.

இந்த செந்தூரம் வாய்பிடிக்குமாகையால் தேகசுபாவத்தை நிதானித் தறிந்து இதனை உபயோகிக்க வேண்டும்.

---

## 80. நவச்சார செந்தூரம்.

நாட்டு நவச்சாரம் பலம்-க, இதனைக் கல்வத்திலிட்டுப் புகைநீரைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமமரைத்து ஈரமுலர்ந்த பின்பு நெருப்புப் பீங்கானிலிட்டு நவச்சாரம் ஆழ்ந்திருக்கும்படியாக மேற்படி புகை நீரைவிட்டு உமிநெருப்பின் மீது வைத்து, விட்ட திராவகம் சுண்டும்படியாக வறுத்தெடுத்துப் பானையிலிட்டு மேற்சட்டிமூடி. ஐந்து சீலைமண் செய்

* இம்முறை பின்சொல்லப்படும்.

து அடுப்பேற்றிக் கமலாக்கினியாக இரண்டு சாமமெ ரித்துக்குளிர ஆறினபின் னெடுக்கநவச்சாரமானதுமெ லே பதங்கித்து நிற்கும். மேலே பதங்கித்திருப்பதையு ம்பானையிலிருக்கிற மருந்தையும் ஒன்றாய்ச் சேர்த்துக் கல்வத்திலிட்டு முன்போலவே புகை நீரைவிட்டு அ ரைத்து முன்போலவே புகை நீரைவிட்டு வறுத்தெ டுத்து முன்போலவே பானையில் வைத்தெரிக்க வேண் டும். இவ்விதம் மடக்கிமடக்கி ஐந்து அல்லது ஆறு தடவைகள் செய்யவேண்டும். ஒவ்வொரு தடவை யும் மேலேறி யிருக்கிற பதங்கத்தையும் கீழுள்ள ம ருந்தையும் சேர்த்தரைத்துக் கொண்டே வரவேண் டும். முடிவாக சாரமானது மேலே ஏறாமல் கீழே நின்று சிவந்துபோகும். அதுதான் பதமென எடுத் துச் சீஷாவிற் பத்திரப்படுத்தவேண்டும்.

பிரமாணம்:—குன்றிமணி யெடை-க. கஉ.

உபயோகம்:—எல்லாவகைக் குன்மரோகங்கள் சூதக பந்தத்தா லுண்டாகும் குன்மரோகங்கள், குன் மக்கட்டி, வல்லைக்கட்டி, கௌசை, பெருவயிறு, ஆம் பல்கட்டி முதலியவைகள் தீரும்.

சுத்திசெய்த இரசம் விராகனெடை-க, இதனை இரும்புக் கரண்டியில் விட்டு ஒரு குன்றிமணி யெ டை மேற்படி செந்தூரத்தைக் கூடப்போட்டு உமிநெ ருப்பில் வைத்து மெதுவாய்த்துளாவிவர, இரசமான து இறுகி இரசவாத வெள்ளியாம். பா-தி-36.

---

## இரசவாத முறைகள்.

### 81. (அ) வெடியுப்பு திராவகம்.

சுத்திசெய்த பூநீறு பலம் - ௧௦, (பூநீறு சுத்திமுறை நமது இரசவாத சிந்தாமணி முதற்பாகத்தில் மிகத்தெளிவாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றது ) சிறுபெண் பிள்ளைகளின் மூத்திரம் படி-௫, இதில் மேற்படி பூநீற்றைப் பொடித்துப் போட்டு கடுவெயிலில் வைத்துப் பிரதிதினமும் இரண்டொரு தடவை கிளறிக் கொடுத்துவரவேண்டும். இந்த நீர் சுண்டிப்போன பின்பு ம்று படியும் ஒருபடிசிறு பெண்பிள்ளைகளின் மூத்திரத்தை அதில்விட்டு அடுப்பேற்றிச் சிறுதீயா யெரித்து உப்பாக எடுத்துக்கொள்ள வேணடும். இதனை நெருப்புப் பிங்கானிலிட்டு உமிநெருப்பில் வைத்துக் கசிவில்லாமல் வறுத்தெடுத்துச் சீஷாவிற் பத்திரப்படுத்தவும்.

இவ்விதம் சித்தப்படுத்தின பூநீறு பலம்-௫, நாலாங்காய்ச்சல் வெடியுப்பு பலம்-௧௦, சீனக்காரம் பலம்-௨௦, இம்மூன்றையும் ஒன்றாய்ப் பொடித்துத் திராவக வாலையிலிட்டு அடுப்பேற்றிச் சிறுதீயா யெரிக்கவும். ஆரம்பத்தில் புகையுடன் வெண்ணிறமானநீர்வரும். இதற்குப் புகைநீரென்றும்,வெண்ணீரென்றும் இந்தக்கிரந்தத்தில் ஆங்காங்கு பிரயோகப்படுத்தி யிருக்கிறது. மேலும் இது அநேக பாகங்களில் உபயோகப்படுகின்றபடியால் இந்த நீரைத் தனியே பிடித்துப் பத்திரப்படுத்த வேண்டும்.

இந்த வெண்ணீர் வந்த பிறகு மஞ்சள் நிறமான நீர்வரும். அதற்குக் கடைநீரென்றும்,மஞ்சள் நீரெ

ன்றும், பாணியென்றும் இந்த நூலில் ஆங்காங்கு பி ரயோகப்படுத்தப்பட் டிருக்கிறது. ஆகையால் இந் த மஞ்சள் நீரையும் தனியே வைத்துக்கொள்ள வே ண்டும்.

இந்தத் திராவகத்தை அதிகக் காரமுள்ளதாகச் செய்ய வேண்டுமானால்,முன் சரக்குகளை மடக்கி மடக் கி ஐந்து தடவை, அல்லது, ஏழுதடவைசெய்துகொ ண்டால் கடுங்காரமாகி யிருக்கும்.இவ்விதம் மடக்கி ம டக்கி யிறக்கின திராவகத்தை சீஷாவில் வைத்தால்அ து தெரித்துப்போகு மாகையால்இக்கிரந்தத்திற்சொ ல்லி யிருக்கிறபடி அரக்குக் குப்பியில் அடைத்து வைக்கவேண்டும். இதனால் எல்லாவித சரக்குகளை யும் கட்டிப் பற்பமாக்கலாம். இந்தத் திராவகத்தை இந்த நூலில் குருதிராவகமாய்ச் சொல்லி யிருக்கின் ற படியால், இதிற் சொல்லியிருக்கிற முறைப்படி கை பாகந் தவறாமல் செய்துகொள்கிறவர்களுக்கு இதிற் சொல்லியிருக்கிற முறைகளெல்லாம் சித்தியாகும்.ஆ கையால், இந்தத் திராவகத்தைக் கைபாகமாகச் செய் வதற்கு முயற்சிசெய்ய வேண்டுமென நாமெடுத்து ச் சொல்லவேண்டியதில்லை.

---

## 81. (b) வீரசெந்தூரம்

வீரம் பலம்-க, முன் சித்தப்படுத்தின பூநீறுபல ம்-க, இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுச் சேர்த்தரை க்க மஞ்சட்போலாகும். பிறகு கடைநீரைவிட்டு இர ண்டு சாமமரைத்து உலர்த்திய பொடித்து நெருப்புப் பீங்கானிலிட்டு அது ஆழ்ந்துநிற்கும்படியாகப் புகை

நீரைவிட்டு அது சுண்டும்படியாக உமிநெருப்பில்வறுக்கவேண்டும். பிறகு ஒரு பானையில்விட்டு மேற்சட்டிமூடி ஏழுசீலைமண்செய்து உலர்த்தி அடுப்பேற்றிச் சிறுதீயா இரண்டுசாமம் எரித்து ஆறினபின்பு பிரித்து மேலே பதங்கித்திருப்பதையும் கீழிருக்கின்ற மருந்தையும் சேர்த்து முன்போற்புகைநீரைவிட்டு அரைத்து முன்போற் புகைநீரைவிட்டு வறுத்து முன்போற் பானையில்வைத் தெரித்தெடுக்க வேண்டும். இவ்விதம் பத்துத்தடவைகள் மடக்கி மடக்கிச் செய்யின், வீரம் கட்டுப்பட்டுப்போம்.

பிறகு இந்த மருந்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கடைநீரைச் சிறுகச் சிறுகவார்த்து ஒருசாமநேரமரைத்து அக்கினிப் பீங்கானிலிட்டு அது அமிழ்ந்திருக்கும்படியாகக் கடைநீரைவிட்டு அது சுண்டுகிறவரையில் உமிநெருப்பில் வறுத்துப் பானையிலிட்டு மேற்சட்டிமூடி ஏழுசீலைமண்செய்து அடுப்பேற்றிக் கமலாக்கினியாக இரண்டுசாமம் எரித்துக் குளிர ஆறவிட்டு எடுத்துக் கல்வத்திலிட்டு முன்போற் கடைநீரைவிட்டு ஒருசாமமரைத்து அக்கினிப் பீங்கானிலிட்டு முன்போற் கடைநீரைவிட்டு முன்போல் வறுத்தெடுத்து முன்போலெரித்தெடுக்கவும். இவ்விதம் மடக்கிமடக்கி ஐந்துதடவைகள் செய்யின், வீரமானது பதங்கிக்காமற் சிவந்து செந்தூரமாகிவிடும்.

பிரமாணம்:—குன்றிமணியெடை-௧-௧,௨.

உபயோகம்:—எல்லாவகைச் சூலைரோகங்களும் எல்லாவகை வாதரோகங்களும் தீரும்.

சுத்திசெய்து கட்டினசெம்பு-க0-பங்கு இதனை உருக்கி உருக்கு முகத்தில் ஒருபங்கு மேற்படி செந்தூரத்தைக்கொடுத்து நன்றா யுருக்கியெடுத்து பத்திற்கொன்று தங்கத்தைச்சேர்த்து தகடுதட்டிப் புடம் போட, இரசவாதப் பொன்னாகும். பா-செ-88-93.

---

## 82. அயச்செம்பு.

அய அரபொடி பங்கு-க, வீரம் பங்கு-க, இவ்விரண்டையும் சேர்த்துக் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கடைநீரைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டுசாமமரைத்து ஒருசட்டியிற்போட்டு மேற்சட்டிமூடி ஏழுசீலைமண்செய்துலர்த்தி அடுப்பின்மீதுவைத்து ஐந்து மணிநேரம் கமலாக்கினியாக எரித்து ஆறவிட்டுப் பிரித்துப்பார்க்க, மேற்சட்டி. முதலியவைகளில் பதங்கித்திருக்கும். மேற்சட்டி கீழ்ச்சட்டி முதலியவைகளில் உள்ளதையெடுத்துக் கல்வத்திலிட்டு முன்போற் கடைநீரைச் சிறுகச்சிறுகவார்த்து இரண்டுசாமமரைத்து முன்போற் சட்டியில்வைத்து எரித்தெடுக்கவும். இவ்விதம் மடக்கி மடக்கி-ச-அல்லது ஐந்து தடவைகள் செய்யின், மேலே பதங்கமேறாமல் நன்றாய்ச் சிவந்துபோகும். இந்த செந்தூரத்திற்குச் சமனெடை துருசைச்சேர்த்துப் பொடித்து கடைநீரைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டுசாமமரைத்து பில்லைதட்டிக் காயவைத்து ஓட்டிலிட்டு மேலோடுமூடி. ஏழுசீலைமண்செய்து கவசத்திற்கு இருபது பங்கெடை விராட்டியிற் புடமிட்டு ஆறினபின் எடுத்து அந்த மருந்திற்குக் காற்பங்கெடை வெண்காரத்தைச் சேர்த்துக் குகையில் வைத்துருக்க சுத்த செம்பாகும்.

நல்லவெள்ளி எட்டுப்பங்கு, மேற்படி செம்பு ஒருபங்கு, தங்கம் பங்கு-க, இவற்றைச் சேர்த்துருக்கிப் பிறகு நறுக்கி உருக்கவேண்டும். இவ்விதம் மூன்று தடவைகள் உருக்கி ஓட்டில் வைத்துக் களங்கமற ஊதி யெடுக்க, இரசவாதப் பொன்னாகும். பா-நி-29-30.

## குறிப்பு.

ஜோடு என்னும் கூட்டுவர்க்கங்களில் யுக்தி புத்தி அநுபவம் முதலியவைகள் செவ்வனே தெரிந்திருக்கவேண்டும். கூட்டுவர்க்கத்திற் சேர்க்கப்படும் செம்பானது கூடியவரையிற் களிம்பற்றதாக இருக்கவேண்டும். செம்பைப் பார்த்தவுடன் இது கூடியவரையிற் களிம்பற்றதெனத் தெரிந்து கொள்ளும் சக்தியு மிருக்கவேண்டும். செம்பின் களிம்பு ஊறல் முதலியவைகள் அதிகமாயிருந்தால் அந்தந்த இனத்திற்குத் தகுந்தபடி வங்கம் வெடியுப்பு முதலியகளினால் அதைச் சுத்திசெய்து கொள்ளவேண்டும். உ-வது வெள்ளியுடன் செம்பைச் சேர்த்தால் அதன்வருணம் அதன்குணம், நைப்பு முதலியவைகள் எவ்விதமாயிருக்குமென நிதானித் தறியுஞ் சக்தியு மிருக்கவேண்டும். சிலவகைச் செம்புகளை வெள்ளியுடன் சேர்ந்தால் நைப்புக் குணமில்லாமல் வெட்டைக் குணமிருக்குமாகையால் அதனைச் சர உலையில்வைத்து ஊதி செம்பை அறவே நீக்கவேண்டியதாய் நேரிடும். சில செம்பை வெள்ளிக்குச் சமனெடை சேர்க்கவேண்டியதா யிருக்கும். சில செம்பை வெள்ளிக்கு இரண்டு பங்கெடை சேர்த்து ஊதிநீக்க வேண்டியதாயிருக்கும். சில செம்பை வெள்ளிக்கு நான்கிலொரு

பங்கு அல்லது எட்டிலொருபங்கு சேர்த்தால் நல்லவருணமும் நல்லகுணமுமுள்ளதா யிருக்கும். இந்த விஷயங்களெல்லாம் அநுபவசாலிகள் மூலமாகத்தெரிந்து அனுபோகசித்திபெற வேண்டும். நூலிற்சொல்லி யிருக்கிறபடியே எல்லாச் சமையங்களிலு முடியாது. சாக்கின் பேதத்தாலும் கைபாக விகற்பத்தினாலும் எரிப்பு புடம் முதலிய அக்கினியின் விகற்பத்தாலும் பலவகை விகற்பங்கள் ஏற்படுவதுண்டு. இவ்வித விகற்பங்களை அறியக்கூடாதவர்கள்தான் இரசவாதம் பொய் யென்று சொல்லித் திரிவார்கள். தெரிந்தவர்கள் மூலமாய்த் தெரிந்து கொண்டால் ஒருபோதும் பொய்யாகாது. இதன்மர்மம் முதலியவைகளெல்லாம் நமது சுகாதார போதினி பத்திரிகையில் எழுதிவர உத்தேசித்திருக்கின்றோம் அப்படியே கடவுள் உதவிபுரிவாராக.

---

## 83. துருசுச் செம்பு.

துருசு விராகனெடை-௫, (இது ஒரேகட்டியாக இருக்கவேண்டும்.) நெல்லிக்காய்க் கெந்தகம் விராகனெடை-௩, கர்ப்பூரம் விராகனெடை-௨, வீரம் விராகனெடை-வ, இம் மூன்று சரக்குகளையும் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கண்ட நீரைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு சாமமரைத்து மேற்படி துருசுக் கட்டியின்மீதுச் சமமாகக்கவசம்செய்து வெயிலில்வைத்துலர்த்தி கற்சுண்ணாம்பைச் சீலைவடிகட்டிக்குழைத்து மேற்படி கட்டியின்மீது அரை அங்குலம் கனம் கவசம்செய்து உலர்த்தி அதன்மீது இரண்டு சீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தின் பத்துப் பங்கெடை விராட்டியிற் பு

டமிட்டு ஆறினபின் எடுத்துக் கவசத்தைப் பிரித்துப் பார்க்கத் தாருசானது சிவந்த வருணமா யிருக்கும். சில சமையங்களிற் சிவக்காமற் கறுப்பாயிருப்பது முண்டு. எந்த வருணமா யிருந்தபோதிலும்பாதகமில்லை. அதை யெடுத்து அதற்குக் காற்பங்கெடை வெண்காரத்தைச் சேர்த்துக் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கடை நீரைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டுமணிநேர மரைத்துக் குகையிலிட்டு உருக்கி எடுக்கச் செம்பாகும். இந்தச் செம்பை ஓட்டில் வைத்து ஊதி யெடுக்கவேண்டும். அது சுத்தமாகிற வரையில் இரண்டு மூன்று ஓடுமாற்றி ஊதவேண்டும். இந்தச் செம்பைப் புளியிலைக்கனம் தகடடித்து வைத்துக் கொள்ளவேண்டும்.

இந்தத் தகட்டின் சமவெடை சுத்திசெய்த அயஅரபொடி, இதற்குக் காலிடை வீரம், வீரத்தினெடை தாருசு, இந்த மூன்றையும் கல்வத்திலிட்டுப் புகைநீரைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டுசாம நேரமரைத்து மேற்படி செம்புத்தகட்டின் மீது சமமாகப் பூசி வெயிலில் வைத்துலர்த்தி இருபதுபலம் விராட்டியிற் புடமிட்டு ஆறினபின் னெடுத்து உருக்கி அது சுத்தமாகிற வரையில் ஓட்டில் வைத்து ஊதியெடுக்க வேண்டும்.

நல்லவெள்ளி எட்டு, மேற்படி செம்பு ஒன்று, தங்கம்ஒன்று, இம்மூன்றையும் சேர்த்துருக்கவேண்டும். நன்றாயுருகிக் கண்விட்டாடின பின் எடுத்து ஆறவிட்டெடுத்து இரண்டு மூன்று துண்டுகளாய் நறுக்கிப்பழையபடி யுமுருக்கவேண்டியது. இவ்விதம்மடக்கி ம

டக்கி நறுக்கி நறுங்கி மூன்றுநான்கு தடவை செய்ய வேண்டும். ஏதேனும் கெடுதி யிருந்தால் புடம்போட்டுச் சுத்திப்படுத்திக் கொள்ளவேணடும். இவ்விதம் செய்வதால் நல்ல இரசவாதப் பொன்னாகும்.

பா-ரி-31-32.

---

## 84. துருசுச் செம்பு (வேறு)

துருசு பங்கு-க, வெணகாரம் பங்கு-வ, (துருசைக் குகையிலிட்டு அதற்குக் கீழ்மேல் வெண்காரத்தைப் பொடித்துப்போட்டு உருக்கியெடுக்கச் செம்பாகும்.) இவ்விதம் சித்தப்படுத்தின செம்பு பலம்-க, இதனைத் தகடு தட்டி வைத்துக்கொள்ள வேணடும்.

சீனக்காரம் பலம்-க, வெடியுப்பு பலம்-க, இவ்விரண்டையும் பொடித்து கழுதை லத்திச் சாற்றை விட்டுக் குழப்பி மேற்படி தகட்டைக் காய்ச்சிக் காய்ச்சி இந்தக் குழம்பில் தோய்க்க வேண்டும். இவ்விதம் இருபது தடவைசெய்ய செம்பு வெட்டையாகி விடும். பிறகு இதனை ஓட்டில் வைத்து நன்றாய் ஊதி அதன்மீது ஜலத்தை விட்டால் செம்பு பொரியாமலிருந்தால் பதம். அப்படி யில்லாவிட்டால், பதமல்ல வென மறுபடியும் ஊதவேணடியது. இவ்விதம் ஊதிச் சுத்தப்படுத்தித் தகடடித்து வைத்துக் கொள்ளவும்.

இந்தத் தகட்டினெடை அயச் ..ரபொடி, வீரம் காலிடை, இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கடைநீரைச்சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து மேற்படி செம்புத் தகட்டின்மீ

து பூசி இருநூறு பங்கு விராட்டியில் புடமிட்டு உருக்கி யெடுக்க நல்ல செம்பாகி யிருக்கும்.

இதனைத் தகடடித்து இந்தத் தகட்டிற்குச் சமனெடை கெந்தகத்தைப் பொடித்து இந்தத் தகட்டின் கீழ்மேலிட்டு ஐம்பது பலம் விராட்டியிற் புடமிட்டெடுக்க இந்தத்தகடானது எல்லாம் கறுத்த தூளாகியிருக்கும்.

இந்தத் தூளிற்கு அரைப்பங்கு மிருதார் சிங்கியைச்சேர்த்துப் பொடித்து கடைநீரைச் சிறுகச்சிறுக விட்டுஇரண்டு சாமமரைத்து வில்லைதட்டி உலரவைத்து ஓட்டிலிட்டு மேலோடுமூடி எழுசீலைமண்செய்து கவசத்தின் இருபது பங்கெடை விராட்டியிற் புடமிட்டெடுத்து, அந்த மருந்திற்குக் காற்பங்குவெண்காரம் சேர்த்து உருக்கியெடுக்கச் செம்பாகும். இதில் வங்கப் பற்றிருந்தால் ஓட்டில் வைத்தூதி அதை நீக்கிவிடவேண்டும்.

பிறகு * உருக்குவெள்ளி எட்டுப் பங்கு, மேற்படி செம்பு நான்குபங்கு, தங்கம் நான்கு பங்கு, இம்மூன்றையும் சேர்த்துப் பாகப்படி உருக்கியெடுக்க, எட்டு மாற்றுள்ள இரசவாதப்பொன்னாகும்.

இதனை உப்புங் காவியும் சேர்ந்த தூளிற்கு மத்தியில் வைத்துப் புடம்போட்டுவரத் தங்கமிறங்கி மாற்றுயரும். பா-நி-152-155-வரை.



## 85. துருசுச்செம்பு (வேறு.)

துருசுபலம்-௬, கெந்தகம் பலம்-௫, இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுப் பொடித்துக் கடைநீரைச்சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்துப் பில்லை

தட்டி வெயிலில் உலர்த்தவேண்டும். நன்றாயுலர்ந்த பின்பு இந்த வில்லையின் காற்பங்கெடை மிருதார் சிங் கியைச் சேர்த்துப் பொடித்துக் கடைநீரைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்து வில்லைதட்டி உலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடு மூடி ஏழு சீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தின் இருபது பங்கெடைவி ராட்டியிற் புடமிட்டு ஆறினபின்னெடுத்து, மருந்தின் காற்பங்கெடை வெண்காரம் சேர்த்துக் குகையில் வைத்துருக்கி யெடுக்கச் செம்பாகும். இந்தச் செம் பில் வங்கப் பற்றிருந்தால் ஓட்டில் வைத்தூதி நீக்கி விட வேண்டும்.

நொறுக்குவெள்ளிபலம்-க, மேற்படி செம்புபலம் -க, தங்கம் விராகனெடை-க, இம்மூன்றையும் சேர்த் துருக்கிச் செம்பு போகும்படி ஊதியெடுக்க, ஆறுமா ற்றுள்ள இரசவாதப் பொன்னாகும்.

மேற்படி செம்பு பங்கு-க, தங்கம்பங்கு-க, இவ்வி ரண்டையும் சேர்த்துருக்கித் தகடடித்துக் கொள்ள வேண்டும்.

இரசம் பங்கு-க, கெந்தகம் பங்கு-க, இ வ்விரண்டையும் கல்வத்திலிட்டு நன்றாய்க் கறுக்கிறவ ரையிலரைத்துச் சோற்றுக்கற்றாழைப் பாலைச் சிறுக ச் சிறுக வார்த்து-உ-மணி நேரமரைத்து தகடடிற்கு க் கீழுமேலும்பூசி, ஓட்டில் வைத்து மேலோடு மூடிக் கவசத்தின் இருபது பங்கெடை விராட்டியிற் புடமி டவேண்டும். முன்போலவே முன் சரக்குகளை அ ரைத்துத் தடவி முன்போலவே புடமிடவேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி மூன்று புடமிட்டால், தக டானது நொறுங்கிக் கறுத்த தூளாகிவிடும்.

இந்தத்தூள் ஒருபங்கு, கொறுக்குவெள்ளிபத்து ப்பங்கு. கொறுக்கு வெள்ளியை உருக்கிக்கொண்டு உருக்கு முகத்தில் மேற்படி மருந்தைக் கொடுத்து நன்றுப் உருக்கியெடுக்க எட்டுமாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும். பா-கி-159-161.

---

## 86. துருசுச் செம்பு (வேறு)

துருசு பலம்-ச, வெண்காரம் பலம் - க, இவ்விரண்டையும் சேர்த்து உருக்கி யெடுக்கச் செம்பாகும். இதனைத் தகடடித்து வைத்துக் கொள்ளவேண்டும்.

கழுதை லத்தியைப் பிழிந்தசாறு செல்லத்தக்க அளவு, வெடியுப்பு, சீனக்காரம் இவை வகை-க-க்கு விராகனெடை-உ0, இவ்விரண்டையும் பொடித்து மேற்படி கழுதைலத்திச் சாற்றைக் கலக்கிவைத்துக் கொள்ளவேண்டும். முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிறதகட்டைக் கரிநெருப்பிற் பழுக்கக்காய்ச்சி மேற்படி கலவையில் தோய்க்க வேண்டும். ஆறினபின்னெடுத்து முன்போற் பழுக்கக்காய்ச்சி முன்போல் தோய்க்க வேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி எழுதடவைகள் செய்ய, செம்பானது வெட்டையாகிவிடும். தோய்க்கும்போது ஒவ்வொருதடவையும் புதிதுபுதிதாகச் சித்தப்படுத்திக் கொண்டால் உத்தமமமாயிருக்கும்.

வெட்டையான செம்பு இரண்டுபங்கு, இதனை உருக்கி உருக்கு முகத்தில்-74-ல் சொல்லியிருக்கிற கருவங்க செந்தூரம் ஒருபங்கு கொடுக்க களுத்த நிறமாகிவிடும்.

வெள்ளி எட்டு, மேற்படி தூள் இரண்டு, இவ்வி ரண்டையும் சேர்த்து உருக்கி எடுத்துஓட்டில்வைத்து ஊதி யெடுக்கவேண்டும்.

இந்த மட்டம் ஓருபங்கு, தங்கம் ஒருபங்கு, இவ்விரண்டையும் சேர்த்துப் பாகப்படி ஊதியெடுக்க, இரசவாதப்பொன்னாகும். புடத்திற்கும் வங்கத்திற்கும் ஓடாது.

பா-கி- 179-177.

## 87. துருசுச் சேம்பு (வேறு)

துருசை அகலில்வைத்து சர உலைபால் ஊதிச் செம்பெடுத்துக் கொள்ளவேண்டும்.

இந்தச் செம்புநான்கு பங்கு, சுத்திசெய்த அய பொடி ஒருபங்கு, தங்கம் ஒருபங்கு, இம்மூன்றையும் பக்குவமாக வுருக்கிப் பக்குவமாகத் தகடடித்துக் கொள்ளவேண்டும்.

இந்தத் தகட்டிற்கு அரைக்கால்வாசி நெல்லிக்காயக் கெந்தகம், அரைக்கால்வாசி வீரம், இந்த இரண்டையும் மைபோல பொடித்துக் கல்வத்தின்மீது பரப்பி, மேற்படி தகட்டைப் பழுக்கக் காய்ச்சி, அந்தத் தூளின்மீதுவைக்கத்தகடானது வெட்டையாகிவிடும்.

வெள்ளி எட்டுப்பங்கு, மேற்படி வெட்டை இரண்டுபங்கு, இவ்விரண்டையும் சேர்த்துருக்கி ஊதிச் சுத்தப்படுத்தி,ஒருபங்கு தங்கத்தைச் சேர்த்து உருக்கி யெடுக்க எட்டுமாற்றுள்ள இரசவாதப்பொன்னாகும். (1)வெடியுப்பு, காவி இவைகளுக்கு இது ஜெயித்து

நிற்கும், இதனைக்கைபாகமாகச் செய்துகொள்பவர்க ளுக்கு இது சித்திபாவதில்எவ்வித தடையுமில்லை. கைபாகந் தெரியாதவர்களுக்கு எதுவுஞ்சித்யாகா தென்பது உலகறிந்த விஷயம். பா-கி-202-203.

---

## 88. பித்தளைச் செம்பு.

பித்தளை அரபொடி பலம்-ச, இதனை ஒருசே லைத் துண்டில் முடிந்து அதன்மீது சுமார் ஒருவிரற்க துணியைப் பந்துபோல சுற்றவேண்டும். இதனை ஒ ரு ஓட்டில்வைத்து நெருப்பிட்டு எரித்தாறினபின் னெடுக்கக் கறுப்பாகியிருக்கும்.

இதனை ஒரு பீங்கான்பாத்திரத்திற் போட்டுக் க டை நீரைஅந்தத்தூள் அமிழ்ந்திருக்கும்படியாக விட வேண்டும். அப்போது இது நீலநிறமாகமாறிவிடும்.

இந்தத்தூளில் எட்டிற்கொருபங்கு கெந்தகம், அந்த எடையே வீரம், இவை யெல்லாவற்றையும் சே ர்த்தரைத்து அக்கினிப் பீங்கானில்வைத்து உமி நெ ருப்பில் வறுக்கவேண்டும்.பின்பு முன்போலரைத்துப் பில்லைசெய்து வெயிலில்வைத்து நன்றாயுலர்ந்தபின்பு ஓட்டில்வைத்து மேலோடுமூடி-ரு-சீலைமண் செய்துல ர்த்திக் கவசத்தின் பத்துபங்கெடை விராட்டியிற் பு டமிட்டு ஆறினபின்னெடுத்து,கண்டமருந்தின் எடை க்குக் காற்பங்கு வெண்காரம் சேர்த்தரைத்து மூசை யிலிட்டு ஊதியெடுக்கச் செம்பாகும். இதனை ஓட்டில் வைத்து இரண்டுமூன்று தடவை ஊதியெடுக்கச் சு த்தமான செம்பாகும்.

இந்தச் செப்பு ஒருபங்கு, தங்கம் ஒருபங்கு இவ்விரண்டையும் உருக்கி யெடுத்துக்கொள்ளவும்.

பிறகு நொறுக்கு வெள்ளி எட்டுப்பங்குடன் சேர்த்துருக்கி ஊதியெடுக்க, எட்டு மாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும். சுயபொன்னைப்போன்ற குணங்கள் இதற்குண்டு பா-செ-85 முதல் 87 வரை.

## 89. காரீயச் செம்பு.

துருசு ஒருபங்கு, கெந்தகம் ஒருபங்கு. இவ்விரண்டையும் ஒருசாமமரைத்து ஓட்டிலிட்டு மேலோடு மூடி ஐந்துசீலைமண்செய்து உலர்த்திக் கவசத்தினைடைக்கு எட்டுப்பங்கு விராட்டியிற் புடமிட்டாறினபின்னெடுத்துக் கண்ட எடைமருந்திற்கு எட்டிலொருபங்கு மிருதார்சிங்கியைச் சேர்த்துப்பொடித்து மூசையில் வைத்துருக்கச் செம்பாகும். இந்தச் செம்பை ஓட்டில்வைத்து வங்கம் போகும்படியாகஊதியெடுக்க வேண்டும்.

நொறுக்கு வெள்ளி எட்டுப்பங்கு, மேற்படி செம்பு நான்குபங்கு, தங்கம் ஒருபங்கு. இம்மூன்றையும் சேர்த்துருக்கி ஊதியெடுத்துத் தகடடித்து உப்புங்காவியும் தூள்செய்து அதற்குள்வைத்துப் புடமிட்டுவரத் தங்கமிறங்கும். பா-செ-110.

## 90. மிருதார்சிங்கிச் செம்பு.

துருசு பலம்-௫, இதனைப் பொடித்துப் புது ஓட்டிற்போட்டு உலையில்வைத்தூதி ஆறவிட்டெடுக்க வெண்மையான பற்பமாகி யிருக்கும்.

இந்தத்தாளில் முக்காலெடை இந்திரகோபப்பூச்சி, இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுக் கடைநீரைவிட்டு ஒருசாமமரைத்துப் பில்லைசெய்துலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடுமூடி ஐந்து சீலைமண்செய்து உலர்த்திக்கவசத்தின் எட்டுப்பங்கெடை விராட்டியிற் புடமிட்டு ஆறினபின்னெடுக்க கரிநிறமான தூளாகியிருக்கும்.

இந்தத் தூளிற்குப் பாதிபங்கெடை மிருதார்சிங்கியைச் சேர்த்துப் பொடித்துக் கடைநீரைவிட்டு இரண்டுசாம மரைத்து வில்லைசெய்துலர்த்தி ஓட்டிலிட்டு மேலோடுமூடி ஐந்து சீலைமண்செய்து உலர்த்திக் கவசத்தின் எட்டுப்பங்கெடைவிராட்டியிற் புடமிட்டு ஆறினபின்னெடுத்து, கண்டமருந்திற்குக்காற்பங்கெடை வெண்காரம் சேர்த்து அரைத்துக் குகையில்வைத்துருக்க முருக்கம்பூப்போன்ற சிவந்த நிறமான வட்டாகவுருகிநிற்கும். அந்த வட்டை உடைத்துப் பார்க்க நடுவிற் செம்பிருக்கும். இந்தச் செம்பிற்குச் சமனெடை தங்கஞ்சேர்த்து உருக்கித் தகடாக அடித்துவைத்துக் கொள்ளவேண்டும்.

கெந்தகம், பாலரசம் இவை வகை-க-க்கு பங்கு-க, உரம் பங்கு-உ, இம்மூன்றையும் உமிநீரை விட்டரைத்து மேற்படி தகட்டின்மீது பூசி ஓட்டில் வைத்து மேலோடு மூடி மூன்று சீலைமண்செய்து உலர்த்திக் கவசத்தினெடைக்கு எட்டுப்பங்கெடை விராட்டியில் புடமிட்டு ஆறினபின்னெடுக்கக்கறுப்பு நிறமானதா யிருக்கும்.

வெள்ளிபங்கு-அ, மேற்படி செம்பு பங்கு-உ, இவ்விரண்டையும் சேர்த்துருக்க, எட்டுமாற்றுள்ள இர

சவாதப் பொன்னாகும். இத்தனைப் பாகப்படி புடமிட்டால் தங்க மிறங்கும் பா-தி-116-முதல்-121-வரை

---

## 91. காக்கைப்பொன் செம்பு.

காக்கைப்பொன்னை சிறு துண்டுகளாகக் கத்திரித்து ஒரு குகையிற் போட்டுக் கொல்லுலையில் வைத்துப் பழுக்கக்காய்ச்சி நன்றாய்க் காய்ந்த பின்பு கொஞ்சம் வெண்காரமுங் கொடுத்து நன்றாயூதி யெடுக்கச் செம்பாகும். இந்தச் செம்பை ஓலைக்கனம் தகடடித்து வைத்துக் கொள்ளவும். இது சுமார்-க-பல மிருக்கவேண்டும்.

(a) கல்லுப்பு பலம்-௩, வீரம் பலம்-க, சூடன் பலம்-க, இம்மூன்றையும் கல்வத்திலிட்டுப் பொடித்துப் புகைநீரை விட்டு-உ-மணி நேரமரைத்து-ரு-பாகமாகச் செய்து ஒரு பாகத்தை மேற்படி செம்புத் தகட்டின்மீது பூசி யுலர்த்தி ஓட்டில் வைத்து மேலோடுமூடிச் சீலைமண் செய்யாமல்-௬0-பலம் விராட்டியிற் புடமிட்டாறினபின் எடுத்துத் தகட்டைத் தட்டினால் அதிர் உதிரும். அந்த அதிரைத் தனியே யெடுத்துவைத்துக்கொள்ள வேண்டும். பின்பு மற்றொரு பாகத்தை மேற்படி தகட்டின்மீது பூசி முன்போற் புடமிட்டு அதிரை யெடுத்துக்கொள்ளவும். இவ்விதமே மற்ற மூன்று பாகங்களையும் முறையே ஒன்றின்பின் னொன்றாகக் கவசித்துப் புடமிட்டு அதிரெடுத்துக்கொள்ளவும். இந்த அதிருடன் ஒருபலம் காரீயத்தைச் சேர்த்து அரைத்து மூசையிலிட்டுருக்கி எடுக்கச் செம்பாம். இதனைச் சரஉலையில் வைத்தூதிச் சுத்திசெய்யச் சூரியப் பிரகாசமுள்ள செம்பாகும்.

இந்தச்செம்பு-ச-பங்கு, தங்கம்-க-பங்கு இவ்விர ண்டையும் சேர்த்துருக்கி யெடுத்துத் தகடாக அடித் து வைத்துக்கொள்ள வேண்டும்.

(b) இந்தத் தகட்டிற்கு அரைக்காற் பங்கு வீ ரம, அரைக்காற்பங்கு கெந்தகம், இவ்விரண்டையும் பொடித்துக் கல்வத்தின்மீது பரப்பி வைத்து மேற்ப டி தகட்டை நெருப்பிற் பழுக்கக் காய்ச்சி முன்பரப்பி வைத்திருக்கிற தூளின்மீது வைக்க அந்தத் தகடான து அதர் அதராகி நொறுங்கி விடும்.

நல்லவெள்ளி நான்குபங்கு (b) யிலுள்ள அதர் ஒருபங்கு இவ்விரண்டையும் சேர்த்துருக்கி யெடுக்க ஆறுமாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும்.

பா-மி-199-முதல்-201-வரை.

92. கேந்திச் செம்பு.

தாம்பிரம் பலம்-ச, நெல்லிக்காய்க் கெந்தகம் ப லம்-ச, தாம்பிரத்தைக் குகையிலிட்டுருக்கி உருக்கு முகத்தில் மேற்படி கெந்தகத்தைத் தூள்செய்து வை த்துக்கொண்டு கொஞ்சங் கொஞ்சமாகக்கிராசங்கொ டுத்து வந்து கெந்தகமெல்லாஞ் சென்றபின் எடுக்க தாம்பிரமானது கரிந்து நொறுங்கித் தூளாகி யிருக் கும்.

இந்தத்தூளை நிறுத்து இதற்குக் காற்பங்கெடை வெண்காரத்தைத் தூள்செய்து, இரண்டையும் சேர்த் து மூன்று மணிநேரமரைத்துக் குகையில் வைத்துக் குகையபூகும்படியாகப் பக்குவமா யூதியெடுக்கச் சத் தாகும்.

இந்த சத்துக்குக் காற்பங்கெடை வீரம் சேர்த்து கடைநீரை விட்டு இரண்டு சாமமரைத்து உலர்த்திக் குகையில் வைத்துக் குகைவாய்க்குச் சில்லிட்டுச் சீலைமண் செய்துலர்த்திக் கொல்லுலையில் வைத்து மூசை யடுகும்படி ஊதி யெடுக்கச் செம்பாகும். இதனைப் புளியிலைக் கனம் தகடடித்து வைத்துக் கொள்ளவும்.

வெடியுப்பு, சீனக்காரம், குன்றிமணிப் பருப்பு, இம்மூன்றும் வகை-க-க்கு மேற்படி தகட்டிற்குச் சமனெடை. மூன்றையும் அரைத்து கழுதை லத்திச் சாற்றிற் கரைத்துக் கொள்ளவும். மேற்படி தகட்டை நெருப்பிற் பழுக்கக் காய்ச்சிமேற்படி குழம்பில் தோய்க்கவேண்டும். ஆறினபின்பு முன்போற் பழுக்கக்காய்ச்சி முன்போல் தோய்க்கவேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி ஏழுதரம் தோய்த்தெடுத்துக் கொள்ளவேண்டும். இப்படிச் செய்வதால் இது தூளாகிவிடும்.

அல்லது, முன் அரைத்த சரக்குகளை-டு-பாகமாக்கி ஒரு பாகத்தை மேற்படி தகட்டிற் பூசி ஓட்டில் வைத்து மேலோடுமூடிச் சீலைமண் செய்யாமல் முப்பது பலம் விராட்டியிற் புடமிடவேண்டும். ஆறினபின்பு எடுத்து முன்போல் பூசி முன்போற் புடமிடவும். இவ்விதம் மடக்கி மடக்கி ஐந்து புடம்போட அது நொறுங்கித் தூளாகிப்போய் விடும்.

மேற்கண்ட இருவகைகளில் எவ்வகையாயேனும் செய்யப்பட்ட தாம்பிரத்தூள் ஒருபங்கு, நல்லதங்கம் ஒருபங்கு, நல்லவெள்ளி எட்டுப்பங்கு, இவற்

னைச் சேர்த்துருக்கி ஓட்டில்வைத்து ஊதியெடுக்க் எட்டுமாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும்.

பா-நி-௮0-முதல்-84-வரை.

---

## 93. செம்புக் களங்கம்.

செம்பு-ச, பங்கு வெடியுப்பு பங்கு-ச, சீனக்கா ரம் பங்கு-ச; குன்றிமணிப் பருப்பு - ச - பங்கு, கழு தை லத்தியை பிடித்துப் பிழிந்தசாறு செல்லத்தக்க அளவு.

செம்மை புளியிலைக் கனம்தகடா யடித்து வைத் துக் கொள்ளவும்.

மற்ற மூன்று சரக்குகளையும் வெண்ணெய்போல பொடித்து மேற்படி கழுதை லத்திச்சாற்றிற் குழை த்து வைத்துக்கொள்ள வேண்டும்.

தாம்பிரத் தகட்டைக் கரியோட்டில் வைத்துச் ச ரஉலையில்ஊதி நன்றாய்ப் பழுத்த சமயத்தில் மேற்படி குழம்பிற்றோய்க்கவேண்டும். ஆறினபின்பு, மறுஓட்டி ல்வைத்து முன்போற் பழுக்க ஊதி நன்றாய்ப் பழுத் த தருணத்தில் முன்போற் றோய்க்கவேண்டும். இவ் விதம்மடக்கி மடக்கி ஏழுதரம் ஊதி ஊதித்தோய்த் தெடுக்கச்செம்பு கட்டிப்போகும்.

அயஅரபொடி மேற்படி செம்பிற்குக் காற்பங்கு, வீரம் காற்பங்கு, இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுப் புகை நீரைச் சிறுகச் சிறுகவார்த்து ஒருசாமமரைத் துச் சட்டியில்வைத்து மேற்சட்டிமூடி ஏழு சீலைமண் செய்துலர்த்தி அடுப்பேற்றிக் கயலாக்கினியாக ஒரு

சாமம் எரித்து ஆறினபின்னெடுக்கக் கீழுமேலும் பதங்கித்திருக்கும் இவ்விரண்டையும் சேர்த்துப் புகைநீரைவிட்டரைத்து முன்போல் பாணையில் வைத்தெரித்தெடுத்துக் கொள்ளவும். இது செவந்த வருணமாயிருக்கும்.

இந்தத்தூளைப் புகைநீர்விட்டு ஒருசாமமரைத்து மேற்படி செம்புத்தகட்டிற் கவசம்செய்து இரவியில் வைத்துலர்த்தி ஓட்டில்வைத்து மேலோடுமூடிச் சீலைமண்செய்து உலர்த்திக் கெஜபுடம் போடவும். ஆறினபின்னெடுக்கச் செம்பானது கட்டுப்பட்டுக் களங்காகியிருக்கும்.

நல்லவெள்ளி பங்கு-அ, மேற்படி களங்கம் பங்கு-௧, தங்கம் பங்கு-௧, இம்மூன்றையும் சேர்த்து உருக்கியெடுக்க ஆறுமாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும்.

பா - ரெ - 53 முதல் 55 வரை.

---

## 94. அயக்களங்கு.

அயஅரபொடி ஒருபங்கு, கெந்தகம் ஒருபங்கு, இவ்விரண்டையும் சேர்த்து ஒருமணிநேர மரைத்துக் குகையிலிட்டுக் குகைவாய்க்குச் சில்லிட்டுச் சீலைசெய்துலர்த்தி உலையிலிட்டுக் குகையழுகவூதி யெடுக்க, அயம் கெட்டியாயிருக்கும்.

இதனையெடுத்து நொறுக்கி இதற்குக் காற்பங்கெடை வெண்காரத்தையும் சேர்த்து மூசையிலிட்டு மூசையழுக வூதியெடுக்க, மணிமணியாக இருக்கும்,

இந்தமணி-க-பங்கு, மிருதார்சிங்கி முக்காற் பங்கு, வீரம் காற்பங்கு, இம்மூன்றையும் கல்வத்திலிட்டு இரண்டுசாம நேரமரைத்து, எல்லா மிஸ்ரமாகும்படிவைத்துக் கொள்ள வேண்டும். (இதற்கு மணி சிங்கித் தூளென) நாமிங்கு சொல்வோம்.

உமிநெருப்பின்மீது ஓட்டைவைத்துத் துருசைத் தூள்செய்துபோட்டு வறுக்க அது வெள்ளையாகும். (இதற்குத் துருசுவெள்ளையென்று சொல்வோம்.)

மணிசிங்கித்தூளுக்குச் சமனெடை துருசுவெள்ளையைச் சேர்த்துக் கடைநீரைச் சிறுகச் சிறுகவிட்டுப் பத்துசாமமரைத்து வில்லைசெய்து உலர்த்தி அதன்மீது ஏழு சுண்ணாம்புச் சீலைசெய்து உலர்த்தி கெஜபுடம் போடவேண்டும். புடம் ஆறினபின் னெடுத்து இருந்த மருந்திற்குக் காலெடை காரங்கூட்டிப் பாகப்படி உருக்கியெடுக்கத் திவ்யமான செம்பாகும்.

நொறுக்குவெள்ளி-ச-பங்கு, மேற்படி செம்பு ஒருபங்கு, இவ்விரண்டையும் சேர்த்துருக்கி ஓட்டில்வைத்து ஊதியெடுக்கப் பசுமையாயிருக்கும்.

இந்த மட்டம் இரண்டுபங்கு, தங்கம் ஒருபங்கு, இவ்விரண்டையும் சேர்த்துருக்கி, இரண்டோடு ஊதியெடுக்க எட்டு மாற்றுள்ள இரசவாதப்பொன்னாகும்.

இதனை உப்புக்காவியில் வைத்துப் புடம்போட, அருகூட்டித் தங்கமிறங்கும். பா-செ-128-மு-131



## 95. உலோகசேந்தூரம்.

(a) அயம் பலம்-ச, தாம்பிரம் பலம்-ச, இவ்விரண்டையும் சேர்த்துக் குகையிலிட்டுக் குகையமூக ஆ

தியெடுத்து ஆறினபின் "கல்வத்திலிட்டுப்" பொடிக்க நொறுக்கித்தூளாக்கும், இதனைச் செம்மையாகப் பொடித்து அரைத்துத் தூள்செய்து அதனுடன் ஒருபலம் சாதிலிங்கத்தையும் ஒருபலம் வெண்காரத்தையும் சேர்த்தரைத்து எலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து நான்குசாமமரைத்து வில்லைசெய்து வெயிலில் வைத்துலர்த்தி ஓட்டில்வைத்து மேலோடு மூடி ஐந்து சீலைமண்செய்து உலர்த்திக் கவசத்தின் பத்துப்பங்கெடை விராட்டியிற் புடமிட்டாறினபின் னெடுக்கக் கரிநிறமுள்ள தூளாகியிருக்கும்.

இந்தத் தூளிற்குக் காற்பங்கெடை வெண்காரத்தைக்சேர்த்துக் குகையமூக நன்றாய் உருக்கியெடுக்க வேண்டும். ஓரே தடவையிற் செம்பாகிவிடா தாகையால்ஐந்து அல்லது ஆறுதடவைகள்மடக்கி மடக்கிஉருக்கியெடுக்க நேரிடும். தைரியத்தை விடாமல் மடக்கிமடக்கி ஊதியெடுக்கச் செம்பாகும் அந்தச் செம்பானது மணிமணியாயிருக்கு மாகையால் அதனை ஓட்டில் வைத்துச் சர உலையால் நன்று யூதியெடுக்கச் சூரியப் பிரகாசமுள்ள செம்பாகும்.

இந்தச் செம்பு ஒருபங்கு, நல்லவெள்ளி பத்துப் பங்கு, இவ்விரண்டையும் சேர்த்துருக்கி இதற்குச்சமனெடை தங்கம் சேர்த்துருக்க, எட்டுமாற்றுள்ள, இரசவாதப் பொன்னாகும்.

(b) மேற்படி செம்பு-௨-பங்கு, தங்கம்-க-பங்கு இவ்விரண்டையும் சேர்த்துருக்கித் தகடாகக்செய்து கொள்ளவேண்டும்.

மனோசிலை, நெல்லிக்காய்க் கெந்தகம், இரசப்பீ, வீரம், இந்நான்கும் வகை-க-க்கு ஷ செம்பிற்கு அரைப்பங்கு.

முன்னர் இரசத்தையும், கெந்தகத்தையும் தொந்தித்துக் கருப்பாகிறவரையில் அரைத்து மற்றச் சரக்குகளையும் சேர்த்து எருக்கம்பாலைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டுசாமமரைத்து ஷ தகட்டிற்குப் பூசி ஓட்டில் வைத்து மேலோடு மூடி மூன்று சீலை மண்செய்து உலரவைத்துக் கவசத்தின் ஆறுபங்கெருவை விராட்டியிற் புடமிட்டெடுக்கத் தகடான்று நொறுங்கிக் கருப்பாயிருக்கும்.

இதனைத் தூள்செய்து இதற்குக் காற்பங்கெடை, வெண்காரம் (இதனைப் பொரித்துக் கொள்ளவும்,) காற்பங்கெடை மனோசிலை, காற்பங்கெடை இரசம், இவைவெல்லாவற்றையும் கல்வத்திலிட்டு, செங்கீரைச் சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து நான்குசாமமரைத்துப் பில்லைசெய்துலர்த்தி ஓட்டில்வைத்து மேலோடு மூடி ஏழுசீலைமண்செய்து உலர்த்திக் கவசத்தின் பத்துப்பங்கெருவை விராட்டியிற்புடமிட் டாறினபின்னெடுக்க, சிவந்த செந்தூரமாயிருக்கும்,

செம்பையுருக்கி உருக்கு முகத்தில் தகுந்த பிரமாணம் கொடுக்கச் செம்பானது கட்டிப் போகும். இந்தச்செம்பு மூன்று பங்கு, நல்லவெள்ளி ஏழுபங்கு, இவ்விரண்டையும் சேர்த்துருக்க, நல்ல இரசவாதப் பொன்னாகும்.

இந்தச் செந்தூரத்தில் இரண்டு குன்றிமணியெடையைத் தேன் நெய் முதலிய அனுபானங்களில் அ-

னுபானித்துண்ணை,எண்பதுவாதம்,பதினெட்டுச் சூலைகள், மகோதரங்கள், பீலிகை முதலியவைகள் தீரும். நரை திரை மாறி யௌவன முண்டாகும்.

பா. நீ. 188-முதல்-192- வரை.

---

## 96. சத்துவங்க செந்தூரம்.

சுருவங்கம் பலம்-ச, இதனை மெல்லிய தகடாக அடித்துக் கத்தரித்துக் கல்வத்திலிட்டுச் சோற்றுக் கற்றாழைப் பாலைச் சிறுகச் சிறுகவார்த்து நான்குசாமமரைத்து வில்லைதட்டிக் காயவைத்து ஓட்டிலிட்டு மேலோடுமூடி ஏழுசீலைமண் செய்து உலர்த்திக் கவசத்தின்-ச, பங்கெடை விராட்டியிற் புடமிட்டு ஆறினபின்னெடுக்கவும்.

இதனைக் கல்வத்திலிட்டு முன்போலவே முன்பாலைவிட்டு அரைத்து முன்போற் புடம்போடவும். இவ்விதம் மடக்கிமடக்கி ஐந்துபுட மிட்டால், சத்தில்லாத செந்தூரமாகும்.

வங்கத்தைத்தனியே யரைத்துப் போட்டால் செந்தூரமாகாமல் உருகிப் போகும். ஆனால் வங்கத்தையுருக்கி அதற்குச் சமனெடை தாளகத்தைப் பொடித்துக் கிராசம் கொடுத்து வெட்டையாக்கிப் பிறகு மேற்கண்ட முறைப்படிசெய்யச் செந்தூரமாகிறது. இப்படிச் செயவதுதான் நமது அனுபவம்.

நாலாங்காய்ச்சல் வெடியுப்பு, சீனக்காரம், கல்லுப்பு, இவை மூன்றும் சமனெடை. இம்மூன்றையும்

இரும்புச் சட்டியிலிட்டு அடுப்பில் வைத்தெரிக்க உருகிக் கெட்டியாகிவிடும். இதனைத் தூள்செய்து மேற்படி வங்க செந்தூரத்திற்குச் சமபாகமாகச் சேர்த்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து எருக்கம்பாலைச் சிறுகச் சிறுகவார்த்து நான்கு சாமமரைத்து பில்லை செய்து லர்த்தி ஓட்டிலிட்டு மேலோடுமூடி ஏழுசீலைமண் செய்து உலர்த்தி கெஜபுடமிடவும். குளிர ஆறினபின் னெடுக்க முருக்கம்பூப்போன்ற செந்தூரமாகியிருக்கும்.

நூறுபங்கு செம்பை யுருக்கி ஒருபங்கு மேற்படி செந்தூரத்தைக்கொடுக்கச் செம்புகட்டிப்போகும்.

வெள்ளி ஏழுபங்கு, கட்டின செம்பு மூன்றுபங்கு, தங்கம் ஒருபங்கு, இம்மூன்றையும் சேர்த்துருக்க உள்ளது போலாகும்.

இந்தச் செந்தூரத்தில்-உ-குன்றிமணி யெடையைத்தேனில் அநுபானித்துண்ண, எண்பது வாதங்கள், இருபத்தொரு மேகங்கள் முதலிய தேகத்திலுள்ள நோய்களெல்லாம் தீர்ந்து, நரைதிரை மாறிக் காயசித்தி யுண்டாகும். பா-கி-194-முதல்-196-வரை.

---

## 97. வங்கச் சுண்ணம்.

வங்கம் பங்கு-க, தாளகம் பங்கு-க, வங்கத்தையுருக்கி, உருக்கு முகத்தில் தாளகத்தைப் பொடித்துச் சிறுகச்சிறுகக் கிராசம்கொடுக்க வங்கமெல்லாம் நொறுங்கித் தூளாகிவிடும். அதனை யெடுத்துக் கல்வத்திலிட்டரைக்க மெழுகைப்போல நைப்புள்ளதாகி யிருக்கும், இதற்கு வங்கமெழுக் கெனப்பெயர்.

கோழிமுட்டை யோடுபங்கு - ச, கற்சுண்ணம் பத்துப்பங்கு,(கற்சுண்ணத்தைத் தண்ணீரிற் கரைத்து அண்டவோட்டை அதிற் போட்டு நன்றாய்க் கொதிக்கவைத்துக் கீழிறக்கி அண்டவோட்டினுள்ள உட்சவ்வு முதலானவைகளைச் சுத்திசெய்து வெயிலில் உலர்த்திக்கொள்ள, எண்ணெய் முதலியவை நீங்கிச் சுத்தியாகி விடும்.

பிறகு மேற்படி வங்கமெழுக்கு ஒருபங்கு, மேற்சொன்னபடி சுத்திசெய்த அண்டவோடு பங்கு-க, இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுப் பொடித்துமுட்டை வெள்ளை யம்புலியைச் சிறுகச் சிறுக விட்டு-உ-சாம நேரமரைத்துக் குகையிலிட்டுக் குகைவாய்க்குச் சீலைமண்செய்து உலர்த்தி உலையில் வைத்து மூசை நன்றாய்ச் சிவக்கும்படியாக வூதியெடுத்து ஆறவிட்டு மருந்தை யெடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து முன்போல் முட்டை வெள்ளை யம்புலியைச் சிறுகச் சிறுக வார்த்து முன்போலரைத்து முன்போற் புடமிடவும். இவ்விதம் மடக்கி மடக்கி ஐந்தாறு புடம்போட்டால் கடுங்காரச் சுண்ணமாகி விடும்.

இந்தச் சுண்ணத்தை வெண்கருவை விட்டுக் குழைத்து தாம்பிரத் தகட்டின்மீது பூசிப் புடமிட வேண்டும். இவ்விதம் மடக்கி மடக்கி மூன்று தடவை புடமிட்டால் செம்பு கட்டுப்பட்டுப் போம்.

இந்தச் செம்பு பங்கு-க, வெள்ளி பங்கு-அ, தங்கம்பங்கு-க, இம்மூன்றையும் சேர்த்துருக்க, ஆறுமாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும்.

இந்தச் சுன்னத்தில் ஒரு குன்றிமணி யெடை யைத்தேனிற் குழைத்துண்ணக் காசரோக முதலிய ரோகங்கள் தீரும். பா-கி-150-151.

## 98. சாரக்கட்டு

கிளிஞ்சில் சுண்ணாம்பு பலம்-ரு, இதை ஒரு சட்டியில் பரத்தி அதன்மேல் நாலுபலம் கறியுப்பைப் பொடித்துப் பரப்பி, அதன்மேல் மூன்றுபலம் வெடியுப்பைப் பொடித்துப் பரத்தி, அதன்மேல் இரண்டுபலம் சீனக்காரத்தைப் பொடித்துப் பரத்தி, அதன்மேல் இரண்டுபலம் நவச்சாரக்கட்டியை வைத்து, அதன்மேல் இரண்டுபலம் சீனக்காரத்தைப் பொடித்துப் போட்டு அதன்மேல் மூன்றுபலம்வெடியுப்பைப்பொடித்துப் பரப்பி, அதன்மேல் நாலுபலம் கறியுப்பைப் பொடித்துப் பரப்பி, அதன்மேல் ஐந்துபலம் கிளிஞ்சில் சுண்ணாம்பைப்போட்டுப் பானைவாயை மண்தாலத்தால் மூடி, ஏழு சீலைமண்செய்து உலர்த்தி, அடுப்பின் மீது ஏற்றிக் கமலாக்கினியாக இரண்டு சாமம் எரித்து ஆறவிட்டு எடுக்க, சாரமானது கட்டுப்பட்டுப்போகும்.

இதிற் கொஞ்சம் நெருப்பின்மீது போட்டால் புகையாமலிருந்தால் பதம். புகைந்தால் முன்போல் மற்றொரு தடவையும் எரித்து எடுத்துக்கொள்ளவும். அப்போதும் பரீக்ஷித்து, பரீக்ஷைக்கு ஒத்திருந்தால் உத்தமம். அப்படி யில்லாவிட்டால் மூன்றாந் தடவையும் எரித்தெடுக்க, நெருப்பிற்குப் புகையாமல்கட்டுப்பட்டுப் போகும்.

நாகம், விராகனெடை-உ௫, மேற்படி கட்டின்சார ம் விராகனெடை-க, நாகத்தை யுருக்கி, உருக்கு முக த்தில் மேற்படி சாரத்தைக் கொடுக்க நாகமானது பு கையடங்கிக் கட்டிப்போகும்.

தாம்பிரம் பலம்-க, சீனக்காரம் பலம்-க, வெடியு ப்பு பலம்-க. கழுதை லத்திச்சாறு செல்லத்தக்க அ ளவு.

தாம்பிரத்தைத் தகடாக அடித்து சா உலையில் வைத்து ஊதிப் பழுக்கச் சிவந்தபின்பு, மேற்படி சீன க்காரத்தையும், வெடியுப்பையும் பொடித்து, கழுதை லத்திச்சாற்றில் குழைத்து அதில் முன் பழுக்கக் கா ய்ந்திருக்கிற தகட்டைத் தோய்க்கவேண்டும். பிறகு, ஆறினபின்பு எடுத்து முன்போல் ஊதிப் பழுக்கக்கா ய்ச்சி முன்போல் தோய்க்கவேண்டும். இவ்விதம் மட க்கி மடக்கி இருபது தடவை ஊதியூதித் தோய்த்து சேர்த்து எடுக்க, செம்பானது ஊரலற்று கட்டாகி விடும்.

இந்தக் கட்டு பங்கு-க0, கட்டினநாகம் பங்கு-க, தாம்பூரத்தை யுருக்கி, உருக்கு முகத்தில் மேற்படி நா கத்தைக் கொடுத்து எடுத்து ஆறின பின்பு அதற்குச் சமனெடை, வெள்ளியையும், இரண்டு பங்கிடை தங் கத்தையும் சேர்த்துருக்கி யெடுக்க, பத்துமாற்றுள்ள இரசவாதப் பொன்னுகும்.

மேற்படி கட்டின நவச்சாரத்தை ஜெயநீராகச் செய்தும் வேறுவிதமாகப் பிரயோகித்தும், பாஷாண ம், கௌரிப்பாஷாணம், வீரம் முதலியவைகளையும் க ட்டிக் கொள்ளலாம். இதன் முறை முதலியவைகள்

நமது சுகோதார போதினி பத்திரிகையில் -வகை விபர மாக எழுதிவரப்படும். பா-நெ-74-79.

---

## 99. சாரச் சுண்ணம்.

பச்சை நவச்சாரம் பலம் 10-சுண்ணாம்புநீறு பலம்-10-இவ்விரண்டையும் சேர்த்துப் பொடித்து ஒரு பானையிற் போட்டு பானைவாய் பொருந்தும்படியாக ஒரு சட்டியைக் கவிழ்த்து ஏழுசீலைமண்செய்து உலர்த்தி அடுப்பேற்றிக் கமலாக்கினியாக மூன்றுசாமம் எரித்து ஆறவிட்டு எடுக்க, சாரமானது மேலே பதங்கித்திருக்கும், பதங்கத்தை எடுத்துப் பத்திரப்படுத்தவும்.

சீனக்காரத்தை நமது இரசவாத சிந்தாமணி முதற்பாகத்திற் சொல்லியிருக்கிறபடி கரியில் வைத்து ஊதி சுண்ணமாக்கிக் கொள்ளவேண்டும்.

மேற்படி நவச்சாரப் பதங்கம் ஒரு பங்கு, சீனச் சுண்ணம் அரைப்பங்கு, இரண்டையும் சேர்த்துத் தனியேயரைத்துக் கொள்ளவும்.

முட்டை வெள்ளையம்புலி, எருக்கம்பால், இவ்விரண்டையும் சமமாகச் சேர்த்து மூன்று நாள் வைக்கப் பாலானது முறிந்து தெளிந்துப்போகும். இந்தத்தெளிவை செல்லத்தக்க அளவு எடுத்துக் கொள்ளவும்.

முன் சேர்த்து வைத்திருக்கிற இரண்டு சரக்குகளையும் கல்வத்திலிட்டு மேற்படி தெளிவைச் சிறுகச் சிறுக வார்த்து ஒருசாமமரைத்து ஒரு பங்கு தாளகக் கட்டிக்கு கவசஞ் செய்துலர்த்திப் பத்துப்பலம்

கிளிஞ்சில் நீரை ஒரு பானையிற் போட்டு, அதன்மேல் முன் தாளகக் கவசத்தை வைத்து, அதன்மேல் பத்துப்பலம் கிளிஞ்சில் நீறைப்போட்டுப் பானைவாய்க்கு மண்தாலமிட்டு ஏழுசீலைமண் செய்துலர்த்தி அடுப்பேற்றி இரண்டு சாமம் எரித்து எடுக்க தாளகமானது நீறி யிருக்கும்

இந்தத்தாளக நீற்றை செம்பையுருக்கி யுருக்கு முகத்தில் கொடுக்க, செம்பானது கட்டி சுத்தியாய் விடும்.

அயசமசமபு பஙகு - ௪, மேற்படி செம்பு பங்கு -௧. இவ்விரண்டையும் சேர்த்துருக்கித் தகடடித்துக் கொள்ளவேண்டும்.

மேற்படி தகட்டெடை நெல்லிக்காய்க் கெந்தகம். வீரம்-வ-எடை, இவ்விரண்டையுங் கல்வத்திலிட்டு உமிநீரைவிட்டு-௧-சாமமரைத்து அஞ்சு பங்காக்கி, ஒருபங்கை மேற்படி தகட்டிற் பூசியுலர்த்திப் புடமிட வேண்டும். ஆறின பின்னெடுத்து முன்போல முன் மருந்தைப்பூசி முன்போற் புடமிடவேண்டும். இவ்விதம் ஐந்து புடமிட்டெடுத்துக் கொள்க.

இந்தச் செம்பு பங்கு-௮, தங்கம் பங்கு-௧, இவ்விரண்டையும் சேர்த்துருக்க, எட்டுமாற்றுள்ள இரசவாதப் பொன்னாம். பா-ஙி-70-73.

## 100. இரசக்கட்டு.

(a) வங்கச் சுண்ணம் பங்கு-௧, (97-ம் நம்பரைப் பார்க்கவும்) கட்டினவீரம் பங்கு-௧, (98-ம் நம்பரில்

சொல்லியிருக்கிற சாரக்கட்டினல் வீரத்தைக் கட்டிக் கொள்ளவும்.) இவ்விரண்டையும் சேர்த்துப்பொடித்து உமிநீரைவிட்டு-க-சாமமரைத்து, ஒரு பங்கு துருசுக் கட்டியின்மீது கவசித்து வெயிலிலுலர்த்தி அகலில் வைத்து மேலகல்மூடி-ரு-சீலைமண் செய்துலர்த்திக் கவசத்தின் மூன்றுபங்கெடை விராட்டியிற் புடமிட்டாறினபின் னெடுக்கத் துருசு சுண்ணமாகியிருக்கும்.

இந்தத் துருசு சுன்னத்தால் இரசங் கட்டுப்படும். இது பலவகைப்படுமாகையால், சாவகாசங்கிடைக்கும்போது நமது சுகாதார போதினியில் எழுதிவருவோம்.

(b) சீனச்சுண்ணம் பங்கு-உ. (இதன் முறை நமது இரசவாத சிந்தாமணி முதற்பாகத்தில் வகை விபரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.) இதனை உமிநீரூற்குழைத்துச் சாரத்திற்குக் கவசித்துலர்த்தி சுண்ணம்பிற்குள் வைத்தெரிக்க, சாரங்கட்டுப்படும். இதனை நாகத்திற்கொடுக்க, நாகங்கட்டுப்படும். இந்த நாகத்திற்குச் சமன் தங்கஞ்சேர்த்து செந்தூரஞ்செய்ய, எல்லா வியாதிகளுக்குமாம், இரசவாதத்திற்குமாம்.

(c) அவயம் வைத்த கோழிமுட்டைத் தோல் பலம்-ச. உவர்மண் பலம்-ச, கிழிஞ்சிற சுண்ணாம்பு பலம்-ச, இவ்விரண்டையும்-உ-படி ஜலத்திற்கரைத்து, அதில் முட்டைத்தோலைப்போட்டுக் காய்ச்சிக் கழுவியெடுக்க, எண்ணெ நீங்கிச் சுத்தியாம்.

இந்த அண்டவோடு பங்கு-க, வங்கத்தூள் பங்கு-க, இவ்விரண்டையும் சேர்த்தரைத்து மூசையிலிட்டு சில்லிட்டுச் சீலைமண்செய்து உலையில் வைத்தூதி,

மூசையமுகின பின்னெடுத்து ஆறவிட்டெடுக்கச் சு ன்னமாகியிருக்கும்.

இந்தச் சுண்ணத்தை உமிநீராற்குழைத்து செம் புத்தகட்டிற் கவசஞ்செய்து ஓட்டிலிட்டு மேலோடு மூடி கவசஞ்செய்து புடம்போடவும். ஆறினபின் னெடுத்து முன்போல் வங்கச் சுண்ணத்தைப் பூசிமு ன்போற் புடம்போடவும், இவ்விதம் மடக்கி மடக்கி மூன்று புடமிட்டெடுக்க, களிம்பற்று சுத்தியாகும்.

வெள்ளி-8, மேற்படி செம்பு-உ, தங்கம்-க, இ ம்மூன்றையும் சேர்த்துருக்க, எழுமாற்றுள்ள இரச வாதப் பொன்னாகும், பா-133-134.

## 101. வங்க அயச் செம்பு.

சுத்திசெய்த அயபொடி, செம்பு, காரீயம் இம் மூன்றும் வகை-க-க்குப் பலம்-க.

இம்மூன்றையுங் குகையிலிட்டுருக்கி நன்றாயுரு கினபின் னெடுத்து ஆறவிட்டெடுத்து சர உலையில் வைத்து வெண்காரங் கொடுத்தூதி, வங்கத்தைப்போ க்கி யெடுத்துக்கொள்க. செம்பு சுத்தியாகியிருக்கும்.

இந்தச் செம்பிற்குச் சமனெடை தங்கத்தைச் சேர்த்துருக்கித் தகடடித்துக்கொள்க.

பாலரசம் பலம்-௨. கெந்தகம் பலம்-௨, இவ்வி ரண்டையும் தொந்தித்தரைத்து நன்றாய்க் கறுத்த பி ன்பு, உமிநீரைவிட்டு-உ-சாமநேர மரைத்து மூன்றுப ங்காகச்செய்து, ஒருபங்கைத் தகட்டின்மீது பூசி புலே ர்த்தி ஓட்டில்வைத்து மேலோடுமூடி-ரு-சீலைமண்செய்

துலர்த்திக் கவசத்தினைடைக்குப் பத்துப்பங்கு வரா ட்டியிற் புடமிட்டு ஆறினபின்னெடுத்து முன்மருந் தில் மற்றொரு பாகத்தைப்பூசி முன்போல் புடமிடவு ம். இவ்விதமே மூன்றும்பங்கையும் புடமிட்டெடுத் தால் கறுத்த வருணமுள்ளதாக விருக்கும்.

இவ்விதம் புடம்போட்டெடுத்த மருந்தினைடை க்குக் காற்பங்கெடை மிருதார்சிங்கியைச்சேர்த்து உ மிநீரைவிட்டு-உ-சாமநேரமரைத்துப் பில்லைசெய்துல ர்த்திக் கவசத்தின்-அ-பங்கெடை விராட்டியிற் புடமி ட்டெடுத்து, காற்பங்கெடை வெண்காரங்கூட்டி யுரு க்கி யெடுத்து இரண்டோடு ஊதியெடுக்கத் தங்கச்செ ம்பாகும்.

வெள்ளி-க0-மேற்படி தங்கச்செம்பு-ச, இவ்விர ண்டையும் பாகப்படி சேர்த்துருக்க, இரசவாதப் பொன்னாகும். பா-நி-156-158.

---

## (102. a) இலிங்க அயச் செம்பு.

கருவங்கம், அயஅரபொடி, செம்பு அரபொடி இம்மூன்றும் வகை-க-க்குப் பலம்-க. இம்மூன்றை யும் குகையிலிட்டு நன்றாயூதி யுருக்கி யெடுத்துக் கல் வத்திலிட்டுப் பொடித்து, அதனுடன் ஒரு பலம் இ லிங்கத்தைச் சேர்த்துப் பொடித்து, எலுமிச்சம்பழச் சாற்றைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு ஜாமமரை த்துப் பில்லைசெய்துலர்த்தி ஓட்டில்வைத்து மேலோடு மூடி மூன்றுசீலை மண்செய்துலர்த்தி கவசத்தின்நா லுபங்கிடை விராட்டியில் புடமிட்டு ஆறினபின் எடு த்துக் காற்பங்கிடை, வெண்காரத்தைக் சேர்த்துருக்

கி எடுத்து சர உலையில் வைத்து ஊதியெடுக்க களங்கமற்ற செம்பாகும்.

இந்தச்செம்பு நான்குபங்கு, தங்கம் ஒருபங்கு, இரண்டையும் சேர்த்துருக்கித் தகடடித்து வைத்துக் கொள்க

அரிதாரம், மகந்தகம், வீரம், இரசம், இந்நான்கும் வகை க-க்கு மேற்படி செம்பினிடைக்குக் காற்பங்கு, முதலில் கெந்தகத்தையும், இரசத்தையும், ஒத்தாந்தித்தரைத்துப் பிறகு மற்றிரண்டு சரக்குகளையும் சேர்த்துப் பொடித்து எருக்கம்பாலைச் சிறுகச் சிறுகவார்த்து இரண்டு ஜாமமரைத்து மேற்படி தகட்டில் பூசி யுலர்த்தி, ஓட்டில்வைத்து மேலோடுமூடி மூன்று சீலைமண்செய்துலர்த்திக் கவசத்தின் பத்துப்பங்கெடை விராட்டியிற் புடமிட்டு ஆறினபின் னெடுக்க நொறுங்கி கரியைப் போலிருக்கும்.

வெள்ளி-அ, மேற்படி பொடி-உ, இரண்டையும் சேர்த்துருக்கி ஓட்டில்வைத்து ஊதி சுத்தப்படுத்தி, இடைக்கிடை தங்கம்சேர்க்க, நல்ல இரசவாதப்பொன்னாகும். பா-கி-179-181,

---

## (102 b) கெந்திதார செந்தூரம்.

நெல்லிக்காய்க் கெந்தகம் பலம்-ச, வீரம் பலம்-க. இவ்விரண்டையுங் கல்வத்திற் பொடித்து, வெடியுப்புத் திராவகத்தைச் சிறுகச் சிறுக வார்த்து இரண்டு சாமமரைத்துப் பில்லை செய்துலர்த்தி ஓட்டிலிட்டு,மேலோடு மூடி-எ சீலைமண் செய்துலர்த்தி ஒரு குழியில்

நாலங்குல் மணலைப் பரப்பி அதன்மேல் கவசத்தைத் வைத்து அதன்மேல் நாலங்குல மணலைக் கொட்டிப்பரப்பிக் கவசத்தின்-சு-பங்கெடை விராட்டியிற் புடமிட்டாறினபின் எடுத்துக் கல்வத்திலிட்டுப் பொடித்து முன்போல் வெடியுப்புத் திராவகத்தைச் சிறுகச்சிறுகவிட்டு முன்போலரைத்து முன்போற் புடமிட்டு ஆறினபின்னெடுக்கக் கெந்தியானது வெளுத்துப்போயிருக்கும்.

இதனைக் கல்வத்திலிட்டு இதனுடன் ஒருபலம் கந்தகத்தையும் சுத்திசெய்த நாலுபலம் அரிதாரத்தையும் பொடித்து சேர்த்து, எருக்கம்பாலைச் சிறுகச் சிறுக வார்த்து நான்கு சாமமரைத்துப் பில்லைசெய்து வெயிலிலுலர்த்தி வைத்துக்கொள்க.

கிளிஞ்சிற் சுண்ணாம்பு படி-க, வெண்காரம் பலம்-சு, நவச்சாரம் பலம்-சு, இவ்விரண்டையும் பொடித்து வைத்துக்கொள்க. அரைப்படி சுண்ணாம்பையொரு பானையிற் பரப்பி, அதன்மேல் இரண்டு பலம் வெண்காரப் பொடியைப் பரப்பி அதன்மேல், இரண்டுபலம் நவச்சாரப் பொடியைப் பரப்பி, அதன்மேல் முன் சித்தப்படுத்தி வைத்திருக்கிற பில்லையை வைத்து, அதன்மேல் இரண்டு பலம் நவச்சாரப் பொடியைப்பரப்பி, அதன்மேல் இரண்டு பலம் வெண்காரப் பொடியைப் பரப்பி, அதன்மேல் அரைப்படி சுண்ணாம்பு நீற்றைக்கொட்டி யழுத்தி விட்டு, பானைவாயை மண்காலத்தால் மூடி மூன்று சீலைமண் செய்து, அடுப்பேற்றிக் கமலாக்கினியாக -உ- சாமம் எரித்து ஆறவிட்டெடுக்க, செந்தூரமாகி யிருக்கும்.

செம்பு பங்கு-உ, மேற்படி செந்தூரம் பங்கு-க, செம்பை யுருக்கி, உருக்கு முகத்திற் கொடுத்து ஆறி னபின் னெடுத்து சர உலையில் வைத்தூதி யெடுக்க, செம்பு சுத்தியாகி விடும்.

வெள்ளி - அ - மேற்படி செம்பு-உ-இரண்டை யும் சேர்த்துருக்கி யூதிச்சுத்திசெய்து, சமனெடை தங்கத்தைச் சேர்த்துருக்க, இரசவாதப் பொன்னு க்கும்.

மேற்படி செந்தூரத்தில் ஒரு குன்றிமணியெ டையைத் தேனில் அல்லது நெய்யில் அநுபானித்து ண்டுவர, க்ஷயம், காசம், எலிகடி, ஈளை, மேகவகைகள், குன்மவகைகள், வாதரோகங்கள், சூலைரோகங்கள், கிராணிவகைகள், கன்னப்புற்று, பிடிப்புரோகம் ஆகி யவைகள் தீரும். பா-கி-182-184.

---

## 103. அயச்செம்பு.

சுத்திசெய்த அய அரபொடி, தாம்பிர அரபொ டி, நெல்லிக்காய் கெந்தகம், வீரம், வெண்காரம், இ வை வகை-க-க்கு பலம்-க, இவைகளைக் கல்வத்திலிட் டுப் பொடித்து எலுமிச்சம் பழச்சாற்றைச் சிறுகச் சி றுகவார்த்து-ச-சாமமரைத்துப் பில்லைசெய் துலர்த்தி க் கெஜபுடமிட்டாறினபின் னெடுத்து ஒருபலம் கரு வங்கப்பொடியைச்சேர்த்துப் பழச்சாற்றைவிட்டு-உ- சாமநேரமரைத்துப் பில்லைசெய் துலர்த்தி ஓட்டில்வை த்து மேலோடுமூடி-ரு-சீலைமண்செய் துலர்த்திக் கவசத் தின்-௱ய-பங்கெடை வராட்டியிற் புடமிட்டாறினபி ன்னெடுத்து, காற்பங்கெடை வெண்காரத்தைப் பொ

ரித்துச்சேர்த்து உருக்கியெடுக்க, மணிமணியாக இறங்கும். இவைகளையெடுத்து சரவுலையில்வைத்து ஊதி சுத்தப்படுத்த, களங்கற்ற செம்பாகும்

வெள்ளி-அ, மேற்படி செம்பு-உ, இவ்விரண்டையும் சேர்த்துருக்கி, ஊதியெடுத்து, எடைக்கெடை தங்கத்தைச்சேர்க்க, உள்ளதுபோல இரசவாதப் பொன்னாகும்.

---

## 101. நொறுக்கு வெள்ளி.

நல்ல வெள்ளி பங்கு - 1. கீழ்க்கண்டபடி சுத்தி செய்த செம்பு பங்கு-க, நெல்லிக்காய் கெந்தகம் பங்கு - உ. நெல்லிக்காய் கெந்தகத்தைக் கல்வத்திலிட்டுப் பொடித்துவைத்துக் கொள்ளவும்.

வெள்ளியையும் செம்பையும் சேர்த்துருக்கி, யுருக்குமுகத்தில் கெந்தகத்தைச் சிறுகச் சிறுக கிராசித்து கெந்தகமெல்லாம் சென்றபின்பு எடுக்க, வெள்ளியானது கருப்புநிறமுள்ளதாய் வெட்டையாகி யிருக்கும், இதனை யோட்டில்வைத்து நன்ருய் ஊதியெடுத்து இதற்குச் சமனெடை கருவங்கத்தைச் சேர்த்துருக்கி ஓட்டில்வைத்து வங்கம்போக ஊதியெடுத்துக் கொள்வதே நொறுக்கு வெள்ளியாம். இவ்விதம் செய்யப்பட்ட வெள்ளியைத்தான் முன் சொல்லியிருக்கிற பாகங்களில் நொறுக்கு வெள்ளி என்னுமிடத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

(க) செம்புத்தகடு விராகனெடை - ரு. நெல்லிக்காய் கெந்தகம் விராகனெடை - ரு, கெந்தகத்தைப்

பொடித்து செம்புத் தகட்டுக்குக் கீழ்மேலிட்டு ஓட்டில் வைத்து சீலைமண்செய்து உலர்த்திக் கவசத்தின் எட்டுப் பங்கெடை விராட்டியில் புடமிட்டு ஆறின பின் எடுத்து மூசையிலிட்டுருக்கச் செம்பாகும். பிறகு தகடடித்து முன்போல் கெந்தகத்தைக் கீழ்மேலிட்டுப் புடத்தைப்போட்டுருக்கி யெடுக்கவும். இவ்விதம் மடக்கி மடக்கி-௬ (அ)-தடவைகள் செய்து உருக்கி யெடுத்து முடிவாக ஓட்டில்வைத்து செம்மையாக ஊதி எடுக்க, களிம்பற்று சுத்தியான செம்பாகும்.

மேற்படி நொறுக்குவெள்ளி பங்கு-க, மேற்படி கெந்திச் செம்புபங்கு-க, இவ்விரண்டையும் சேர்த்துருக்கி ஊதியெடுத்துப் பிறகு ஓமத்தில்வைத்து ஊதியெடுத்து, எடைக்கெடை தங்கம்சேர்க்க, இரசவாதப் பொன்னாகும். புடமிட்டால் தங்கமிறங்கும்.

(b) மேற்படி நொறுக்கு வெள்ளி பங்கு-க, மேற்படி செம்பு பங்கு-க, இவ்விரண்டையும் சேர்த்து ஊதி இரண்டிற்கொன்று தங்கம்சேர்த்து உருக்கி இரண்டோடு ஊதியெடுக்க இரசவாதப் பொன்னாகும்.

(c) வெள்ளி-அ, மேற்படி செம்பு-உ, இவ்விரண்டையுமசேர்த்துருக்கி யூதியெடுத்து-உ-பங்கு தங்கத்தைச்சேர்த்து இரண்டோடு ஊதியெடுக்க, ஏழுமாற்றுள்ள இரசவாதப் பொன்னாகும். பா-122-126.

## குறிப்பு.

இக்கிரந்தத்தில் அனேகபாகங்களுடன் நொறுக்கு வெள்ளியைச் சேர்க்கும்படியாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால், நமக்கு அனுபவசித்தமான

ஒரு முறையை நமது அபிமானிகளின் உபயோகத்திற்காக இங்கெழுதுவகம். அம்முறை பின்வருகிற விதமாம்.

---

## கோறுக்கு வெள்ளி (வேறு.)

நெல்லிக்காய் கெந்தகம் பலம்-ச, வெடியுப்பு பலம்-க, இவ்விரண்டையும் கல்வத்திலிட்டுப் பொடித்து, ஐவிரலி அல்லது பாம்புக் கோவையென்னும் இலையின் சாற்றைவிட்டு-ச-சாமமரைக் தூலர்த்திப் பொடித்துப் பீங்கான் டப்பியில் எடுத்து வைத்துக்கொள்ளவேண்டும். பின்பு நல்லவெள்ளி பங்கு-க, சுத்தியான தாம்பிரம் பங்கு-க. ஷை பொடிபங்கு-உ-முன்னிரண்டு உலோகங்களையும் சேர்த்துருக்கி, உருக்குமுகத்தில் மேற்படி பொடியைச் சிறுகச் சிறுகக் கிராசித்து, பொடியெல்லாம் சென்றபின்பு நன்றாயுருக்கிக் கோலாடி யெடுத்து ஆறவைக்கவும். குளிர ஆறினபின்பு எடுத்தால் கருமையான கட்டியாயிருக்கும். அதனை யுடைத்தால் வெள்ளியானது வருணமேறித்தனியா யிருக்கும்.

இம்முறைப்படியும் செய்து முன் பாகங்களிற் சொல்லி யிருக்கிறபடி சேர்த்துக் கொள்ளலாம்.

---

## விண்ணப்பம்.

சகோதரர்களே! இந்நூலில் சொல்லப்பட்டிருக்கும் வைத்திய முறைகள் சிரேஷ்டமானவைகளெனினும் இதிற் சொல்லப்பட்டிருக்கும் இரசவாத முறை

கள் அதிசிரேஷ்டமானவைகள் என்பது இத்தொழி லில் அனுபவசாலிகளானவர்களுக்குத் தெரிந்த விஷயம். இம்முறைகளெல்லாம் இலகுவாய்க் கிடைக்கக் கூடிய கடைச்சரக்குகளின் சம்பந்தமாயுள்ளவைகளான படியாலும், இவை, புத்தி, யுத்தி அநுபவம் முதலியவைகளுக்கு ஒத்தவைகளான படியாலும், இலகுவாகச் செய்யக் கூடியவைகளான படியாலும், இரசவாதத் தொழிலிற்கு இதுவே முதநூலென்று சொல்லத் தடையுமுண்டோ. இத்தொழிலில் சிறிது அனுபவமுள்ளவர்கள் ஒருவர் உதவியின்றித் தாம் தாமே செய்துகொள்ளக் கூடும். இதிலுள்ள முறைகளுள் பல அனுபவத்திற் சித்தி யடையப் பெற்றவைகள். ஆனால் ஒருவர்க் கனுபவமானது மற்றவர்களுக் கவ்வளவு இலகுவாக அனுபவத்தில் வந்து விடுமெனச் சொல்ல ஏதுவில்லை. ஆகையால், இவை சம்பந்தமான எல்லா விபரங்களையும் வகைவிபரமாக நமது அபிமானிகளுக்கும் மற்றவர்களுக்கும் உபயோகமாகும்படி நமது "சுகாதார போதினி" யில் எழுதி வருவோம். மேலும் நமது நண்பர்களுள் சிலர் இதிலுள்ள பாகங்களுள் ஒவ்வொன்றையும் ஒன்றன் பின்னொன்றாகச் செய்து அதன் மர்மங்களை யெல்லாம் மேற்படி பத்திரிகை மூலமாக வெளியிட உத்தேசித்திருக்கின்றனர். இதனால் இரசவாதம் மெய் அல்லது பொய் என்னும் சந்தேகத்தை நிவர்த்திசெய்து கொள்ள ஏதுவாவதுடன், வழிதுறையின்றி வீணாகத் தம்மாயுளையும், கஷ்டப்பட்டு சம்பாதித்த பொருளையும் அவமே செலவு செய்து ஏமாந்து போகாமல் தப்பித்துக் கொள்ளவும், வேஷதாரிகளான பொய் வாதிகளினின்று தப்பித்

துக் கொள்ளவும் பெருத்த ஏதுவாகும். ஆகையால், இத்தொழிலிற் பிரியமுள்ளவர்கள் இக்கிரந்தத்தை வாங்குவதுடன் மேற்கண்ட சுகாதார போதினியையும் வாங்கி வருவதால் எல்லாவித சுகிர்தங்களு முண்டாமென்பதே நமது கோரிக்கையும் முழு நம்பிக்கையுமாம்.

## சுகாதார போதினியின்

# விளம்பரம்.

இப்பெயர்பூண்ட பத்திரிகையானது நம்மால் சென்ற இரண்டு வருஷகாலமாக நடைபெற்றுவருகிறது. இதில் வைத்திய சம்பந்தமான பல அரியவிஷயங்களே யெழுதப்படும். இது மாதம் இருமுறையாக வெளிவரும். இதில் சுகாதாரக் குறிப்புகள், வைத்தியப்பொது விஷயங்கள், ஸ்திரீவைத்தியம், பாலவைத்தியம், பற்பல பிரபலவியாதிகளின் பூரண இலட்சணம் முதலியவைகள், நானாவித யூகாதி, ஹிந்து உசிதமுறைகள், பற்ப செந்தூரவகைகள், வைத்திய சம்பந்தமான வினாவிடை, ஜீவனோபாயத்திற் கேதுவாகும் பற்பல விஷயங்கள், நானாவித நூதன வர்த்தமானங்கள் எனப்பத்துவகைப் பிரிவுகள் உள்ளவைகளாக எழுதப்படும். இது ஒவ்வொருவரும் தருவித்துப் பார்க்கத் தக்கதே.

இன்னும் இதில் சமயம்வாய்க்கும் போதெல்லாம் கௌமார சிந்தாமணி, அமிர்தசாகரம், இரசபஞ்

சரி, போகரத்னாகரம் ஆகிய சமஸ்கிருத யூகராதி முத லிய கிரந்தங்களையும் மொழிபெயர்த்தெழுதப்படும். இதுவரையில் வெளிப்படாத பல கிரந்தங்கள் நமதி டமுள்ளது. அவைகளையும் ஒன்றன் பின்னொன்றாக வெளிப்படுத்தப்படும்.

கனவான்களே! இப்பத்திரிகை ஆண், பெண், பாலர், விருத்தர், வைத்தியர், வைத்திய ரல்லாதவர்கள் ஆகிய யாவருக்கும் பிரயோஜனப்படு மென்பதிற் சந்தேகமில்லை, தன் சுகாதாரத்தையும் ஆயுள் விருத்தியையும் விரும்பும் ஒவ்வொருவரிடமும் இது கட்டாயம் இருக்கவேண்டியது ஆவசியகம், இவ்விளம்பரத்தைக் கண்ணுற்றுத் தங்கள்பெயரைத் தெரிவித்தால் மாதிரியாகவும் இனமாகவும் ஒருபத்திரிகை யனுப்பப்படும். ஒருதரம் இதனைவாசித்துப் பாருங்கள். ஜீவகாருண்யமுள்ள தங்களுக்கு அது லோகோபகாரமாமெனத் தோற்றினால்; அதற்கேற்படுத்தப்பட்டிருக்கும் சந்தாவை முன் பணமாயனுப்பி உதவிசெய்து ஆதரித்துவரின், நமக்கு உற்சாகமுண்டாகி, மேன்மேலும் அபூர்வமுறைகளையும் இரகசிய முறைகளையும், உசித முறைகளையும் லோகோபகாரமாக எழுத மனம் வரும். அப்போது அதன் அருமை, பெருமைகளெல்லாம் தங்களுக்கு நன்கு புலப்பட்டு, புண்ணியம், புகழ் முதலியவைகளையும் நோயற்ற வாழ்வையும், ஆயுள் விருத்தியையும் எல்லோரும் பெற்று வச்சிரதேகிகளாய்ச் சுகமேவாழ ஏதுவாமென்பது திண்ணம்.



| | |
|---|---|
| இந்தியாவுக்கு தபால்கூலி உட்பட வருஷம்-1-க்கு | 2-0-0 |
| ,, ஆறு மாதத்திற்கு | 1-4-0 |
| ,, மூன்று மாதத்திற்கு | 0-12-0 |
| ,, ஒரு மாதத்திற்கு | 0-5-0 |
| இலங்கை, பர்மா முதலிய விடங்களுக்கு வருஷம் - 1 - க்கு முன்பணம் | 2-0-0 |
| மோரீஸ், சிங்கப்பூர் மற்றப் புறதேசங்களுக்கு வருஷம்-1-க்கு முன்பணம் | 3-0-0 |
| ஒரு புதிய காப்பியின் விலை | 0-2-0 |
| ,, பத்திரிகைகள் ஒவ்வொன்றின் கிரயம் | 0-5-0 |

மீது மிகுந்திருந்தால் மாத்திரம் கிடைக்கும்.

தயவுடன் தங்கள் சிநேகிதர்களுக்கும் இதை வாசிக்கக் கொடுக்கவும்.

ஹக்கீம் பா -அப்துல்லா முகம்மது.